திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து வெளியீடு

உ

செந்திலாண்டவன் துணை

திருச்சிற்றம்பலம்

கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள்

அருளிச்செய்த

# கந்த புராணம்

[ யுத்த, தேவ காண்டங்கள் ]

✱

திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்துத் தலைவர்

ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்

அவர்களுடைய ஆணையின் வண்ணம்

✱

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஜூனியர்

வித்துவான் ஸ்ரீமத் மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள்

அவர்களால் வெளியிடப்பெற்றது

✱

தணிகை மணி

இராவ்பகதூர் வ. சு. செங்கல்வராய பிள்ளை, M.A., அவர்கள்

எழுதிய சிற்றாராய்ச்சியுடன்

கூடியது.

✱

பதிப்பாசிரியர்

வித்வான் தி. பட்டுச்சாமி ஓதுவார் அவர்கள்

திருச்சிராப்பள்ளி

[ நந்தன - பங்குனித் திங்கள் 16-ம் நாள் ]

✱



[ மார்ச்சு—1953

உ

சிவ சிவ

## கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள்

## துதி

---

"போதமுறு சூதமுனி புகன்ற காந்தப்
புகழ்க்கடலிற் படிந்ததன்கட் பொருளா தான

மேதகுவண் புனலருந்தி வையமுய்ய
வெய்யதுயர்ப் பிறவியெனும் வெம்மை தீரத்

தாதவிழ்பூம் பொழிற்காஞ்சிக் குவட்டி லேறிச்
சலதியமு தினைநிகர்செந் தமிழா தான

காதன்மழை பொழிந்தஅருட் கொண்ட லான
கச்சியப்பன் இருபாதம் உச்சி வைப்பாம்"

- கந்தபுராணச் சுருக்கம்.

உ

செந்திலாண்டவன் துணை

# பதிப்புரை

—o—

போக்கும் வரவும் இரவும் பகலும் புறம்புமுள்ளும்
வாக்கும் வடிவும் முடிவுமில் லாதொன்று வந்துவந்து
தாக்கும் மனோலயந் தானே தருமெனைத் தன்வசத்தே
ஆக்கும் அறுமுக வா!சொல் லொணாதிந்த ஆனந்தமே.

— **கந்தர் அலங்காரம்**

**ஸ்ரீ** முருகப்பெருமானின் கருணைப் பெருவெள்ளத்தினை உலக மக்கள் எளிதிற் பெற்றுய்யுமாறு வாரி வாரி வழங்குவதும், பக்திச் சுவை நனி சொட்டச் சொட்ட அமைதியான ஆற்று நீரோட்டம் போன்று செந்தமிழ் நடையில் திகழ்வதும், பிற்கால இலக்கியங்களில் மிகச் சிறப்புற்று விளங்குவதும் மெய்யடியார்களால் நாடோறும் பக்தியுடன் பாராயணம் செய்யப் பெறுவதுமாகிய **ஸ்ரீ கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள்** இயற்றிய **கந்தபுராணம்** சைவ புராணங்களில் சிறந்த தொன்றாம்.

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தில் அருளாட்சியுடன் எழுந்தருளியிருக்கும் **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான சுவாமிகள் அவர்கள்** ஸ்ரீ முருகப்பெருமானிடத்துக் கொண்டுள்ள அன்பின் பெருக்கினாலும், சைவ நன்மக்கள்பால் பூண்டருளிய அருள்நோக்கத்தாலும், முருகக்கடவுளின் அருட்புகழினை எடுத்துக்காட்டும் இக் கந்த புராணம் முழுமையும் வெளியிட்டுதவ முன் வந்துள்ளார்கள். ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் ஆணையிட்டருளிய வண்ணம் சென்ற கந்த சஷ்டி வெளியீடாக வந்துள்ள கந்த புராணம் (முதல் மூன்று காண்டங்கள்) முற் பகுதியின் பின் தொடர்ச்சியாகக் **கந்த புராணம் இரண்டாம் பகுதி (யுத்த, தேவ காண்டங்கள்) நந்தன ஆண்டு பங்குனித் திங்கள் உத்திரநன்னாளாகிய இன்று ஸ்ரீகாசிமடத்து வெளியீடாக** வெளிவருகின்றது.

சைவ நன்மக்களைத் திருவருள் நெறியில் நிறுத்தி அவர்கள் நல்வாழ்வு பெற்றுய்யுமாறு நாளும் பேரருள் பாலித்து வரும் **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களுக்கும்**, அவர்கள் அருள்வழி நின்று அறம்பல வளர்க்கும் ஸ்ரீ காசிமடத்து **இளவரசு ஸ்ரீமத் சுவாமிகள் அவர்களுக்கும்** இவ் வையகம் என்றும் நன்றி செலுத்தும் கடப்பாடுடையதாகும்.

இவ்வெளியீடு முந்திய பகுதியைப்போன்றே யாழ்ப்பாணத்து நல்லூர் **ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆறுமுக நாவலர்** அவர்கள் பதிப்பு, திருவோத்தூர் **திரு. ம. தி. பானுகவி** அவர்களின் பதிப்பு முதலியவற்றை அடிப்படையாகக் கொண்டு பதிப்பிக்கப் பெற்றதாகும். யாவரும் எளிதில் பொருளுணர்ந்து படித்தற்கு ஏற்றவாறு செய்யுட்கள் சீர்பிரித்தும் ஓசை கெடாத வண்ணம் சிற்சில இடங்களில் பதங்களைப் பிரித்துக் காட்டியும் அமைக்கப்பெற்றுள்ளன. சென்னை **தணிகைமணி திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளை** M. A., அவர்கள் எழுதியுள்ள கந்தபுராணச் சிற்றாராய்ச்சியும் சேர்க்கப்பெற்றுள்ளது. செய்யுள் முதற்குறிப்பு அகராதி ஒன்றும் புதுவதாக அமைத்து இணைக்கப்பெற்றுள்ளது.

இந்நூல் நன்முறையில் வெளிவருதற்கு உறுதுணை புரிந்தருளிய திருப்பனந்தாள் செந்தமிழ்க்கல்லூரி, பிரின்ஸிபால் **உயர்திரு. வித்துவான் கே. எம். வேங்கடராமையா** M. A., B. O L. அவர்களுக்கும், இந்நூலின் செய்யுள் முதற்குறிப்பு அகராதியினை அமைத்து உதவிய என் நண்பர் **வித்துவான் திரு. கோ. இரத்தினம் பிள்ளை** அவர்கட்கும், கந்தபுராணச் சிற்றாராய்ச்சியினை எழுதி உதவிய தணிகைமணி **திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளை** M. A., அவர்கட்கும் என் நன்றி என்றும் உரியதாகும்.

சைவத்துடன் தமிழினையும் தம் கண்களேபோல் போற்றி அறம் பல வளர்த்தருளும் **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களும்**, அவர்கள் அருள்வழி நின்றொழுகும் **ஸ்ரீமத் வித்துவான் மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள் அவர்களும்** அடியவனை இச்சீரிய சிவ புண்ணியத் தொண்டில் ஈடுபடுத்திய பேரருள்திறத்தினைப் பெரிதும் போற்றி அவர்கள் பொன்னார் திருவடிக் கமலங்களை அடியவன் என்றும் வந்தித்து வழிபடுகின்றேன்.

வரகநகர்
திருச்சிராப்பள்ளி
29—8—1952

இங்ஙனம்,

**தி. பட்டுச்சாமி ஓதுவார்**

உ
செந்திலாண்டவன் துணை

# முகவுரை

— 0 —

முருகன் குமரன் குகனென் றுமொழிந்(து)
உருகும் செயல்தந்(து) உணர்வென் றருள்வாய் ?
பொருபுங் கவரும் புவியும் பரவும்
குருபுங் கவ! எண் குணபஞ் சரனே!

—கந்தரநுபூதி

**ஸ்ரீ** முருகக் கடவுளின் அருட்டிறங்களை யெல்லாம் **அங்கை நெல்லிக்** கனியென அழகுற எடுத்துரைக்கும் நூல் **கந்தபுராணம்** ஆகும். இது **கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகளால்** அருளிச் செய்யப் பெற்றது; நவில் தொறும் நவில்தொறும் நூல்நயம் பயப்பது, பயில்தொறும் பயில் தொறும் பக்தி ஞானத்தை விளைவிப்பது இந் நூலின் முற்பகுதி (முதல் மூன்று காண்டங்கள்) திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்தின் வெளியீடாக வெளிவந்துளது. அதனை அடுத்துள்ள யுத்த தேவ காண்டங்களைக் கொண்டது இவ்விரண்டாம் பகுதி. இது **நந்தன ஆண்டு பங்குனி உத்திர நன்னாளாகிய இன்று திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து வெளியீடாக** வெளிவருகின்றது.

தெய்வத் திருமுறைகளும் சைவ புராணங்களும் ஏனைய தமிழ் நூல்களும் வெளியிட்டருளியவர்களும், சைவ நன் மக்களிடையே அவை நன்கு பரவி யாண்டும் செந்நெறியாம் சிவ நெறி தழைத்தோங் கச் செய்பவர்களும், அருட்பெருங் கருணையாளர்களுமாகிய எங்கள் தலைவர் **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள்**, ஸ்ரீ கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் அவர்களின் நினைவாக ரூ.7000/- மூலதனத்தில் ஒரு அன்ன தானக் கட்டளை ஏற்படுத்தியுள்ளார். இத் தருமத்தின்படிக்குச் சிவ வேதியர்களுக்கும் மற்றுமுள்ள சிவனடியார்களுக்கும் காஞ்சிபுரத் தில் ஆண்டுதோறும் மாசித் திங்கள் மிருக சீரிட நாளில் அன்னம் பாலிக்கப்பெறும். அதன் விவரம் பிற்சேர்விற் காணலாம்.

ஸ்ரீ முருகப் பெருமானிடத்துப் பூண்ட இடையறா அன்பினால் **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள்** கந்த புராணம் முழுமையும் வெளி யிடுமாறு ஆணையிட்டருளியுள்ளார்கள். அவர்கட்குச் சைவ உலகம் என்றும் நன்றி செலுத்துங் கடப்பாடுடையது.

இவ் வெளியீட்டினைச் செவ்விய முறையில் பதிப்பித்த திருச்சி வித்துவான் திரு. தி பட்டுச்சாமி ஓதுவார் அவர்களுக்கும், ஒப்புநோக்குதல் முதலிய பணிகள் புரிந்த பனைச் செந்தமிழ்க்கல்லூரி பிரின்ஸிபால் வித்துவான் திரு. கே. எம். வேங்கடராமையா M.A., B.O.L. அவர்களுக்கும், சிற்றாராய்ச்சி எழுதிய தணிகைமணி திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளை M A, அவர்களுக்கும் செந்திலாண்டவன் திருவருள் முன்னிற்க.

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்துத் தலைவர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள் நந்தித் தம்பிரான் சுவாமிகள் இந்நூலை வெளியிடும் பணியை அடியேற்கு அளித்தார்கள். இப்பெருங்கருணைத் திறத்தினைப் போற்றித் துதித்து அவர்கள் பொன்னார் திருவடி மலர்களை வந்தித்து வழிபடுகின்றேன்.

ஸ்ரீ காசிமடம்
திருப்பனந்தாள்
நந்தன பங்குனி, 16

இங்ஙனம்,
வித்துவான் மகாலிங்கத் தம்பிரான்
இளவரசு.

உ

செந்திலாண்டவன் துணை

# உள்ளுறை





உ

சிவ சிவ

# வாழ்த்து

— o —

"ஆறிரு தடந்தோள் வாழ்க;
அறுமுகம் வாழ்க; வெற்பைக்

கூறுசெய் தனிவேல் வாழ்க;
குக்குடம் வாழ்க; செவ்வேள்

ஏறிய மஞ்ஞை வாழ்க;
யானைதன் அணங்கு வாழ்க;

மாறிலா வள்ளி வாழ்க;
வாழ்கசீர் அடியார் எல்லாம்"

— கந்தபுராணம்.

உ

செந்திலாண்டவன் துணை

திருச்சிற்றம்பலம்

# கந்தபுராணம்

—oo—

## நான்காவது

# யுத்த காண்டம்



## 1. ஏமகூடப் படலம்

—oo—

நாரண னென்னுந் தேவும் நான்முகத் தவனும் முக்கட்
பூரணன் தானு மாகிப் புவிபடைத் தளித்து மாற்றி
ஆரண முடிவுந் தேரு அநாதியாய் உயிர்கட் கெல்லாம்
காரண னாய மேலோன் கழலிணை கருத்துள் வைப்பாம். 1

திண்ணிய அவுணர் தம்மைச் செற்றிட இன்னே செவ்வேற்
பண்ணவன் ஏகும் எல்லா அமரரும் பாங்கிற் செல்வர்
துண்ணென யானும் ஏகா தொழிவது சூழ்வன் றென்னா
எண்ணிவந் திடுவான் போல **இரவிவந் துதயஞ் செய்தான்.** 2

இரவிவந் துதய வெற்பின் எய்திய காலை தன்னின்
அரியணை மிசையே வைகும் அறுமுகங் கொண்ட அண்ணல்
பிரமன்மால் மகவான் தேவர் முனிவரர் பிறருங் கேட்ப
வரமிகு சிறப்பின் **வீர வாகுவை** நோக்கிச் சொல்வான். 3

பாவமே பயிலுஞ் சூர பன்மனும் அவுண ரானோர்
ஏவரும் முடிவா ராக இமையவர் இடும்பை நீங்க
மாவியல் கின்ற **வீர மகேந்திர புரத்துக்** கின்னே
போவது புரிது நந்தேர் பொள்ளெனக் கொணர்தி என்றான். 4

வள்ளல்மற் றிதனைச் செப்ப மாலயன் மகவா னாதி
உள்ளபண் ணவர்கள் கேளா உவகையங் கடலின் மூழ்கித்
தெள்ளிதின் எமது துன்பந் தீர்ந்தது தீர்ந்த தென்னாத்
துள்ளினர் ஆடிப் பாடி அவனடி சூட லுற்றார். 5

ஆயது காலை தன்னின் அரும்பெருங் கயிலை போற்றும்
நாயக நந்தி அண்ணல் நற்கணத் தலைமை பூண்டோன்

சேயதோர் மனவே கப்பொற் றேரொடு வலவன் தன்னைக்
கூயினன் கொண்டு வல்லே குமரவேள் முன்னர் உய்த்தான். 6

முன்னுற மருத்தன் தூண்டு முரண்டகு தடந்தேர் நண்ண
அன்னதை அருளின் நோக்கி அறுமுகம் படைத்த அண்ணல்
பன்னெடுஞ் சீயந் தாங்கும் பைம்பொனின் தவிசு தன்னின்
மன்னினன் இருத்தல் நீங்கி எழுந்தனன் மறைகள் போற்ற. 7

மாறில்பொன் சுடரும் மேரு வரைமிசை இருமூ வெய்யோர்
வேறிலா தொருபாற் பட்டு விளங்கிவந் தீவரு மாபோல்
ஆறுமா முகத்தெம் மையன் அனையதொல் இரத மீக்கண்
ஏறினன் ஏறிச் சூழ்வோர்க் கினையதொன் றியம்பு கின்றான். 8

வார்திரை அளக்கர் நாப்பண் வரம்பிலா அளவைத் தாகிச்
சீர்திகழ் மகேந்தி ரப்பேர்த் திருநகர் முன்னர் ஏகிச்
சூர்தனை அடுவான் போதுந் துண்ணென நீவிர் நுந்தம்
ஊர்திகள் தம்மில் மேவி ஊர்ந்திவண் வருதி ரென்றான். 9

இப்படி முகமா றுள்ள எம்பிரான் இசைத்த லோடும்
அப்பணி இமையா வேதன் அன்னத்தும் ஆழி மேலோன்
ஒப்பரும் உவண மீதும் உம்பர்கோன் மான மீதுஞ்
செப்புறும் ஏனை விண்ணோர் தத்தமூர் தியினுஞ் சேர்ந்தார். 10

அந்தமில் இலக்கத் தோரும் அவரலா எண்மர் தாமும்
மந்தரம் உறழும் வீர வாகுவாம் வன்மை யோனும்
எந்திர வயமான் தேரின் வீற்றுவீற் றேறி யார்க்குஞ்
சிந்தையி னாலும் எட்டாத் தேவர்க டேவற் சூழ்ந்தார். 11

சுப்பிரன் மேக மாலி சுவேதசீ ரிடன்க பாலி
அப்பிர சித்துச் சித்தி ராங்கனே சுவால தாலு
ஒப்பில்வச் சிரனே வீமன் உக்கிரன் உக்கி ரேசன்
பிப்பிலன் நந்தி சேனன் பிரமசன் பிரம சேனன். 12

பதுமனே கராளன் தண்டன் பத்திரன பரிக நேமி
உதவகன் புட்ப தந்தன் உருத்திரா காரன் வீரன்
மதிசயன் கேது மாலி வக்கிரன் பிரம கேசன்
அதிபதி கலிங்கன் கோரன் அச்சுதன் அசலன் சாந்தன். 13

சித்திர சேனன் பூரி சுசீலன்மா சயனே சிங்கன்
உத்தர மடங்கற் பேரோன் உபதிட்டன் சயனே ஈசன்
மத்தகன் மதங்கன் சண்டி மகாபலன் சுவேதன் நீல
பத்திரன் சுவாகு அண்டா பரணனே காக பாதன். 14

பிங்கலன் சமானன் மாயன் பிறங்கிய நிகும்பன் கும்பன்
சங்கபா லன்வி சாகன் சதநாவன் அயக்கி ரீவன்
அங்கையா யிரத்தன் செங்கண் அயுதத்தன் அனந்தன் வாமன்
மங்கல கேசன் சோமன் வச்சிர மாலி சண்டன். 15

அசமுகன் சரபன் குந்தன் ஆடகன் கவந்தன் மேகன்
விசயன்வித் துருமன் தண்டி வியாக்கிரன் கால பாசன்
தசமுகன் குமுதன் பானு தனஞ்சயன் இடப ரூபன்
சுசிமுகன் அனல கேசன் சுபத்திரன் கேது மோகன். 16

மத்தனுன் மத்தன் நந்தி மனோபவன் வாயு வேகன்
பத்துநூ றடிகள் பெற்றோன் பானுகம் பன்ப தங்கன்
சுத்தனே அனிகன் சீதன் சுஜாதனே சுமாலி மாலி
அத்திரி அவுணர் கூற்றன் அரிகேசன் சுவால கேசன். 17

இங்கிவர் பூத வெள்ளத் திறையவர் ஒருநூற் றெண்மர்
பொங்குவெஞ் சினத்தர் எல்லாப் புவனமும் அடவென் றாலும்
அங்கொரு நொடிப்பின் முன்னர் அடுபவர் ஆடல் மிக்கோர்
சங்கையில் வலியோர் யாருஞ் சண்முகத் தவனைச் சூழ்ந்தார். 18

ஏயெனப் பகரும் முன்னம் இவ்வகை எவருஞ் செவ்வேற்
சேயினைச் சூழ்த லோடுஞ் செய்கைமற் றதனைக் காணூஉ
மாயிருட் பரவை ஞாலம் வரைக்குலம் பனிப்ப ஆர்த்திட்
டாயிரத் திரட்டி வெள்ளத் தனிகமும் எழுந்த அன்றே. 19

எழுந்தன அனிக வெள்ளம் ஈண்டிய எங்கும் விண்ணோர்
பொழிந்தனர் பூவின் மாரி பூதர்தந் தெழிப்பு விண்ணும்
ஒழிந்திடு திசையும் பாரும் உற்றன உலைந்த தாழி
அழிந்தன கருவி வானம் அண்டம்நெக் குடைந்த மாதோ. 20

கல்லென இரங்கு பேரி கரடிகை துடியே காளஞ்
சல்லரி திமிலை தக்கை தண்ணுமை படகங் கோடு
வல்லியல் உடுக்கை சங்கம் வான்குட முழவ மாதிப்
பல்லியம் அனந்த கோடி பாரிடம் இயம்பிச் சென்ற. 21

கள்ளலம் புற்ற தண்டார் கவினிய மொய்ம்பிற் பூத
வெள்ளமங் கேக லோடும் விரிந்தெழு பூழி மாலை
தள்ளருஞ் சுடர்கண் மாற்றி அகிலமுந் தானே யாகி
அள்ளலங் கடலின் பேழ்வாய் அடைத்தது திடரே யாக. 22

கலகல மிழற்றும் நோன்றாட் கழல்புனை பூத வெள்ளம்
வலவயின் எஃகம் ஏந்தும் வள்ளல்தாள் வழுத்திச் சூழ்ந்து
செலவுறு கிரிகள் மானச் சென்றுதந் தலைவ ரோடும்
அலைபொரும் அளக்கர் வேலை அகன்கரை இறுத்த அம்மா. 23

மடங்கலை உறழும் மொய்ம்பின் மாபெரும் பூத வெள்ளந்
தடங்கழல் கலிப்பத் தாளிற் சலசல ஒலிப்ப மாறா
நெடுந்திரை அலமந் துள்ள நேமியங் கடலே ஆறா
நடந்தன பொறையாற் றாது சேடனும் நடுக்கம் உற்றான். 24

படிதவிர் பூத வெள்ளம் படர்தலும் பரட்டின் காறாக்
கடலள வமைந்த தன்றே கனல்விழிச் சுறவு சின்னை

கெடலருந் திமிங்கி லாதி கீடம்போல் உலவா நின்ற
அடியுறை பரலே போன்ற அதற்படு கிரிகள் முற்றும். 25

தந்திரப் பூத வெள்ளந் தடங்கட லாற்றிற் சார
வெந்திறல் துணைவர் யாரும் விரிஞ்சனும் மாலும் மற்றை
இந்திரத் தலைவன் தானும் இமையவர் பலருஞ் சூழ
அந்தரத் தாற்றிற் சென்றான் அறுமுகன் அணித்திண் தேர்மேல். 26

மாறுபட் டவர்மேற் செல்லும் வயப்பெரும் பூதர் ஏக
ஆறுபட் டமரும் முந்நீர் அலமந்து தெளிவின் றாகிச்
சேறுபட் டிறைய தொன்று தேய்ந்திடு முன்னம் அஃதே
நீறுபட் டெழுந்து சென்றெவ் வுலகமும் நிமிர்ந்து சூழ்ந்த. 27

இவ்வகை அயில்வேல் அண்ணல் இராயிரம் பூத வெள்ளங்
கவ்வையின் அமைந்து செல்லக் கனைகடல் வரைப்பின் ஏகி
எவ்வம தடைந்த தொல்லை இலங்கையங் குவடு நீங்கி
மைவரை புரைசூர் மேவு மகேந்திர புரமுன் போந்தான். 28

வேறு

போந்தகாலை அயலின்வந்து போற்றியங்கை கூப்பியே
நாந்தகஞ் சிலைகதை நலங்கொள் சங்குசக்கரம்
ஏந்தினோனும் நான்முகனும் இந்திரத் தலைவனும்
ஆய்ந்துநேடி இன்னதன்மை ஆர்வமோ டியம்பினார். 29

காண்டியீது சூரனூர் கடுங்கண்நீசர் செறிதலால்
ஆண்டுசேறல் முறையதன் றதற்கடுத்த வல்லையாம்
ஈண்டுபாசறைத்தலம் இயற்றுவித் திருந்தபின்
வேண்டுமாறு புரிதிஐய வினையநாடி என்னவே. 30

குன்றெறிந்த முருகன்அன்ன கூற்றுணர்ந் திசைந்திடா
நன்றிதென் றருட்கண்வைத்து நாகர்கம்மி யன்தனை
மன்றஅன்பொ டேவிளித்து வல்லைஈண்டு பாசறை
ஒன்றுசெய்தி டென்னலும் உளஞ்சிறந்து புகலுவான். 31

தாரகற் கடந்தவேற் றடக்கைவீர ஈண்டியான்
ஓரிறைக்கு முன்னமாக ஓங்குபா சறைத்தலஞ்
சீரிதிற் படைக்குவன் தெரிந்துகாண்டி உனதுபேர்
ஆரருட் டிறத்தினென் றடித்தலம் பணிந்துபின். 32

மாடகூட மண்டபம் வளங்கொள்சோலை வாவிகள்
பீடுலாய கோபுரம் பிறங்குவீதி ஓர்திசை
கோடிகோடி ஆக்கிமற்றோர் கோநகர் இயற்றியே
நாடுமேம கூடமென்று நாமமொன்று நாட்டினான். 33

கருத்திலன்ன வன்செயுங் கவின்கொள்பாடி வீடுகண்
டுருத்தியான் மகிழ்ச்சியெய்தி அருள்புரிந்து கந்தவேள்
திருத்தகுஞ் சனங்கள் போற்றி செய்யஆண்டு சென்றபின்
மருத்தன்உந்து தேரிழிந்து மந்திரத்தை நண்ணினான். 34

அந்தமற்ற பூதர்தம்மை ஆவணங்கள் நிறுவியே
முந்துகொற்ற வயவர்நான் முகத்தனுதி அவரொடும்
மந்திரத்துள் ஏகியே மகிழ்ந்துவீற் றிருந்தனன்
இந்திரப்பெ ருமடங்கல் ஏறுதாங்கு தவிசின்மேல். 35

ஒன்பதோடி லக்கவீரர் ஓங்கலாளர் அறுவர்கள்
அன்புசெய்து போற்றிசெய்ய அறுமுகேசன் அமரர்கள்
முன்புசெய் பணித்திறம் முறைப்படப் புரிந்திட
இன்பினோடும் ஏமகூட வெற்பிலிருக்கை வைகினான். 36

ஆகத் திருவிருத்தம் - 36

# 2. வரவுகேள்விப் படலம்

—oo—

ஏகநா யகனும் ஐயன் இவ்விடை இருந்த எல்லை
நாகர்மேல் அளிவைத் துள்ள நாரதன் அவற்றை நாடி
மாகநீள் புரிசை சூழ்ந்த மகேந்திர புரத்திற் சென்று
போகமார் உலகின் மேலாம் புரவலன் கோயில் புக்கான். 1

புக்கனன் அவுணர் உய்ப்பப் பொருவிலா இகல்வெஞ் சூரன்
மிக்குயர் திருவி னோடும் வீற்றிருந் திடுதல் காணூஉ
இக்கென இனிய நீயோன இறப்பவென் றுன்னி வாயால்
தக்கதோர் ஆசி கூறிச் சார்ந்தனன் தவத்தின் மேலோன். 2

அங்கைகள் மலர நின்றே ஆசிசெய் தானை நோக்கி
எங்குளை இங்கு வந்த தென்னைநீ யாரை யென்ன
மங்கையோர் பங்கன் மேவும் வடபெருங் கயிலை வாழ்வேன்
நுங்குலந் தலைமை யாக வைகலும் நோற்றல் செய்வேன். 3

கைதவம் புகலேன் வெய்ய காமமே முதல நீத்துச்
செய்தவம் பலவும் உள்ளேன் தேவருக் கிடுக்கண் செய்வேன்
மைதவிர் புகரி னோடும் மருவுநண் புடையேன் நின்பால்
எய்தியொன் றுரைக்க வந்தேன் நாரதன் எனும்பே ருள்ளேன். 4

சிந்துவான் மதிதோய் வேணிச் செல்வன்நின் அடுவ தாகக்
கந்தனும் முருகன் தன்னைக் காமர்கண் ணழலால் நல்க
வந்தமா மதலை தன்பால் ஐயஉன் பணிய தாற்றும்
இந்திரா தியர்கள் ஏகி இறைஞ்சியே ஏத்தி யுற்றார். 5

உற்றுளார் தமக்கு நின்னால் உறுதுயர் குமரன் கேட்பச்
சொற்றலும் அஞ்சல் என்று தொல்சிவன் அருள்மேற் கொண்டு
கொற்றவெம் பூத வீரர் குழாத்தொடும் புவியின் ஏகி
மற்றுன திளவல் தன்னை வரையொடும் வேலாற் செற்றான். 6

ஆண்டது புரிந்த பின்னர் அறுமுகன் செந்தி மேவித்
தூண்டினன் நினக்கோ ரொற்றைத் தூண்ணென அவனும் வந்து

மீண்டபின் புகுதி நாடி வேலையைக் கடந்து தன்பால்
ஈண்டிய படையொ டன்னான் இந்நகர் வடபால் வந்தான். 7

ஆங்கனம் பாடி வீடொன் றுற்றுவித் தனிகம் யாவும்
பாங்குற இருந்தான் செவ்வேள் பார்த்தனன் இனைய வெல்லாம்
ஈங்கிது நிகழ்ந்த வண்ணம் என்றலும் அவுணர் கோமான்
தீங்கன லென்னச் சீறி நகைத்திவை செப்ப லுற்றான். 8

வேறு

மேனிமிர் கொண்டல் உயர்த்தவன் அம்புய மிசைவேதா
நீனிற மாயவன் ஊரது போல நினைந்தானோ
ஆனதொல் அண்டமொ ராயிர கோடியும் அரசாள்வேன்
மாநகர் மேலொரு பாலக னும்பொர வருவானே. 9

அரியின் இனஞ்செறி சூழலின் அன்னவை அடலுன்னி
கரியது கன்றுழை கலைபிற வற்றொடு கடிதேகில்
பொருது வயங்கொள வல்லது கொல்அது போலன்றே
முருகனும் வெம்படை யுடன்இவண் வந்திடு முறைதானே. 10

வேலை கடந்தென தாணை இகழ்ந்து வியன்பூதர்
சால நெடும்படை தன்னுடன் இந்நகர் சார்வானுங்
காலம் இதங்கவன் வீரம் அறிப்பல் கருத்தில்லாப்
பாலகன் என்றும் விடேன்வரை என்பதும் பாரேனால். 11

முன்னொரு சூழ்ச்சியின் அசமுகி ஒண்கரம் முரிவித்தோன்
ஒன்னல ராய்அமர் உம்பர்கள் யாவரும் உய்ந்தாரோ
என்னிவை யானொடும் வெற்பினை அட்டன னெனவுன்னித்
தன்னுயிர் போவ தறிந்திலன் இந்நகர் தனின்வந்தான். 12

ஆழிய தெண்டிரை ஆழி கடைந்தவன் அலகில்லா
வேள்வி புரிந்திடு வாசவன் அம்புய மிசைமேயோன்
வாழிய நம்பெயர் கூறினும் அஞ்சினர் மறைகுற்றார்
பூழி புனைந்தவர் பாலக னோஅமர் புரிவானே. 13

அந்தர மேல்வரு செங்கதி ரைச்சிறை அமர்வித்த
மைந்தனை நாற்படை தன்னொடு மேவி வயப்போரால்
முந்திய பூதரை ஏனைய வீரரை முடிவித்தே
கந்தனை யொல்லையின் வெற்றிகொள் வேன்இது காண்கிற்பாய். 14

என்றசு ரேசன் இசைத்தலும் நாரதன் இவைகேளா
நன்றிது நன்றிது தாழ்க்கலை இன்னினி நகர்சூழச்
சென்றவ னைப்பொர நின்படை ஏவுதி செல்கின்றேன்
வென்றி நுமக்குற நோற்றிடு வானென விண்போனான். 15

வேறு

நாரதன் இனைய கூறி நகையொடு போதலோடுஞ்
சூரருள் ஆற்றல் மிக்கோன் துண்ணென அயலின் நின்ற

கோரன்உற் கோரன் என்னும் ஒற்றரைக் குறித்து நோக்கி
வாரிதி இறைவற் பற்றி வல்லையிற் கொணர்தி ரென்றான். 16

என்றலும் அனைய ரோடி எறிகடற் கரசைக் கூவி
வன்திற லோடு பற்றி வல்லைமுன் கொணர்ந்தே உய்ப்பக்
கன்றிய மனத்த னாகிக் கைதொழு தவலங் கூர்ந்து
நின்றனன் அவனை நோக்கி நெருப்பெழ விழித்துச் சொல்வான். 17

பவ்வநீர் அரச கேண்மோ பங்கயத் தவனும் மாலுஞ்
செவ்விதின் உணரா வண்ணம் ஒளித்தவன் சிறுவன் தன்னை
வெவ்வலி கடந்த பூத வெள்ளத்தை நமது மாறா
இவ்விடை விடுத்த தென்னை என்னலும் இசைக்க லுற்றான். 18

மண்படு புவனம் போற்றும் மன்னகேள் புயங்க மீது
கண்படு முகுந்தன் வேதாக் கடவுளர் தலைவ னோடும்
எண்படு துணைவ ரானோர் யாவரும் புடையிற் சூழ
விண்படு நெறியிற் சென்றான் வீரவேற் றடக்கை அண்ணல். 19

மடல்கெழு நீபத் தண்டார் வள்ளல்வான் நெறியிற் போத
மிடல்கெழு பூதர் என்பால் மேவினர் சென்றார் அன்னார்
அடிகளின பரட்டின் காறும் அமைந்திலன் அவரை யானே
தடைசெய வல்லேன் போலுந் தக்கதே இதுமற் றன்றே. 20

ஊழியும் உலையாப் பூதர் ஒல்லெனச் செல்லத் தாளிற்
பூழியால் அளறு பட்டாங் கிடையறப் புலம்ப லுற்றேன்
ஆழியன் என்னும் பேரும் அற்றனன் வசையே பெற்றேன்
ஏழையேன் செய்வ தென்கொல் எதிருண்டோ வலியர்க் கம்மா. 21

தெள்ளிதில் தமிழ்தேர் காட்சித் திருமுனி கரத்தில் வாரி
உள்ளுறக் கொண்ட தேபோல் ஒல்லையின் மிசைவர் போலாங்
கொள்ளையிற் செறிபூ தர்க்குள் ஒருவரோர் குடங்கை தன்னின்
அள்ளுதற் காற்ற கில்லேன் ஆதலின் உய்ந்தேன் அன்றே. 22

உடல்சின வசனி தன்னை ஒண்பணி விலக்க வற்றோ
கடுமுரண் அரிமான் ஏற்றைக் களிறெதிர் விலக்கிற் றுண்டோ
மிடல்கெழு விதியைப் புந்தி விலக்குமோ அஃதே அன்றோ
அடல்மிகு பூதர் தம்மை அளியனேன் தடுப்ப தென்றான். 23

இற்றெலாம் அளக்கர் கோமான் இசைத்துமெய் துளக்க மெய்தி
நிற்றலும் நெடுவேல் அண்ணல் நீள்நகர் நணிய தன்மை
ஒற்றரிற் சிலவர் காணா ஓடினர் ஒல்லை சென்று
கொற்றவற் பணிந்து நின்றே இவையிவை கூற லுற்றார். 24

அராவணை அண்ணல் வேதா அரிமுதல் அமரர் சூழ
விராவுறும் இலக்கத் தொன்பான் வெலற்கரும் வீரர் போற்ற
இராயிரம் பூத வெள்ளம் ஈண்டிட எதிர்நீர்ச் சென்னிப்
பராபரன் மைந்தன் நந்தம் பதிவட திசையிற் போந்தான். 25

வடதிசை அதனிற் போந்து வானவர் புனைவற் கொண்டே
படிபுகழ் தகைமைத் தான பாசறை புரிவித் தாங்கே
புடைதனின் அனிக மான பூதவெவ் வீரர் மேவ
நடுவணோர் நகரந் தன்னின் நண்ணிவீற் றிருந்தான் அன்றே. 26

கண்டனம் இதனை இன்னே கடவது புரிதி யென்றுந்
திண்டிறல் வெய்ய தூதர் செப்பலும் அதனைக் கேளா
அண்டமும் புவனம் யாவும் அலமர வுயலிற் சீறிப்
புண்டிகழ்ந் தனைய கண்ணான் இவையிவை புகல லுற்றான். 27

ஆகத் திருவிருத்தம் - 63



# 3. முதனாட் பானுகோபன் யுத்தப் படலம்

—oo—

கோதை வேலுடைக் குமரன தாற்றலுங் கொற்றப்
பூதர் ஆற்றலும் ஏனையர் ஆற்றலும் போர்செய்
தூதன் ஆற்றலுந் தொலைக்குவன் துணைவரை நீவி
ஆதவன் தனிப் பகைஞனைக் கொணர்திரென் றறைந்தான். 1

ஆன காலையில் நன்றெனத் தூதுவர் அகன்று
பானு கோபன திருக்கைப் கனையவற் பணிந்து
மேனிலைப்படு தந்தைதன் பணிவிடை விளம்ப
மான வாலரித் தவிசுவிட் டெழுந்தனன் மன்னோ. 2

தொல்லை மந்திரத் தலைவருஞ் சுற்றமா யினரும்
மல்லை தீர்தரு தானையந் தலைவர்கள் யாரும்
ஒல்லெனப்புடை சூழ்ந்தனர் உடுமுகான் றென்னப்
பல்லி யங்களும் ஆர்த்தன போர்த்தன பதாதி. 3

அக்க ணத்தினில் இரவியம் பகைஞனோ ரணித்தேர்
புக்கொ ராயிர கோடிவீ திகளொரீஇப் புடையில்
தொக்க வீரரிற் கண்டுளார் வயின்வயின் தொழப்போய்
மிக்க தாதைதன் திருநகர் அடைந்தனன் விரைவின். 4

தேரின் நின்றிழிந் தண்ணலங் கோயிலுட் சென்று
சூர பன்மனை அணுகியே அவனடி தொழுது
வீர வீரநீ யெனையிவண் விளித்ததென் னென்ன
வாரி ருங்கழல் மன்னவன் இன்னன வகுப்பான். 5

முந்து தாரக வெம்பியை வரையொடு முடித்துக்
கந்த வேள்செந்தி நீங்கியே அளக்கரைக் கடந்து

நந்தி தன்கணத் தலைவரும் பூதரும் நணுக
இந்த மாநகர் வடதிசை வாயில்வந் திறுத்தான். 6

சிந்து போன்றுல களந்திடு கள்வனுஞ் செயிர்தீர்
கந்த மாமலர்க் கடவுளும் என்பணி கடந்த
இந்தி ராதியர் யாவரும் பிறருமாய் ஈண்டி
வந்து ளார்களாம் அறுமுக மதலைதன் மருங்கு. 7

அளிய ராகிய அமரரும் ஆன்றரு மகவும்
ஒளிறு வாட்படை நந்திதன் கணத்தினுள் ளோரும்
களியின் மூழ்கிய பூதருங் கடிதுவந் தடைதற்
கெளிது பட்டதோ நன்றுநன் றினையமா நகரம். 8

பின்னை தன்னுடன் அடுக்கலை மைந்தனைப் பிறரை
முன்னம் அட்டிடும் மாற்றலர் தங்களை முருக்கச்
சென்னெ றிக்கொடு போதலென் கடன்அவர் சிறியர்
மன்னர் மன்னன்யான் ஆதலின் இருந்தனன் வறிது. 9

அந்தண் மாமுகில் உயர்த்தவன் வேண்டலும் அமலன்
தந்த கந்தனைச் சாரதத் தலைவர்க ளோடு
நந்த மைப்பொர விடுத்தனன் ஆதலின் நானும்
மைந்த நிற்கொடு வென்றிபெற் றிருந்திடல் வழக்கே. 10

ஆத லால்இனிப் படையொடும் அமர்க்களத் தடைந்து
நாதன் மைந்தனை நந்திதன் கணத்துளார் தம்மைப்
பூதர் தங்களைப் பொருதழித் தடல்வயம் புனைந்து
காதல் மைந்தநீ மீடியால் நம்முனங் கடிதின். 11

வேறு

என்றிவை சூர்முதல் இசைப்பக் கேட்டலும்
பொன்றிகழ் தடம்புயம் பொருப்பிற் சேட்செல
ஒன்றிய குமிழ்வடி வுடலம் போர்த்திட
நின்றிடு திருமகன் இனைநி கழ்த்துவான். 12

இருளுறு மிடற்றினன் ஏவும் மைந்தனை
மருளுறு பூதரை மற்று ளார்தமை
வெருளுறு சமரிடை வென்று மீள்வதோர்
பொருளென நினைந்துகொல் புகன்றி இற்றெலாம். 13

பன்னுவ தென்னினிப் பரமன் காண்முனை
இந்நகர் நணுகுமுன் எதிர்ந்து போர்செய்வான்
நென்னலே வினவினன் நீய தோர்ந்திலை
பின்னிது புகலுதல் பிழைய தாகுமால். 14

படைப்பெருந் தொறுவொடும் படர்ந்து கந்தனை
அடுத்தனன் பேரமர் ஆற்றி வென்றிகொண்
டிடுக்கணில் பூதரை ஏனை யோருடன்
முடித்திவண் வருகுவன் முதல்வ காண்டிநீ. 15

கந்தனை விறல்கொடே அவன்றன் கட்படு
செந்திரு மார்பனைத் திசைமு கத்தனை
இந்திரக் கள்வனை இமைப்பில் பற்றிமுன்
தந்திடு கின்றனன் தருவ செய்தியால். 16

என்றிவை கூறியே இறைஞ்ச மைந்தநீ
சென்றனை வருதியால் திறலி னோடென
நன்றென விடைகொடு நடந்து நன்கமை
பொன்றிகழ் தனதுதேர் புகுந்து போயினான். 17

தொல்லையிற் பரிசனம் புடையிற் சூழ்தரப்
பல்பதி னாயிரந் துணைவர் பாற்பட
ஒல்லென இயம்பல ஒலிப்ப ஏகுறு
எல்லையம் பகைதன திருக்கை எய்தினான். 18

பணடியங் தேரினுந் தணந்து பாங்கரின்
மண்டுறு தூதரை வல்லை கண்ணுறீஇ
எண்டரு நம்படை யாவும் இவ்விடை
கொண்டணை வீரெனக் கூறிப் போயினான். 19

ஏயிரும் பரிசனர் யாரை யும்நிறீஇ
மாயிருங் கலைமகள் வதிந்து வைகிய
ஆயுத சாலையின் அவுணர் கோன்மகன்
போயினன் தொழுதனன் பூசை ஆற்றினான். 20

கயிரவ நிறத்தபூங் கச்சு வீக்கினான்
வயிரவொள் வாளினை மருங்கு சேர்த்தினான்
வெயில்விடு பொன்துகில் மீது சுற்றினான்
துயிலறும் அமரரைத் துளக்கங் கண்டுளான். 21

செல்லிடை உருமெனத் தெழிக்கும் நோன்கழல்
கல்லென அரற்றிடக் கழலிற் பூட்டினான்
வல்லிதிற் சாலிகை மருமஞ் சேர்த்தினான்
சொல்லினும் நிவந்தெழு தூண்செய் தோளினான். 22

கோதையை அங்கையிற் கொளுவிச் சுற்றினான்
போதுறழ் அங்குலி புட்டில் தாங்கினான்
சோதிகொள் சரம்படு தூணி யைச்சுவல்
மீதுற வீக்கினான் விறலின் மேலையோன். 23

வெம்பெரு நுதல்மிசை விசயப் பாலதாஞ்
செம்பொனின் பட்டிகை திகழச் சேர்த்தினான்
பம்புறும் அணிகலம் பலவுந் தாங்கினான்
தும்பையஞ் சிகழிகை மவுலி சூட்டினான். 24

வடித்ததோர் பெருஞ்சிலை வயமுண் டாகளன்
றெடுத்தனன் விடுத்திடின் யாவர் தம்மையும்

படுத்திடு மோகமாம் படையொன் றேந்தினான்
அடுத்திடு செருநர்தம் மாற்றல் உன்னலான். 25

ஆனதோர் போரணி அணிந்து வாய்தலிற்
பானுவின் மாற்றலன் படர முன்னரே
போனதோர் தூதுவர் எழுதிர் போர்க்கெனத்
தானையோ டெழுந்தனர் தருவர் யாவரும். 26

வேறு

விசையன் நேமியன் மிகுந்திறல் மாயன்
முசலி கண்டகன் முரன்கரன் மூர்க்கன்
தசமுகன் கனலி சண்டன் விசண்டன்
அசமுகன் மகிடன் அக்கிர வாகு. 27

விசையசே னன்விட சேனன் விமோகன்
வசைகொள் சோமகன் மதுச்சசி சித்துச்
சுசிமுகன் அசனி சூலிய கேது
அசுரசே னன்இவர் ஆதியர் ஆனோர். 28

நடுக்கொ ளாவகை தடிந்திடு தெய்வப்
படைக்கலங் களவை பற்பல பற்றா
உடைத்தவன் மையுடன் ஒய்யென வந்தார்
கிடைத்த தோவமர் எனக்கிளர் கின்றார். 29

ஆனகா லைபதி னாயிர வெள்ளந்
தானவப் படைஞர் சார்புதொ றேகி
மீனவே லைகளும் வெள்குற ஆர்த்து
மானவத் தலைவர் மாடுற வந்தார். 30

கோல வார்சிலை கொடுங்கதை நீடுஞ்
சூல நேமிஅயில் தோமரம் ஈட்டி
ஆலம் வாள்கணையம் ஆரெழு நாஞ்சில்
கால பாசமிவை கைக்கொடு சென்றார். 31

கந்து கத்தொகை கடங்கலுழ் கைம்மா
மந்தி ரத்திரதம் ஈங்கிவை மூன்றும்
ஐந்தொ கைப்படுமி ராயிர வெள்ளந்
தந்தி ரத்தலைவர் தம்புடை சூழ்ந்த. 32

ஐந்து நான்குடைய ஆயிர வெள்ளத்
திந்த நாற்படையும் ஈண்டுபு செல்ல
மைந்தின் ஏற்றமிகு மானவர் தத்தஞ்
சிந்தை போற்கடிது சென்றனர் அம்மா. 33

சென்ற காவலர்கள் சேனையி னோடும்
என்ற வன்பகைஞன் எய்துழி நண்ணி
ஒன்ற அங்கைதொழு தொல்லென ஆர்த்துத்
துன்றி வந்துபுடை சூழ்ந்தனர் அன்றே. 34

இரவிதன் பகைஞன் ஈங்கிவை காணு
ஒருதன்ஏ வலனை ஒல்லையின் நோக்கித்
திருமைபெற் றதொரு தேரினை வல்லே
தருகஎன் னஇனி தென்று தணந்தான். 35

செப்பும் அத்தொழில் சிரங்கொடு சென்றே
மெய்ப்படைக் கருவி மேவுறி நண்ணி
முப்ப தாயிர முரட்பரி பூண்ட
ஒப்பிலா இரதம் ஒன்றினை உய்த்தான். 36

உய்த்த தேரின்உத யக்கிரி வாவு
மொய்த்த வெங்கதிரின் மொய்ம்பொடு பாய்ந்தான்
மெத்து பேரணிக வெள்ள மியாவும்
அத்துணைப் பொழுதின் ஆர்த்தன அன்றே. 37

உரத்த கந்திகள் ஓராயிர கோடி
பெருத்து நீண்டனைவு பெற்றிடு பாளை
விரித்து நீட்டியென வெவ்வசு ரேசர்
கரத்தின் எண்ணில்கவ ரித்தொகை வீச. 38

மற்ற வன்தனது மாசிருள் மேனி
உற்றி டற்கருமை யால்அவன் ஒண்சீர்
சுற்றி மீதுலவு தோற்றம தென்னக்
கற்றை வெண்குடைகள் காவலர் ஏந்த. 39

அடைப்பை கோடிகம் அடுஞ்சுடர் ஒள்வாள்
கடிக்கொள் பீலிகவின் உற்ற களாசித்
தொடக்கம் ஏந்திமுறை சுற்றி அனந்தம்
படைப்பெ ருந்தலைவர் பாங்கொடு போற்ற. 40

எழில்செ றிந்தஇர தத்திடை வைகும்
அழலின் வெங்கதிரை ஆற்றமு னிந்தோன்
உழைய ரிற்பலரை ஒய்யென நோக்கி
விழுமி தோர்மொழி விளம்புதல் உற்றான். 41

காமர் வெம்படை கணிப்பில கொண்ட
சேம மாகியமர் தேரொரு கோடி
ஏம மோடுகொணர் வீரென லோடுந்
தாம வேலுழையர் தாழ்ந்தனர் சென்றார். 42

அண்ட ரும்படை அளப்பில உய்த்துத்
திண்டி றற்கெழுமு தேரொரு கோடி
கொண்டு வந்துழையர் கொற்றவன் மைந்தற்
கெண்டி சைப்புறமும் ஈண்டுற வித்தார். 43

ஆண்ட கைக்குமரன் அன்னது காலை
மாண்ட சீர்வலவன் மாமுகம் நோக்கிப்

பாண்டின் மாத்தொகுதி பண்ணின இத்தேர்
தூண்டு கந்தன்அமர் சூழலின் என்றான். 44

என்ன லும்விழுமி தேயென முட்கோல்
மன்னு மத்திகையின் வன்றொழில் காட்டித்
துன்னு வாம்புரவி யின்தொகை தூண்டிப்
பொன்னந் தேர்கடவி னன்புகழ் வெய்யோன். 45

வெய்ய வன்தனை வியன்சிறை இட்ட
கையன் ஏகஅது கண்டு புறஞ்சூழ்
மையல் மால்அவுண மாப்படை யாவும்
ஒய்யெ னப்பெரிது லம்பின அன்றே. 46

எழுந்த தானவர் இகற்படை வெள்ளம்
எழுந்த தேர்நிரை எழுந்தன கைம்மா
எழுந்த வாசிகள் எழுந்தன ஓதை
எழுந்த கேதனம் எழுந்தன பூழி. 47

அறைந்த பேரிகை அறைந்தன சங்கம்
அறைந்த காகளம் அறைந்தன திண்கோ
டறைந்த ரல்லிகை அறைந்த படாரி
அறைந்த தண்ணுமை அறைந்தன தக்கை. 48

ஆர்த்த தேர்த்தொகுதி ஆர்த்தன வாசி
ஆர்த்த தந்திநிரை ஆர்த்தனர் வெய்யோர்
ஆர்த்த வால்துவசம் ஆர்த்தன கண்டை
ஆர்த்த தார்நிரைகள் ஆர்த்தது மூதூர். 49

அதிர்ந்த மாநிலம் அலைந்தன நாகம்
உதிர்ந்த தாரகை உலைந்தனர் தேவர்
விதிர்ந்த மேகநிரை விண்டது மேருப்
பிதிர்ந்து போயின பிறங்கல்கள் ஏழும். 50

ஊழி யான்மதலை ஓங்கு படைப்பேர்
ஆழி யோடிற அருக்கன் வெருண்டே
பூழி வான்முகடு போர்த்தெழல் காணா
வாழி என்றதின் மறைந்து படர்ந்தான். 51

வாழி மாநகர் வளைந்திடு தொல்பேர்
ஆழி யாங்கடை அவப்படை யாகிச்
சூழும் வேலையிடை தோன்றி யுலாவும்
பூழி தூர்த்துளது பூதர்க ளேபோல். 52

விட்ட சோதிநிமிர் விண்மிசை தாக்கப்
பட்டு லாவரு பதாகையின் ஈட்டம்
வட்ட வானமெனும் வான்பட கத்தைக்
கொட்டு மண்மகள் குலாவுகை போலும். 53

தாழும் வீரர்படை தம்மின் உரிஞ்சப்
பாழி வெங்கனல் பரந்த பதாகைச்
சூழல் வானநதி தோய்ந்தசை காலை
வீழு மாலிகளின் வீழ்ந்திடு கின்ற. 54

வான மோடியன மால்கரி தள்ளுந்
தான மோடின சரங்களின் ஓடி
மீன மோடுதிரை வேலையி னோடும்
கான மோடின களிற்றின மென்ன. 55

செப்பு தற்கரிய சேணகர் தன்னில்
துப்பு மிக்கெழுவு தொல்படை வெள்ளம்
இப்பு றத்துநெறி இன்றிஅவ் வானத்
தப்பு றத்தினும் அளப்பில சென்ற. 56

மறந்த ருங்கதிரை வன்சிறை செய்தோன்
செறிந்த தானையுடன் இவ்வகை செல்ல
இறந்த சீர்நகரின் இத்திற மெல்லாம்
அறிந்து நாரதன் அகன்றிடு கின்றான். 57

வான மேல்நெறி வழிக்கொடு பூதர்
மேன பாசறை வியன்பதி யுட்போய்
ஞான வாலறிவின் நாரதன் விண்ணோர்
சேனை காவலன் அமர்ந்துழி சென்றான். 58

சிந்து ரப்பகை சிரத்தவி சுற்ற
கந்த வேள்இரு கழற்றுணை காணுப்
புந்தி நாரொடு புகழ்ந்து வணங்கி
எந்தை கேட்கவென இன்ன துரைப்பான். 59

பூத சேனையொடு பொள்ளென ஏகி
ஆதி நீயிவண் அமர்ந்தன யாவும்
தூதர் கூறஉயர் சூரபன் மாவென்
றோது தீயவன் உணர்ந்து வெகுண்டான். 60

நிகண்ட முற்பகல் நெடுங்கதி ரோன்பால்
உகண்ட தன்மகனை ஒல்லை விளித்தே
அகண்ட சேனையொடும் அன்பிலன் நின்மேல்
வெகுண்டு போர்செய விடுத்தனன் அம்மா. 61

விடுத்த காலையவன் வெஞ்சமர் ஆற்றற்
கடுத்த கோலமொ டளப்பில வான
கடற்பெ ரும்படை கலந்துடன் ஏகத்
தடுப்ப ரும்வெகுளி தன்னொடும் வந்தான். 62

இவனு டன்சமரின் ஏற்பவர் நீயுஞ்
சிவனும் அன்றியெவர் தேவரின் உள்ளார்

அவனை வெல்வதரி தாகும்முன் ஓர்நாட்
புவனி யுண்டவர் புரந்தர வென்றான். 63

கரையி லாவமர் கடந்திசை கொண்டான்
வரைவி லாதபல மாயைகள் வல்லான்
உரக வேந்தினும் உரம்பெரி துள்ளான்
பிரமன் ஈந்திடு பெரும்படை பெற்றான். 64

அலைக டற்கிறைவன் அங்கைகொள் பாசம்
மறலி தன்பரசு வவ்வினன் மாயோன்
விறலின் நேமிகொள வேண்டலன் முன்னஞ்
சிறிய தந்தையணி குற்ற சிறப்பால். 65

ஆகை யால்அவனை ஆள்கொடு வல்லே
வாகை கொண்டிடலும் மற்றரி தம்மா
பாகு பட்டபடை பாங்குற நீயே
ஏகல் வேண்டுமட வென்று பகர்ந்தான். 66

நார தன்இவை நவின்றிடு காலை
மூரல் எய்திமுரு கன்புடை நின்ற
வீர வாகுவை விளித்தருள் செய்து
சீரி தாஇனைய செப்புதல் உற்றான். 67

ஈண்டு பூதரொ டியாம்வரு தன்மை
யாண்டு சூரனுணர்ந் தங்கவர் தன்னின்
மாண்ட தானையுடன் மைந்தனை நம்மேல்
தூண்டி னன்அமர் தொடங்கிய மன்னோ. 68

எள்ளு தற்கரிய எண்மர் இலக்கர்
உள்ள பேர்களும் ஓராயிர பூத
வெள்ள மும்புடையின் மேவர நீபோய்ப்
பொள்ளெ னப்புரிசை யின்புடை சூழ்தி. 69

சென்று முன்கடை சிதைத்தனை அங்கண்
கன்றி நேரவுணர் காவலன் மைந்தன்
துன்று சேனைகள் தொலைத்தமர் ஆற்றி
வென்றி கொண்டவனை மீளுதி யென்றான். 70

ஈரும் வேல்முருகன் இவ்வகை கூறி
வீர வாகுவை விடுத்திளை யோரைச்
சார தத்தலைவர் தம்முடன் ஏவி
நார தற்கிது நவின்றருள் செய்வான். 71

கேட்டி யான்முனிவ கேழ்கிளர் சிம்புட்
கூட்ட மீதுசில கோளரி மேவின்
வாட்ட வல்லனகொல் மாய்குவ தல்லால்
காட்டு வாமுடிவு காண்டிய தென்றான். 72

குமரன் நல்குவிடை கொண்டு படர்ந்தே
விமல வாளுணர்வின் மேதகு வீரன்
சிமைய மேருநிகர் திண்சிலை ஒன்றை
அமரர் கோன்புகழ அங்கை பிடித்தான். 73

வீக்கி னன்கவசம் வெந்நிடை தன்னில்
தூக்கி னன்பகழி பெய்திடு தூணி
நீக்க மில்விரலின் நீடுகை தன்னில்
தாக்கு கோதையொடு புட்டில் தரித்தான். 74

சேம வெம்படை செறிந்திடு வைய
மாம ருங்கினில் வரம்பில செல்லத்
தோமில் வீரமிகு தோளினன் அங்கோர்
ஏம மாமிரதம் ஏறினன் மாதோ. 75

எட்டு வீரரும் இலக்கரும் ஏனை
மட்டில் பூதகண மன்னரு மாக
ஒட்டி ஆடமர் உருக்கொடு கொண்மூ
முட்டு தேர்த்தொகையின் மொய்ம்பொடு புக்கார். 76

தேரின் மேற்படு சிறப்புடை வீரர்
வீர வாகுவை விரைந்தயல் சூழ்ந்தார்
நேரில் ஆயிர நெடுங்கதிர் ஒன்றைச்
சூரர் தந்தொகுதி சுற்றிய வாபோல். 77

விரசி யேயமர் விளைத்திட வெஞ்சூர்
அரசன் மாநகரின் ஆயிர வெள்ளம்
பரிச னங்கள்படர் பின்கடி தென்று
முரச றைந்தனர்கள் ஆயிடை மொய்ம்போர். 78

அறைந்த காலைதனில் ஆயிர வெள்ளம்
நிறைந்த பூதர்நெடு வேல்முரு கன்பாற்
செறிந்து போற்றியிட ஏனையர் சென்றார்
உறைந்த ஆர்கலி உடைந்தது போல. 79

அருத்தி யிற்படரும் ஆயிர வெள்ளக்
கிருத்தி மத்தவர் கிளர்ந்திடு தீப்போல்
உருத்து வேலையின் ஒலித்துயர் ஊழி
மருத்தின் வன்மைகொடு வந்திடு கின்றார். 80

பைய ராவிறை பரித்திடு கின்ற
வையம் யாவையுமொர் வாகுவின் வைக்குங்
கையர் காலனை அடுந்தறு கண்ணர்
வெய்ய ரானவர்கள் யாரினும் வெய்யோர். 81

அரத்த வேணியர் அடும்படை ஏந்துங்
கரத்தர் வெங்கழல் கலித்திடு தாளர்

வரத்தின் மேதகையர் மாயை கடந்தோர்
உரத்தின் அண்டமும் உடைத்திட வல்லோர். 82

இனைய தன்மையினில் ஈண்டிய பூதர்
அனைவ ருஞ்செல அவர்க்கிறை யானோர்
தனதுதொல் வினைஞர் தம்மொடு சென்றான்
வனைக ருங்கழல் வயம்புனை வாகு. 83

செல்ல லுந்திமிலை செல்லுறழ் பேரி
கல்லெ னுங்கரடி காகள மாம்பல்
நல்ல ரிப்பறை தடாரி உடுக்கை
பல்லி யம்பிற முழங்கின பாங்கர். 84

மாறில்சே னையிடை வந்தெழு பூழி
நீறுபூ சிமுடி நீடிய கங்கை
ஆறு தோய்ந்தகல் விசும்பிடை ஆடி
ஏறுகொண் டகொடி ஈசனை யொப்ப. 85

பாய சாரதர் படைக்குள் எழுந்தே
ஆய பூழிஅவு ணப்படை தன்னில்
சேய பூழியொடு சேர்வன நாமுன்
போயெ திர்ந்தமர் புரிந்திடு மாபோல். 86

பான்மை இன்னன படைப்புற எண்ணில்
சேனை வெள்ளமொடு திண்டிறல் வாகு
தூந லம்தவறு சூருறை மூதூர்
வானு லாம்புரிசை மாடுற வந்தான். 87

வேறு

ஆனதோர் காலையின் அதனை நோக்குறீஇத்
தானவர் ஒருசிலர் தரிப்பின் றோடியே
சேனையங் கடலினைத் திர்ந்து வல்லைபோய்ப்
பானுவின் பகைஞனைப் பணிந்து கூறுவார். 88

மாயிருந் தானைகள் மருங்கு சூழ்ந்திட
நீயமர் செயவரு நிலைமை நாடியே
வேயென முந்திவெண் மேயி னன்றனை
ஏயினன் குமாரவேள் நிகழ்ச்சி ஈதென்றார். 89

மற்றிவை அவுணர்கோன் மதலை கேட்டலும்
கற்றையங் கதிர்மணிக் கடகக் கையினை
எற்றினன் முறுவல்செய் தெயிறு தீயுகச்
செற்றமொ டுயிர்த்திவை செப்பல் மேயினான். 90

இருந்திடு பாலனை என்னொ டேபொர
விரைந்தெதிர் தூதனை வியன்ப தாதியாய்ப்
பொருந்திய பூதரைப் போர்க்க ளத்தியான்
துரந்திடு கின்றனன் தொலைந்து போகவே. 91

அந்தர வரைப்பினில் ஆசை யெட்டினில்
வந்திடும் அளக்கரின் மற்றை நேமியில்
கந்தனும் ஒற்றனுங் கணங்கள் யாவருஞ்
சிந்தினர் வெருவியே திரியக் காண்பனால். 92

புன்மைய ராகிய பூதர் சேனையும்
வன்மையில் தூதனும் மழலைப் பிள்ளையுந்
தொன்மிடல் ஒருவியே தொலைந்து போகினும்
என்மன வெகுளியும் ஏகற் பாலதோ. 93

விடுகிலன் அவர்தமை மேலை ஏழ்பெருங்
கடல்திரை முழுவதுங் கடந்து செல்லினும்
புடையது சுற்றியே போக்கு ருதிவணா
கொடுவரு கின்றனன் குறுகிப் பற்றியே. 94

மேவலில் அவர்தமை மேலை நம்பெருங்
காவலன் முன்புறக் காட்டி இவ்விடைத்
தேவர்கள் தம்மொடுஞ் சிறையில் வீட்டுவன்
ஏவரும் எனதுசீர் இறைஞ்சி ஏத்தவே 95

என்றிவை பற்பல இசைத்துச் சூர்மகன்
கன்றிய மனத்தொடு கடிது சேறலுந்
துன்றிய அவுணர்தந் தொகுமுன் போயின
பொன்றிகழ் வடமதிற் புதவு நீங்கியே 96

ஆனதொர் காலையின் அடையும் பூதவெஞ்
சேனையின் ஆற்றலுந் திறலுங் கண்ணுறீஇத்,
தானவர் கூறுவார் சமர்கண் டோடிய
வானவர் அன்றிவர் வலியர் போலுமால். 97

என்னினும் இங்கிவர் எம்மொ டேபொரும்
வன்மையும் உடையரோ வரம்பில் குன்றெலாம்
பொன்மலை அதனொடு பொருவ தேயினும்
மின்மினி கதிரினும் விளங்க வல்லதோ. 98

என்றிவை போல்வன இணையில் தானவர்
ஒன்றல பலபல உரைத்து வெஞ்சினங்
கன்றிய அழல்விழிக் கணத்தின் சேனைநேர்
சென்றனர் தெழித்தனர் சிலைத்த பல்லியம். 99

வயிர்த்திடு பூதர்கள் மறலி என்றல
கயிர்த்திடும் அவுணரை நோக்கி அம்புவி
உயிர்த்தொகை அலைத்தவர் உவர்கொலோவெனச
செயிர்த்தனர் இடித்தனர் தீயின் வெம்மையார். 100

கரையறு தானவர் தாமுங் காய்கனல்
புரைதரு சூர்விழிப் பூத வீரரும்

ஒருவரின் ஒருவர்போர் உடன்று சேறலான்
இருவகை அனிகமும் இகலின் ஏற்றவே. 101

தந்தியின் கரங்களில் தண்டம் ஈந்திடா
வந்தெதிர் தெம்முனை மாய்ந்து வீடுறச்
சிந்துதி யெனுங்குறி செப்பிப் பூதர்மேல்
உந்தினர் மீமிசை உலப்பில் தானவர். 102

பகைத்திடு பூதர்கள் பலரும் நாடியே
திகைத்திவை யாவெனச் சிந்தித் தையுறத்
தகைத்தடந் தாளவை தரையின் பாற்படா
துகைத்தனர் பரியெனும் ஓத வேலையே. 103

காரிடைச் சென்றெனக் களிற்றி னுந்திரை
நீரிடைச் சென்றென நீடு மாவினும்
போரிடைச் சென்றனர் புறத்துப் போற்றியே
தேரிடைச் சென்றனர் வரையிற் சென்றென. 104

அடுகரி நிரையினை ஆடல் மாக்களைத்
தடநெடுந் தேர்களைத் தணப்பி லாவகை
கடலினை வளைந்திடு கரைய தாமெனப்
புடைதனில் சுற்றியே புவியின் ஏகினார். 105

அத்திறம் எதிர்த்திடும் அவுணர் பூதர்மேல்
முத்தலை வேற்படை முசுண்டி தோமரஞ்
சத்தியொ டெழுமழுத் தண்ட மேமுதல்
எத்திறப் படைகளும் எடுத்து வீசினார். 106

கரங்கொடு பெரும்படைக் கலங்கள் யாவையும்
பாங்கொடு வீசிய பதகர் உட்கிட
மரங்கொடும் எழுக்கொடும் வரைகொ டுந்தம
துரங்கொடும் வீசினர் உலைவில் பூதரே. 107

வேறு

செறிந்து நேர்ந்து செருச்செயும் எல்லையின்
இறந்த தானவர் எண்ணிலர் ஆவிபோய்த்
தறிந்த தாளுந் தலையுங் கரமுமாய்
மறிந்த சாரத ரும்வரம் பில்லையால். 108

மாண்ட சாரதர் யாக்கையும் மண்மிசை
வீண்ட தானவர் மெய்களுஞ் செங்களம்
யாண்டு மாகி இருங்கரை போலுற
நீண்ட நேமியின் நின்றது சோரிநீர். 109

விரவு பூதர் வெகுண்டுசென் றுன்னலர்
இரத மோடிர தங்களை எற்றினார்
கரிக ளாற்கரி யின்தொகை காதினார்
பரிக ளோடு பரிகளை மோதினார். 110

ஆளை யாள்கொண் டடர்த்தனர் ஆங்கவர்
தோளை யேதம தோள்கொடு தாக்கினார்
தாளி னால்அவர் தந்தலை சிந்தினார்
கோள ரித்தொகை மான்அடுங் கொள்கையார். 111

ஏற்ற சாரதர் எற்றிடத் தானவர்
ஊற்றம் இன்றி உடைதலும் அவ்வழிக்
காற்றொ டங்கி கலந்தன்ன காட்சியான்
ஆற்ற லாளன் அனலிகண் டானரோ. 112

கையின் மேயின கார்முகம் ஒன்றுதன்
மொய்யின் வாங்கி முரண்கெழு நாணொலி
செய்ய லோடுமத் தேவர் வெருக்கொளா
ஐய கோவென் றலக்கணுற் றாரரோ. 113

நாரி யார்ப்பு நணுகலும் நாற்படை
மூரி யார்ப்பு முகிலிடை ஆர்ப்பெனும்
பேரி யார்ப்பும் பிறங்கு பெருங்கடல்
வாரி யார்ப்புந்தம் வாய்மடிந் திட்டவே. 114

கொற்ற வில்லிற் கொடுங்கனல் வெங்கணை
முற்று மாரியின் முத்திறந் தூண்டலுஞ்
செற்று பூதர்தம் மொய்ம்பினாட் சென்றன
புற்றி னூடு புகுந்திடு பாந்தள்போல். 115

அங்கி மாப்படை யேவலும் அவ்வழிச்
சிங்கள் என்னுந் திறல்கெழு சாரதன்
எங்கண் உய்கி இறந்தனை ஈண்டெனாப்
பொங்கு சீற்றம் புகுந்தனன் புந்திமேல் 116

நேர்கொண் டார்த்து நெடுந்தகை தீயவன்
தேர்கொண் டார்க்குந் திறற்பரிச் சேக்கையின்
பார்கொண் டார்ப்பப் பருஉத்தடக் கைதனில்
தார்கொண் டார்த்திடுந் தண்டினிற் சாடினான். 117

சாடும் எல்லையிற் சாரதி உந்திய
ஆடல் வாம்பரி ஆவி புலந்திட
ஓட லின்றி இரதமங் குற்றதால்
நீடு கின்ற நிலைப்படு தேரென. 118

மாக்க ளூற்ற மடிவினை நோக்கியே
தீக்க னற்பெய ரோன்சின மேற்கொளாத்
தாக்க ணங்குறு தாழ்சிலை வாங்கியே
ஏக்கள் பூட்டி இதுவொன்று கூறுவான். 119

தடுக்கொ ணாஇச் சரஞ்சொரிந் துன்னுயிர்
படுத்து வானவர் பார்த்திடத் தென்றிசை

விடுக்கி லேனெனின் வெஞ்சம ரத்திடை
எடுக்கி லேன்சிலை யானெனக் கூறினான். 120

சூளி வ்வாறு புகன்று தொலைவிலா
வாளி யான்மிசை அங்கியின் பேரினான்
கோளி யார்பய னாமெனக் கூற்றுறழ்
வாளி தூண்டி மறைத்தனன் மேனியே. 121

மறைய வேயுடல் வாளிகள் தூண்டவும்
இறையும் உன்னலன் இன்னலுற் றுழ்கிலன்
பொறையி னோடு பொருக்கெனப் போகியத்
துறையின் நின்ற சயந்தனத் தேறினான். 122

நீர்மு கந்த நெடுமுகி லாமெனத்
தேர்மு கந்தனில் **தீயவன்** உந்திய
கார்மு கந்தனைக் கைக்கொடு வாங்கியே
பார்மு கத்துப் பதைப்புற வீசலும். 123

வலக்கை யாலொரு வான்கதை பற்றியே
சிலைக்கை ஈர்த்திடுஞ் **சிங்கனைத் தீயினான்**
தலைக்கண் மோதலுந் தானவர் ஆர்த்தனர்
கலக்க முற்றனர் கண்டஅத் தேவரே. 124

அருந்த தண்டொடு டவலிதன் கைத்தலம்
பிடித்து மற்றொர் பெருங்கையி னாலவன்
தடித்த மார்பத் தடவரை சாய்ந்துக
இடிப்பின் மும்மை இரைத்திட எற்றினான். 125

எற்ற வெய்யவன் எல்லையில் துன்புறச்
செற்ற மிக்கெழுஞ் சிங்கனுஞ் செங்கையில்
பற்று தண்டத் தொடுமப் பதகனைச்
சுற்றி வானந் துணுக்குற ஆர்த்தனன். 126

மாறி லாத அவுணனை வன்கையால்
கூறை போலவச் சிங்கன் சுலவலும்
ஈறில் பித்தினி லேமரு வோன்மிகத்
தேற லார்ந்தெனத் தேற்றமின் றாயினான். 127

ஆர முற்பெயர் அண்ணல் அறிவொரீஇச்
சோரும் எல்லையில் துண்ணென ஏறிய
தேரை விட்டுத் திறலரிப் பேரினான்
பாரின் எற்றப் பதைப்பொடு துஞ்சினான். 128

**வேறு**

அண்டருந் திறலின் மிக்க **அனலி**அங் கிறந்த வண்ணங்
கண்டனன் கவலா வுள்ளம் அழலெனக் கறங்கு கண்ணான்
**சண்டன்**என் றுரைக்கும்பேரோன் தடுப்பரும் படைகள் தன்கை
கொண்டிவன் உயிரை இன்னே குடிப்பனா லென்று சென்றான். 129

என்றதோர் மாற்றங் கேளா எரிவிழித் திடியின் நக்குப்
பொன்றிய அனலி யங்கைப் போர்கெழு தண்டம் வாங்கிச்
சென்றனன் விரைவில் அன்னான் தேர்மிசைப் பாய்ந்து நீலக்
குன்றெனும் வயிரத் தோள்மேற் புடைத்தனன் கூற்றம் உட்க. 130

புடைத்தலும் உயிர்த்து நெஞ்சம் பொம்மெனப் பொருமலெய்தித்
தடப்பெருந் தேரில் வீழுஞ் சண்டனும் தனது செங்கை
எடுத்ததோர் தண்டந் தன்னால் எதிர்புகுஞ் சிங்கன் மார்பந்
தடித்தனன் அவனுந் தானும் ஆரஞர் உழந்து விழ்ந்தான் 131

அப்பொழு ததனை நோக்கி அவுணரின் மாயன் என்போன்
குப்புறு தடந்தே ரோடுங் குறுகலும் பூதர் தம்மின்
ஒப்பிலா நீலன் நேர்போய் ஓச்சினன் கதையொன் றண்ணல்
முப்புரம் அதனில் தூண்டு மூரிவான் பகழி யென்ன. 132

போந்ததோர் தண்ட மாயன் பொருவகல் மார்பில் தாக்க
மாய்ந்தனன் போல நின்று வருந்திமற் றவன்றன் பாணி
ஏந்துமுத் தலைவேல் ஒன்றை எறிந்தனன் எரிலா கத்தில்
சாய்ந்தது குருதி நீலன் தானுமங் கயரா நின்றான். 133

சிறிதுபோழ் ததனில் தேறித் திரண்மணிக் கடகஞ் சேர்ந்த
எறுழ்வலித் தடக்கை தன்னால் எதிர்ந்தவன் உரத்தின் மாற்ற
அறைகழல் மாயன் தானும் அணங்குற நீலன் என்போன்
கறைகெழு நாக மென்னக் கனன்றிது கருதிச் செய்வான். 134

மந்தரந் தழீஇய தொல்லை வாசுகி யென்ன மாயன்
சுந்தரத் தடம்பொற் றோளைத் துணைக்கையால் தொடர்ந்து வீக்கிக்
கந்தரந் தன்னில் தீய கறையெறி மயிற்றில் கவ்வி
முந்துறு குருதிச் செந்நீர் குடித்தனன் மொய்ம்பி னோடும். 135

சோரிய தூண்டு நீலன் தொல்சினந் துறந்து நின்றான்
ஆருயிர் உண்டு போனான் அந்தகன் அனைய காலை
மூரிவில் தடக்கை மாயன் முடிந்தனன் சண்டன் சிங்கன்
பேரஞர் உழந்தோர் தேறிப் பின்னும்போர் புரிய லுற்றார். 136

கிட்டினர் தடந்தேர் மீது கிடந்ததண் டேந்திக் கீழ்போய்
ஒட்டினர் ஒருவர் தம்மின் ஒருவர்மேல் உடன்று பொங்கி
முட்டினர் இரண்டு பாலின் முறைமுறை பெயர்ந்தார் மொய்ம்பால்
வட்டணை திரிந்து தண்டில் தாக்கினார் மாற்று கின்றார். 137

இங்கிது போலப் பல்வே றியற்கையிற் கதையின் வெம்போர்
சிங்கனுஞ் சண்டன் தானுஞ் செய்தனர் திரிந்த வேலைப்
பொங்கிய பூதர் வேந்தன் பொருவரும் அவுணன் பொன்னார்
அங்கையில் தண்டஞ் சிந்த அடித்தனன் அணிப்பொற் றண்டால். 138

வயிர்த்திடு தண்டம் அங்கண் வலிகெழு சிங்கன் மோத
அயிர்த்தொகை ஆத லோடும் ஆற்றல்சேர் அவுணர் யாரும்

உயிர்த்தனர் என்கொ லாமென் றுன்னினர் உருமே றென்னச்
செயிர்த்தனன் சண்டன என்னுஞ் செருவலான் உரைக்க லுற்றான். 139

தண்டமொன் றிற்ற தென்று தருக்கலை தடம்பொற் றோளாக்
கொண்டதும் அஃதே அன்றோ கூற்றுவன் நகரும் மேலை
அண்டமும் உலையத் தொன்னாள் அடர்த்தனன் உனக்கிங் கஞ்சேன்
மண்டமர் புரிதி என்னா வலிகெழு கரங்கொண் டேற்றான். 140

ஏற்றனன் இகலும் வேலை எரிசினங் கடவிச் சிங்கன்
ஆற்றலை யாங்கொல் நீயென் றாற்றலை அணிபொற் றண்டம்
போற்றுகென் றுய்ப்ப அங்கட் புகாநெறி புடைத்துக் கையால்
கூற்றனும் உட்க ஆர்த்தான் குருமணித் திரள்தோள் கொட்டி. 141

அங்நெடுந் தகையோன் ஆரப்ப அதுபொறா தழன்று சிங்கன்
பொன்னெடுந் தண்டால் அன்னான் புயமிறப் புடைத்த லோடுங்
கன்னெடுந் தோளும் ஓர்பா கதுமெனா முரியத் தண்டும்
பன்னெடுந் துணியாய்ச் சிந்திப் படிமிசைக் கிடந்த தன்றே. 142

புயந்தளர்ந் திடலுஞ் சண்டன் போவது கரமென் றுன்னா
அயர்ந்திலன் ஒசிபொற் றோளை அங்கையின் இறுத்து வாங்கி
வயங்கெழு தண்டிற் பற்றி வட்டணை புரிந்தான் வானோர்
வியந்தனர் இவனே கொல்லாம் வீரருள் வீரன் என்றே. 143

கரங்கெழு புயப்பொற் றண்டால் கார்கெழு சண்டன் காமர்
உரங்கெழு உரத்தின் மோத உருகெழு மடங்கற் பேரோன்
இரங்கிலன் உவன்போல் யானும் எற்றலன் கரங்கொண் டென்னாச்
சரண்கொடே அவன்றன் ஆகத் தடவரை அதனைச் சாய்த்தான். 144

கண்டகன் சாய்த லோடுங் கரமெடுத் தார்த்து வானோர்
புண்டருங் குருதிச் செங்கட் பூதநா யகனீ அன்றேல்
சண்டனை உதைப்பார் யாரே தாழ்ந்திடல் அவன்றன் ஆவி
கொண்டருள் இறையின் என்று குறையிரந் தறைய லுற்றார். 145

வேறு

வானவர் உரைகேளா மறலியொ டிகல்வெங்கண்
தானவன் இவனேயென் தனிஉயிர் அடுகிற்பான்
ஈனம துறுதேவர் இவனொடு நுமையின்றே
ஊனுடல் உயிரோடும் உண்குவன் அதுகாணீர். 146

என்னலும் இகல்சிங்கன் எரிகலுழ் விழியான்என்
முன்னிது புகல்கின்றாய் முடிகுவை இனியென்னாக்
கொன்னவில் தருகையால் கொடிறுடை தரமோத
ஒன்னலன் அதுபோழ்தின் ஒலிமுகி லெனவீழ்ந்தான். 147

போழுறு பகுவாயில் பொலிதரும் எயிறோடும்
வீழுறு நகையாலும் விரிகுரு தியினாலுந்
தாழுறு மதிதன்னைத் தாரகை நிரைசூழ
ஊழுற அமர்செவ்வான் ஒத்ததவ் வுழியன்றே. 148

சண்டனும் இறலோடும் யமன்விட வருதூதர்
அண்டலர் வெருவாமுன் அலமரல் உறுகின்றார்
கண்டனன் அதுசிங்கன் கையன துயிர்தன்னைக்
கொண்டணை குதிரென்னக் குறுகினர் அதுகொண்டார். 149

ஆனதொர் செயல்பாரா அசமுகன் எனவோதும்
மானவன் இறைநில்நில் வந்தனை துயிர் உண்பல்
ஏனைய ரெனவேநீ எண்ணலை மனையென்றுக்
கானிமிர் தருதேர்மேற் கடுவிசை யொடுசென்றான். 150

சிங்கன தெதிர்செல்லுஞ் செல்லுறழ் பகுவாயான்
அங்கணு கிடும்வேலை அதிபல மதுவென்போன்
எங்கினி அகல்வாய்நீ இற்றனை இவண்மன்னுப்
பொங்கிய சினமோடும் பொள்ளென விடைபுக்கான். 151

செந்தழல் புரைவெங்கட் டிறல்அச முகன்என்போன்
முந்துற மதுவென்னும் மொய்ம்பினன் எதிர்கோடல்
அந்தக னெடுகாலன் அமர்புரி தரவேமுன்
வந்தெதிர் எதிர்தன்மை மானுவ தெனலாமால் 152

அணுகினர் இருவோரும் அசமுகன் அதுகாலைத்
துணைநனி சிலைகொள்ளக் குலவிய சிலைகொள்ளாக்
கணிகையர் மிளிர்வேற்கட் கடைநில வியதென்ன
நுணுகிய நுதிவெங்க ணோன்கணை சிதறுற்றான். 153

முன்னது வரலோடும் முகனுறு பெயலோரான்
துன்னுபு செறிபோழ்துந் துணைவிழி இமையாதான்
தன்னிலை இறையேனுந் தவிர்கிலன் ஒருதானே
அந்நிலை தனில்நின்றான் அடுதிறல் முயல்கின்றான். 154

பாலுற நிமிர்கின்ற பழுமர மதுபற்று
மேலுறு சரம்வீசான் விடுகணை படமெய்யில்
சாலிகை யெனநின்றான் தகுவன நிரதத்தில்
காலென விசைசென்றே கருமுகி லெனஆர்த்தான். 155

ஆர்த்தனன் அதுகேளா அசமுகன் அயர்வெய்தித்
தேர்த்தனில் நிலமீதிற் சிலையொடு கணைசிந்தி
வேர்த்தனன் வறிதுற்றான் விம்மினன் மெலிதன்மை
பார்த்தனன் மதுவென்போன் இவையிவை பகர்கின்றான். 156

வீரனும் அலைஅஞ்சா வெஞ்சமர் வலன்எய்தச்
சூரனும் அலைநின்றே சூர்நிலை அதுகாணுந்
தீரனும் அலைஎன்னே செருமுய லுதிநீநின்
ஆருயிர் கொடுபோகென் றவனியின் மிசைபோனான். 157

பாரிடன் நிலன்மேவப் பகர்அச முகன்என்னும்
பேருடை யவன்வெள்கிப் பெருமிதம் இலனாகிப்

போரிடை வெருவுற்றேன் எனவொரு புரையுற்றேன்
ஆரிடை யிது தீர்வ னெனஅல மருகின்றான். 158

ஆயிடை அவுணன்தான் அமர்புரி கிலனாகிப்
போயினன் அவன்அந்தோ பொன்றுதல் இனிதென்னாக்
காயமொ டுளமானக் கனல்சுட மனம்வேவத்
தீயென வெருளுற்றான் பெருமுயல் திறல்பெற்றான். 159

மல்லையின் அவன்மகி யுறிதனி தொடராசிற்
கொல்லுவன் இனியாண்டுக் குறுகினும் அகலாதே
நில்லுதில் லெனவாரா நீனிற முகிலென்னா
செல்லுறழ் பகுவாயால் திசைசெவி டுறஆர்த்தான். 160

அற்றமில் மதுவென்போன் அசமுகன் உரைகேளாக்
கற்றதும் உளகொல்லோ கயறினை சிலவீரம்
பெற்றிலை யெனைநாடிப் பெயருதல் பிழையேனும்
உற்றனை இசையெற்கோர் உறுபழி தருகின்றாய். 161

என்றிது புகல்கின்றோன் எதிருற இகலிப்போய்ப்
பொன்றிகழ் சிலைகோலிப் பொறியுமிழ் பிறைவாளி
ஒன்றல பலஎய்ப்ப உருகெழு பிணமெய்தி
நின்றனன் அவையாவும் நெடியகை கொடுவவ்வி. 162

**வேறு**

வைந்தலைப் பகழிமேல் விடுப்ப மாமது
மெய்ந்திலன் இறையுமென் றெண்ணி மண்ணவன்
முந்தலைக் கழுவயின் முசலம் ஆதியாங்
கைத்தலப் படையெலாஞ் சிதறுங் காலையே. 163

பாரதன் மெய்யுறத் தளர்ந்து தானவன்
தேரினை விரைந்துதன் செங்கை யாலெடா
வாரிதி மேற்செல விடுப்ப வஞ்சகன்
பாரிடை ஒல்லையிற் பாய்ந்து மேயினன். 164

குப்புறு கின்றவன் கூளி வேந்தன்முன்
வெப்பமொ டணுகுறு வீங்கு தோளினால்
துப்புறு மற்றொழில் தொடங்க வானகத்
தப்புறம் அவன்செல அடிகொண் டோச்சினன். 165

வெய்தென இறந்துவான் மீண்டு பூதன்முன்
எய்தினன் அவனுரத் திடியின் எற்றியே
வைதனன் போயினன் மறைந்து மற்றொரு
கைதவம் நினைந்தனன் ககனம் புக்குளான். 166

வரந்தனிற் பெற்றதோர் மாயன் நேமியைக்
கரந்தனில் எடுத்தனன் கருந்தில் அர்ச்சனை
புரிந்தனன் தொழுதனன் போற்றிப் பூதன்மேல்
விரைந்துற விடுத்தனன் விளியுந் தன்மையான். 167

மாசுறும் அரமுகன் மதுவின் ஆகமேற்
பாசனம் வியப்பமால் பரிதி உய்த்தலும்
காசினி அவன்வெறுங் கரத்தன் ஆதலின்
வீசிய அப்படை வெகுண்டு மீண்டதே. 168

கனையிருள் உருவினைக் கனலி சேர்ந்தென
முனைகெழும் அரமுகன் முடியை அட்டதால்
தனதுகை நேமிதன் னால்உ றுததோர்
வினையிலை என்பது மெய்மை போலுமால. 169

உலந்தனன் அரமுகன் உருமு வீழ்ந்தென
நிலந்தனில் வீழ்தலும் நின்ற தானவர்
புலந்தனர் ஆழிமால் புடையிற் போயது
தொலைந்ததின் றமரெனா அமரர் துள்ளவே. 170

ஆற்றிய அவுணர்தந் தலைவர் ஏனையர்
நாற்றிறப் படையொடு நடந்து தம்முளஞ்
சீற்றம தாகியே செருவி னேற்றலும்
ஏற்றெதிர் மாயநர் இரிந்து போயினர் 171

வெற்றிகொள் தானவர் வெகுண்டு போர்செயப்
பற்றல ராகிய பாரி டத்தவர்
இற்றனர் வன்மையை இரிந்து போயினர்
மற்றது கண்டனன் வலிய தண்டகன். 172

வேறு

ஏற்ற மாகும் இலக்கவில் வீரருட்
சாற்று பேரிசைத் தண்ட கப்பேரினன்
கூற்றை நேர்வ தொருசிலை கோட்டியே
மாற்ற லார்மிசை வாளிகள் தூவினன் 173

மின்னு நாரி வியன்சிலை யேசிலை
துன்னு நாணொலி சூருரு மேற்றொலி
பொன்னின் வாளி மழைபொழிந் திட்டதான்
மன்னு தண்டக மாப்பெருங் கொண்டலே. 174

தட்டின் மொய்ம்புடைத் தண்டக மேலையோன்
விட்ட வாளிகள் வெய்யவர் தானையுட்
பட்ட காலைப் பரந்தெழு சோரிநீர்
மட்டி லாத குடிஞையின் வந்ததே. 175

இரதம் இற்றன எண்ணில வண்ணமார்
பரிகள் பட்டன பற்பல மாமதக்
கரிகள் பட்ட கணிப்பில எண்ணிலா
அரிகள் நேர்அவு ணப்படை பட்டதே. 176

இந்த வாறிவர் பட்டிட ஏனையோர்
நொந்து தம்முயிர் காப்ப நுதலியே

சிந்தி யேயெண் டிசையினும் பாரினும்
அந்த ரத்தினு மாய்இரிந் தோடினார். 177

வேறு

தண்டா அவுணப் படையிவ்வகை சாய்ந்த வாறும்
மண்டானை மள்ளர் பலர்அங்கண் இறந்த வாறும்
விண்டாழ் கதிரைச் சிறைபூட்டிய வீர வீரன்
கண்டான் வெகுண்டான் நகைத்தொன்று கழறு கின்றான். 178

மட்டார் தெரியல் மகவான்முதல் வானு ளோர்கள்
எட்டாத பேணில் தொலைவெய்தி இரிந்து போக
வட்டாடல் செய்து நமரங்களின் றுவி மாண்டு
பட்டார்கொல் ரன் மகனவ்வு படைகள் தம்மால். 179

மல்லார் கதிரைச் சிறைபூட்டிய யானும் நிற்க
தொல்லார்கள் ஆற்றல் உளராயடும் ஊற்றம் நன்றால்
கொல்லாது சீற்றம் இலதாயஇகல் கொண்டு றுதேல்
வெல்லாது கொல்லோ அரிதன்னையும் வேலும் எல்லாம். 180

வாரார் கழற்கால் அமரராட மாய்ந்த வெள்ளம்
ஆயிரத்தின் மிகுமல்லதை மஞ்சு றுதால்
போமால் மன்பாங் கரின்நிற்பன பேசில் வெள்ளம்
ஓராயிரமே இரிகின்ற தொழிந்த தெல்லாம். 181

ஒன்றோ வரிவில் ஒருவேன்பிடித் தொன்ன லார்மேற்
சென்றோ அடல்செய் திலன்முன்னமென் சேனை யெல்லாங்
கொன்றோ னியானே பொரவிட்டனன் கூழை தன்னின்
நின்றோன் இஃதோர் பொருளென்று நினைந்தி லேனால். 182

தீருஞ் செயலை நினைந்தாவதென் சென்றி யானே
ஓரொன்று கண்பால் முடிகின்றமுன் ஒன்ன லார்தம்
பேரின் றெனவே அடுவேனது பெற்றி லேனேல்
சூரன் குமரன் அலன்யானெனச் சூள்மொழிந்தான். 183

பானுப் பகைவன் இவைகூறிப் பரிதி மான்தேர்
மானக் கடுங்கோல் வலவன் மரபிற் கடாவச்
சேனைக் கடலி னுடனசென்றுதன் செங்கை தன்னில்
கூனற் சிலையைப் புருவத் தினொடுங் குனித்தான். 184

மேதக்க தன்கைச் சிலைவாங்கி விளங்கும் வெள்ளி
சோதிக் கிறையாயுறும் எல்லையிற் சூல்கொள் மேகம்
மூதக்க பாரிற் சொரிந்தென்ன முனிந்து நேரும்
பூதப் படைமேற் சரமாரி பொழிதல் உற்றான். 185

பொழிகின்ற காலைத் திறன்மேதகு பூதர் நோக்கிக்
குழிகின்ற கண்ணின் அழல்காலக் குலாசலங்கள்
ஒழிகின்ற வெற்பு முழுதும்பறித் தொல்லை வீசி
அழிகின்ற காலத் துருமேறென ஆர்த்து நின்றார். 186

மன்றின் பகைஞன் தனைப்பூதர்கள் யாரும் வீசுங்
குன்றம் பலவும் புடைசுற்றக் குறித்து நோக்கி
ஒன்றங் கதனுக் கொருகோடி ஒண்கோல நாகத்
துன்றும் படியே முறைதூண்டித் துகள்செய் திட்டான். 187

வண்டூது பூந்தாரவன் வாளியின் மாய்ந்த குன்றம்
நுண்டூளி யாகியது வானிடை நொய்தின் ஏகி
விண்டோர்க டோறுஞ் செறிகின்றவர் மேனி தோயக்
கண்டூறி ஆற்றாதவர் விண்ணிடைக் கங்கை புக்கார். 188

தேவுந் தடந்தேர் ஒருவன்செரு வெல்லை முற்றும்
மேவிக் கரங்கில் திரிவொன்றனரி வில்லை வாங்கிக்
கோவைத் தொடையொன் றினில்ஆயிர கோடி வாளி
தூவிக் கணத்தின் தொகைமுற்றுந் தொலைவு செய்தான். 189

நன்கா லனீவி ரிளிர்கின்ற நறுநெய் தோய்ந்த
மின்கா லதனின் விரைகின்ற செந்தீயின் வெய்ய
முன்காலு கின்ற சுடருள்ளன மூன்று கண்ண
வன்காலன் அஞ்ச அடவல்லன வஞ்சன் வாளி. 190

தோளைத் துணிக்குங் கரந்தோடு துணிக்கு மார்பைத்
தாளைத் துணிக்கு மரிகுஞ்சித் தலைது ணிக்கும்
வாளைத் துணிக்கும் அணிமெய்வயப் பூதர் வாழ்க்கை
நாளைத் துணிக்கும் அசுரன்விடு நாம வெங்கோல். 191

சூரற் கினிய மகன்வாளி துணித்து வீச
வீரத்தின் மிக்க கணத்தின்றலை வீழு முன்னர்ச்
சீருற்ற சோரிப் புனல்சிந்துவ தீயர்சென்ற
பாரைப் புனிதஞ் செயுந்தன்மை படைத்த தன்றே. 192

பொன்சென் றிலங்குங் கணைதள்ளலும் பூதர் சென்னி
மின்சென்ற வானந் தெழச்சோரியு மீதெழுந்த
மன்சென் றனையாங் குமரன்படை ஏக லென்னுப்
பின்சென்று பற்றித் தருவான்றொடர் பெற்றி போலும். 193

எய்யுந் தொழிலுக் கவன்மேலவர் யாவர் எங்கள்
ஐயன் படையாகிய பூதர்தம் மாற்றல் மொய்ம்புங்
கையும் வரையுஞ் சிரமுங் கழற்காலும் மார்பும்
ஒய்யென் றறுக்கும் அவுணன்விடும் ஒன்றார் வாளி. 194

வானோர் தொகையைச் சிறையிட்டவன் மற்றிவ் வாறு
தானோர் சிலையின் வலியாலடத் தாவில் பூதர்
ஆனோர் அளப்பில்லவர் மாய்ந்திட ஆற்ற லில்லா
ஏனோர்கள் யாரும் உடைவார்இவை எண்ண லுற்றார். 195

மின்னும் புகர்வேலவன் அங்குளன் வீர வாகு
பின்னின்றனன் இத்துணை யான்பிற ராரு மற்றே

முன்னின்ற நம்மை இவன்அட்டிடு மொய்ம்பி லேம்யாம்
என்னிங்கு நிற்ப தெனப்பூதர் இரிந்து போனார். 196

இரிகின்ற பூதர் எவரும் படைக்கீற்றின் நின்ற
வரிகின்ற தண்டார் அடல்மொய்ம்புடை வள்ளல் பாங்கர்ப்
பரிகின்ற நெஞ்சத் தொடுசெல்லவப் பான்மை யாவுந்
தெரிகின்றனன் **உக்கிரன்** என்பதொர் சேனை வேந்தன். 197

கண்டுக் கிரனாகிய பூதன் கனன்று செங்கண்
விண்டிற் பெரிது நிவப்புற்று விளங்கு பொன்னந்
தண்டப்படை ஒன்றினை அங்கையில் தாங்கி யேகி
அண்டத் தவர்கள் புகழத்தனி ஆர்த்து நேர்ந்தான். 198

செற்றத்துடன் உக்கிரன் நேர்புகு செய்கை தன்னைக்
கற்றைக்கதி ரைத்தலை இட்டவன் கண்டு தன்கைக்
கொற்றச்சிலை யைக்குனித் தாயிர கோடி வாளி
முற்றத்துரந் தேயவன் யாக்கையை மூடி ஆர்த்தான். 199

மைக்கின்ற மேனி நெடும்பூதனை வஞ்சன் வாளி
தைக்கின்றில வானுதி மாய்ந்து தளர்ந்து வீழ்ந்த
**மெய்க்கின்ற இன்பும் அறனும் விளையாது வாளா**
**பொய்க்கின்ற வன்கைப் பொருள்வல்லையிற் போவ தேபோல்.** 200

விடுகின்ற வாளி பயனின்றயல் வீழ்த லோடும்
படுகின்ற தன்மை யதுகண்டனன் பானு கோபன்
அடுகின்ற தெவ்வா றிவன்றன்னையென் றங்கண் வானந்
தொடுகின்ற தாங்கோ ரெழுவத்தைச் சுழற்றி விட்டான். 201

தீயன்முச லந்தனை உக்கிரன் செங்கை தாங்கும்
ஆய்திண்கதை யாற்சிதைத் தேயவன் தேரை அண்மிப்
பாயும்பரி யைப்புடைத் தொல்லையிற் பாரின் வீட்ட
வேயென்று பல்காலிகழ்ந் தார்த்தனர் யாரும் வானோர். 202

புரவித் தொகுதி விளிவாகப் பொருவின் மைந்தன்
எரியிற் கனன்று புடை ஓரிரதத்தின் வாவி
வரிவிற் குனித்துக் ரென்ஏந்தும் வலிய தண்டம்
முரிவுற்றிட வேயொரு நூறு மொட்டம்பு தொட்டான். 203

நூறொண் கணை யால்அவன் தண்டம்நுனை றேள நாகச்
சீறுந்திறல் உக்கிரன் கைக்கொடு தீயன் மைந்தன்
ஏறுந்தடங் தேர்தனை வானின் எடுத்து வீச
வீறும் பரிதி பதத்தின்துணை மேய தன்றே. 204

துன்னான் மதலை வருகின்றது சூரன் நோக்கி
முன்னாளின் நின்று நமைப்பற்ற முயன்று ளான்கொல்
அன்னான் புணர்ப்பை உணரேன்அணித் தாகும் இன்னம்
என்னா வதோவென் றுளத்துன்னி இரிந்து போனான். 205

தண்டம திழைத்ததுந் தக்கன் வேள்வியை
விண்டிடு வித்ததும் வினவி லாய்கொலோ. 14

கடிமலர் மேலவன் இகழக் கண்ணுதல்
வடுகனை ஏவிவன் னுகிரின் அன்னவன்
முடிகளை வித்தது முகுந்தன் தன்னிடை
அடைதரு வித்ததும் அறிகி லாய்கொலோ. 15

முந்தொரு மகபதி மொய்ம்பை அட்டதும
ஐந்தியல் அரக்கரை அழித்த செய்கையும்
தந்தியை உழுவையை உரித்த தன்மையும்
எந்தைநிற் குணர்த்தினர் இல்லை போலுமால். 16

ஏமுற உலகடும் ஏனக கொம்பினை
ஆமையின் ஓட்டினை அணிநத தன்மையும்
பூமலர் மிசையவன் முதல புங்கவர்
மாமுடி அணிந்ததும மதிக்கி லாய்கொலோ. 17

கதித்திடு முனிவரர் கூடிய வேள்வியில்
உதித்திடு முயலகன் ஒல்லென் றார்த்தெழப்
பதத்தினில் உதைத்தவன் பதைப தைத்திட
மிதித்ததும பிறவுநீ வினவிற் றிலலையோ. 18

ஒன்னலர் தன்மைபூண் டுற்று ளோர்தமைத்
தன்னிகர் இல்லவன் தண்டம் செய்தன
இன்னமோர் கோடியுண் டிருந்தி யான்இவண்
பன்னினும் உலப்புறு செல்லும் பல்லுகம். 19

வேறு

ஆதலால் ஈசன் தன்னை அடைந்தவர் உய்வர் அல்லாப்
பேதையர் யாவ ரேனும் பிழைக்கலர் இனைய வாய்மை
வேதநூல் பிறவும் கூறும் விழுப்பொரு ளாகும் நீயும்
ஏதமா நெறியின் நீங்கி இப்பொருள் உணர்தி எந்தாய். 20

இன்னமொன் றுரைப்பன் நீமுன் இருந்தவம் இயற்ற இந்த
மன்னிலை புரிந்த மேலோன் மாற்றவும் வல்ல னுமால்
அன்னவன் குமரன் தன்னோ டமர்செய்வ தியல்போ ஐய
தன்னினும் உயர்ந்தா ரோடு பொருதிடில் சயமுண் டாமோ. 21

பூதல வரைப்பும் வானும் திசைகளும் புணரி வைப்பும்
மேதகு வரையும் தொன்னாள் வேறுபா டுற்ற நோக்கி
ஈதென மாயம் கொல்லென் றெண்ணினம் அனைய வெல்லாம்
ஆதிதன் குமரன் செய்த ஆடலென் றுரைத்தா ரன்றே. 22

அண்ணலங் குமரன் ஆடல் அறிகிலர் மருளுங் காலைக்
கண்ணிடை அன்னான் மற்றோர் வடிவினைக் காட்டி நிற்ப
விண்ணவர் பலரும் சூழ்ந்து வெகுண்டனர் வெம்போர் ஆற்றத்
துண்ணென அவரை அட்டாங் கெழுப்பினன் தூயோ னென்பர். 23

**எண்டொகை பெற்ற அண்டம் யாவையும் புவன வைப்பும்**
**மண்டுபல் வளனும் ஏனை மன்னுயிர்த் தொகுதி முற்றும்**
**அண்டரும் மூவர்தாமும் அனைத்துமா கியதன் மேனி**
**கண்டிட இமையோர்க் கெல்லாம் காட்டினன் கந்தன் என்பர்.** 24

மறைமுத லவனை முன்னோர் வைகலின் வல்லி பூட்டிச்
சிறையிடை வைத்துத் தானே திண்புவி அளித்து முக்கண்
இறையவன் வேண்ட விட்டான் என்பரால் இனைய வாற்றால்
**அறுமுகன் செய்கை கேட்கின் அற்புத மாகு மன்றோ.** 25

அங்கண்மா ஞாலம் தன்னை மேலினி அகழு மோட்டுச்
செங்கண்மால் ஏன யாக்கை எயிற்றையோர் சிறுகை பற்றி
மங்குல்வா னுலகிற் சுற்றி மருப்பொன்று வழுத்த வாங்கித்
தங்கணு யகற்குச் சாத்தச் **சண்முகன்** அளிக்கு மென்பர். 26

நேரலர் புரமூன் றட்ட நிருமலக் கடவுள் மைந்தன்
ஆரினும் வலியோன் என்கை அடைந்திட வேண்டுங் கொல்லோ
பாரினை அளந்தோன் உய்த்த பரிதியை அணியாக் கொண்ட
தாரகன் தன்னை வெற்பைத் தடிந்தது சான்றே அன்றோ. 27

அறுமுகத் தொருவ னாகும் அமலனை அரன்பால் வந்த
சிறுவனென் றிகழ்தல் மன்னு செய்கையால் பெரியன் கண்டாய்
இறுதிசேர் கற்பம் ஒன்றின் ஈறிலா தவன்பால் தோன்றும்
முறுவலின் அழலு மன்றோ உலகெலாம் முடிப்ப தம்மா. 28

வாசவன் குறையும் அந்தண் மலரயன் குறையும் மற்றைக்
கேசவன் குறையும் நீக்கிக் கேடிலா வெறுக்கை நல்க
வாசிலோர் குழவி போலாய் அறுமுகங் கொண்டான் எண்டோள்
ஈசனே என்ப தல்லாற் பிறிதொன்றை இசைக்க லாமோ. 29

கங்கைதன் புதல்வன் என்றுங் கார்த்திகை மைந்தன் என்றுஞ்
செங்கண்மால் மருகன் என்றுஞ் சேனையின் செல்வன் என்றும்
பங்கயன் முதலோர் தேறாப் பரஞ்சுடர் முதல்வன் தன்னை
இங்கிவை பலவுஞ் சொல்வ தேழைமைப் பால தன்றே. 30

பன்னிரு தடந்தோள் வள்ளல் பரிதியம் பகைவன் சூழ்வால்
தன்னுறு படைஞர் மாய்ந்த தன்மையை வினவித் தாழா
நன்னவர் மீளு மாற்றால் அளக்கர்மேல் விடுத்த வேலை
இந்நகர் தன்னில் தூண்டின் யாரிவண் இருத்தற் பாலார். 31

தாரகற் செற்ற தென்றால் தடவரை பொடித்த தென்றால்
வார்புனற் கடலுள் உய்த்த வலியறை மீட்ட தென்றால்
கூருடைத் தனிவேல் போற்றிக் குமரன்றாள் பணிவ தல்லால்
போரினைப் புரிதும் என்கை புலமையோர் கடன தாமோ. 32

அரனிடைப் பிறந்த அண்ணல் ஆணையால் வந்த தூதன்
இருநகர் அழித்தான் முன்னஞ் சேனையுந் தானு மேகி

ஒருபகற் பானு கோபன் உலைவறப் பொருது வென்று
கருதரும் அவுணர் தானைக் கடலையுங் கடந்து போனான். 33

இப்பகல் வந்து வீரன் இருஞ்சமர் இயற்ற எம்முன்
தப்பினன் மறைந்து மாயைப் படைதொடா உணர்ச்சி தள்ளி
அப்புனல் அளக்கர் உய்ப்ப அறுமுகன் வேலான் மீண்டுன்
மெய்ப்பதி யடுவான் என்றால் அவனையார் வெல்லற் பாலார். 34

இறுதியும் எய்தான் என்னின் ஏற்றதொல் லுணர்ச்சி மாய்ந்து
மறியினும் ஏறுவன் என்னின் மாயையந் தொலையும் என்னின்
செறியும்விண் முதல்வர் தந்த படைக்குநேர் செலுத்து மென்னின்
அறிஞர்கள் அவன்மேற் பின்னும் அமர்செயக் கருது வாரோ. 35

தூதெனை முன்னர் வந்தோன் ஒருவனால் தொலையும் இந்த
மூதெயில் நகர முற்றும் அவுணரும் முடிவர் என்னின்
ஆதியும் முடிவும் இல்லா அறுமுகன் அடுபோர் உன்னிப்
போதுமேல் இமைப்பின் எல்லாப் புவனமும் பொன்றி டாவோ. 36

கரங்கள்பன் னிரண்டு கொண்ட கடவுள்வந் தெதிர்க்கின் நந்தம்
வரங்களும் படைகள் யாவும் மாயையுந் திறலுஞ் சீரும்
உரங்களுந் திருவு மெல்லாம் ஊழிநா யகனமுன னுற்ற
புரங்களும் அவுண ருற்போற் பூழிபட் டழிந்தி டாவோ. 37

ஒற்றனை விடுத்து நாடி உம்பரை விடாமை நோக்கி
மற்றிவட் போந்து நம்மேல் வைகலும் வந்தி டாது
சுற்றுதன் தானை யோடுந் தூதனைத் தூண்டி அங்கண்
இற்றையின் அளவு நம்பாற் கருணைசெய் திருந்தான் ஐயன். 38

கருணைகொண் டிருந்த வள்ளல் கருத்திடைத் தொலைவில் சீற்றம்
வருவதன் முன்னம் இன்னே வானவர் சிறையை மாற்றி
உரியநந் தமரும் யாமும் ஒல்லையின் ஏகி ஐயன்
திருவடி பணிந்து தீயேஞ் செய்தன பொறுத்தி யென்று. 39

பணிந்துபின் அமல மூர்த்தி பலவுநாம் புரிந்த தீமை
தணிந்தருள் செய்து தானுந் தணப்பிலா வரங்கள் நல்கி
அணிந்ததன் தானை யோடும் அகலுமால் உய்தும் யாமும்
துணிந்திது புகன்றேன் ஈதே துணிவென மதலை சொற்றான். 40

வேறு

பரிந்துதனக் குறுதியிவை தெருட்டுதலும் அதுகேளாப் பகுவாய்
கால, விரிந்தபுகைப் படலிகைபோய்த் திசையனைத்தும் விழுங்கியிட
வெகுளி மூளக், கரிந்ததன துடல்வியர்ப்ப உயிர்ப்புவர இதழ்துடிப்
பக் கண்கள் சேப்ப, எரிந்துமனம் பதைபதைப்ப உருமெனக்கை
எறிந்துநகைத் தினைய சொல்வான். 41

தூவுடைய நெடுஞ்சுடர்வேல் ஒருசிறுவன் ஆற்றலையும் தூதாய்
வந்த, மேவலன்தன் வலியினையும் யான்செய்யப் படுவனவும் விளம்பா
நின்றாய், ஏவருனக் கிதுபுகன்றார் புகன்றுரை உணர்வேனேல்

இன்னே அன்னோர், ஆவிதனைக் களைந்திடுவேன் ஆங்கவர்தொல் குலங்களெலாம் அடுவன் யானே. 42

ஞாலமெலா முன்படைத்த நான்முகன்ஐந் தியலங்கம் நவின்று போவான், ஆலமிசைத் துயில்கூர்வான் என்னிளவல் தனக்குடைந் தான் அமரர் கோமான், வேலைதனின் மீன்முழுதும் என்பணியில் தந்தனனால் வெள்ளி வெற்பின், நீலமிடற் றவன்மகனோ தொலைவறு மென் பேராற்றல் நீக்கு கின்றான். 43

அரியயனும் புரந்தரனும் விண்ணவர்க ளெல்லோரும் அகிலந் தன்னின், விரவுகணத் தவரொவரும் யார்க்குமுத லாகுமுக்கண் விமலன் தானும், பொருபமரின் ஏற்றிடினும் எனக்கரிவ தன்றிவென்று போவ துண்டோ, ஒருசிறிதும் புந்தியிலா மைந்தாயான் பெற்றவரம் உணர்கி லாயோ. 44

வேறு

ஆற்றல் விட்டனை குலமுறை பிழைத்தனை அரசின்
ஏற்றம் நீங்கினை ஒன்னலர்க் கஞ்சினை இசைத்தாய்
மாற்றம் ஒன்றினி உரைத்தியேல் உன்றனை வல்லே
கூற்று வன்புரத் தேற்றுவன் யானெனக் கொதித்தான். 45

கொதித்த வேலையின் மைந்தனும் நம்முறை கொடியோன்
மதித்தி லன்இவன் மாய்வது பரதமே வானமேல்
உதித்த செங்கதிர்ப் பரிதியங் கடவுளசூழ் உலகில்
விதித்தி றந்தனை யாவரே வனமையால வென்றோர். 46

இறுதி யாகிய பருவம்வந் தணுகிய திவனுக்
குறுதி யாம்பல கூறினென் பயனென உன்னா
அறிவன் நீசில அறிந்தனன் போலநிற் கறைந்தேன்
சிறுவன் ஆதலிற் பொறுத்தியென் றுற்றினன் சீற்றம். 47

வெஞ்சி னந்தனை ஆற்றியித் தாதைதான் விரைவில்
துஞ்சு முன்னர்யான் இறப்பது நன்றெனத் துணியா
எஞ்ச லில்லவன் தாளிணை வணங்கிநீ யிசைத்த
வஞ்சி னந்தனை முடிப்பன்யான் என்றனன் மைந்தன். 48

அனைய வேலையில் ஐயநீ மாற்றலர்க் கஞ்சி
வினையம் யாவுமுன் னுரைத்தனை அவர்கள்பால் வீரம்
புனைய உன்னிய தென்கொலோ என்றலும் பொன்னோன்
உனது மைந்தன்யான் அஞ்சுவ னோவென உரைத்தான். 49

தாதை அன்னதோர் வேலையின் மைந்தனைத் தழீஇக்கொண்
டேது நன்றுநன் றுன்பெருந் தானையோ டெழுந்து
போதி யென்றலும் விடைகொடு புரந்தனில் போந்து
மாதி ரம்புகழ் கின்றதன் னுறையுளில் வந்தான். 50

நிறங்கொள் மேருவை நிலாக்கதிர் உண்டநீர் மையைப்போல்
மறங்கொள் சூர்மகன் ஆடக மெய்யில்வச் சிரத்தின்

திறங்கொள் சாலிகை கட்டினன் தூணிபின் செறித்தான்
பிறங்கு கோதையும் புட்டிலும் கைவிரல் பெய்தான். 51

அடங்க லர்க்குவெங் கூற்றெனும் ஆடல்வில் லொன்றை
இடங்கை பற்றினன் வலங்கையில் பலபடை எடுத்தான்
தடங்கொள் மோலியில் தும்பையஞ் சிகழிகை தரித்தான்
மடங்கல் ஆயிரம் பூண்டதேர் புக்கனன் வந்தான். 52

ஆற்றல் மிக்குறு துணைவர்ஆ யிரவரும் அனிகம்
போற்று மன்னர்ஆ யிரவரும் போரணி புனைந்து
காற்றெ னப்படர் கவனமான் தேரிடைக் கலந்து
நாற்றி றற்படை தன்னொடு புடைதனில் நடப்ப. 53

நூறொ டேயெழு நூறுவெள் ளங்கொறி லுடைத்தேர்
சீறும் யானையும் அத்தொகை அவுணர்தஞ் சேனை
ஆறு நூற்றிரு வெள்ளத்த பரிகளும் அனைத்தே
சூறை மாருத மாமென அவன்புடை சூழ்ந்த. 54

துடிக றங்கின கறங்கின பேரிதுந் துபிப்பேர்
இடிக றங்கின வலம்புரி கறங்கின எடுக்கும்
கொடிக றங்கின தானைகள் கறங்கின குனித்துக்
கடிக றங்கின கறங்கின கழுகொடு காகம். 55

வசலை மென்கொடி வாடிய நன்ன நுண் மருங்கில்
கிசலை யம்புரை சீறடிக் கிஞ்சுகச் செவ்வாய்ப்
பசலை சேர்முலை மங்கையர் விழிக்கணை பாய
வசலை மங்கைதன் மெய்த்தனு வளைந்திட அகன்றான். 56

அறந்த லைப்படும் இரணியன் அனிகநால் வகையும்
புறந்த லைப்படத் துயரமும் தலைப்படப் போந்து
மறந்த லைப்படு பூதர்கள் ஆர்ப்பொலி வழங்கும்
பறந்த லைக்களம் புக்கனன் அமரர்மெய் பனிப்ப. 57

விண்ணு ளோர்களும் பிறருமவ் வியனகர் நோக்கித்
துண்ணெ னத்துளங் குறுவதுங் கண்டனன் தொன்னாள்
மண்ணி னுள்ளபா ரிடமெலாம் வல்லைவந் தழித்து
நண்ணு கின்றதுங் கண்டனன் நன்றென நக்கான். 58

தனது மாநகர் அழிந்தது கண்டனன் தணியா
முனிவு கொண்டனன் வெய்துயிர்த் தனன்உடல் முற்றும்
நனிவி யர்ப்புள தாயினன் மருங்குற நணுகும்
அனிக வேந்தரைத் துணைவரை நோக்கியீ தறைவான். 59

ஆயி ரம்வெள்ளம் ஓரொரு திசையினில் ஆக்கி
நீயிர் யாவரும் நால்வகைத் தாகியே நீங்கி
மாயி ருந்திறற் சாரதன் வீரரை வளைந்து
போயெ திர்ந்துவெஞ் சமர்புரி வீரெனப் புகன்றான். 60

அக்க ணந்தனில் துணைவரும் அனிகமன் னவருந்
தக்க தேயென இரணியன் மொழிதலைத் தாங்கித்
திக்கி லாயிரம் வெள்ளமாச் சேனையைக் கொண்டு
தொக்க பாரிட வெள்ளமேற் போயினார் சூழ. 61

தானை மன்னரும் துணைவரும் திசைதோறும் தழுவிப்
போன காலையில் ஆடகன் குடபுலம் புகுதுஞ்
சேனை முன்கொடு சென்றனன் இன்னதோர் செய்கை
மான வேற்படைக் காவலன் கண்டனன் மனனே. 62

வீர மொய்ம்பினன் அதுகண்டு வெஞ்சமர்க் குறுவான்
சூரன் மைந்தருள் ஒருவனே சுற்றமா யினனே
ஆரி வன்கொலென் றையுறு காலையின் அயலே
நார தன்எனும் முனிவரன் வந்திவை நவில்வான். 63

இரணி யன்எனும் மைந்தனைச் சூரன்இங் கேவ
அருணன் என்னவந் திடைந்தனன் அம்படை யலைப்ப
வருணன் இந்திரன் மந்திரி மறலிமா திரத்தின்
முரணு றும்படை நான்கையும் முன்னுறச் செலுத்தி. 64

மாயை வல்லவன் படைபல பரித்தவன் வஞ்ச
மாய சூழ்ச்சிகள் பற்பல தெரிந்தவன் அவனை
நீய லாதுவெல் கின்றவர் இல்லையால் நினக்கிங்
கேய தன்மையின் அமர்தனைப் புரிதியா லென்றான். 65

என்று கூறியே நாரதன் விண்மிசை ஏக
நன்று நன்றென அன்னதை வினவியே நகைத்துத்
துன்று பாரிடத் தலைவரைச் சுற்றமா யுளரை
வென்றி மொய்ம்புடை அண்டகை நோக்கியே விளம்பும். 66

ஏற்ற தானையை நமையெலாம் சூழ்ந்திட ஏவி
மாற்ற லன்மகன் குறுகுவான் நீவிரும் வல்லே
நாற்றி சைக்கணும் சாரதப் படையொடு நடந்து
வீற்று வீற்றுநின் றமர்புரி வீரென விளம்பி. 67

வீரர் எண்மரை இலக்கரை வியன்கணத் தவரைப்
பாரி டங்களை நால்வகைப் படும்வகை பகுத்தே
ஈரி ரண்டுமா திரத்தினும் சென்றிட ஏவிச்
சூரன் மாமகன் வருதிசைப் படர்ந்தனன் தோன்றல். 68

காலை யாங்கதின் அவுணமாப் பெரும்படை கடிதின்
நாலு மாதிரந் தன்னினும் நரலைசூழ்ந் தென்ன
ஓல மோடுவந் தணுகலும் உருத்துவெம் பூத
சாலம் யாவையும் ஏற்றன சமரினைப் புரிய. 69

மற்ற வேலையில் அவுணர்கள் மழுப்படை நாஞ்சில்
கற்றை யஞ்சுடர்ப் பரிதிவார் சிலையுமிழ் கணைகள்

கொற்ற மிக்குறு தோமரந் தண்டெழுக் குலிசம்
ஒற்றை முத்தலை வேல்முதற் படையெலாம் உய்த்தார். 70

தோடு சிந்திய தேனறு மராமரத் தொகையின்
காடு சிந்தினர் கதைகளுஞ் சிந்தினர் கணிச்சி
நீடு சிந்துரப் பருவரை சிந்தினர் நேமி
மாடு சிந்தினர் சிந்தினர் பூதரில் வலியோர். 71

தலையி ழந்தனர் கரங்களும் இழந்தனர் தாளின்
நிலையி ழந்தனர் சாரதர் அவுணரும் நெடுங்கை
மலையி ழந்தனர் தேர்பரி இழந்தனர் மறவெங்
கொலையி ழந்தனர் மடிந்தனர் குருதியுட் குளித்தார். 72

வரையில் பூதரும் அவுணரும் இவ்வகை மயங்கித்
திசைதொ றும்பொரு கின்றுழித் தனித்தனி சேர்ந்து
விரைய மொய்ம்பினான் விடுத்திடு வீரரும் விறல்சேர்
அசுர வேந்தரும் வெஞ்சமர் விளைத்தனர் அன்றே. 73

அனைய எல்லையின் வீரவா குப்பெயர் அறிஞன்
கனகன் முன்வரும் சேனைமாப் பெருங்கடல் கண்டு
முனிவு கொண்டுதன் பாணியின் மூரிவெஞ் சிலையைக்
குனிவு செய்தனன் அறத்தனிக் கடவுளும் குனிப்ப. 74

மலைவ ளைத்திடு தன்மைபோல் வானுற நிமிர்ந்த
சிலைவ ளைத்தனன் நாணொலி யெடுத்தனன் தெழித்தான்
அலைவ ளைத்திடு கடலெலாம் நடுங்கிய அனந்தன்
தலைவ ளைத்தனன் எண்டிசை நாகமும் சலித்த. 75

காலை யங்கதின் வீரமொய்ம் புடையதோர் காளை
கோலொ ராயிரப் பத்தினைக் குனிசிலைக் கொளுவி
மேல தாகிய கானிடைப் பொழிதரும் மேக
சால மாமெனப் பொழிந்தனன் அவுணர்தா னையின்மேல். 76

பிடிகு றைந்தன களிற்றினம் குறைந்தன பிடிக்கும்
கொடிகு றைந்தன கொய்யுளைப் புரவிதேர் குறைந்த
அடிகு றைந்தன தலைகளும் குறைந்தன அம்பொன்
தொடிகு றைந்தன குறைந்தன அவுணர்தம் தோள்கள். 77

எறித லுற்றிடு சூறையால் பல்கவ டிற்று
முறித லுற்றுவீழ் பொதும்பர்போல் மொய்ம்பன்வா ளியினால்
செறித லுற்றதம் வடிவெலாம் சிதைந்துவே றாகி
மறித லுற்றன நால்வகைப் படைகளும் மயங்கி. 78

வேறு

ஆரியன் விட்ட அயிற்கணை பாய
மூரி மதக்கரி முற்றுயர் யாக்கை
சோரி உகுப்பன தொல்பக லின்கண்
மாருதம் உய்த்திடு வன்னியை யொப்ப. 79

விறல்கெழு மொய்ம்பன் விடுத்திடு கின்ற
பிறைமுக வாளி பெருங்கரி யின்கை
அறைபுரி கின்றஅ ராத்தொகை தன்னைக்
குறைமதி சென்று குறைப்பன போலாம். 80

வித்தக வீரன் விடுங்கணை வேழ
மத்தக முற்றிட மற்றவை போழ்ந்தே
முத்தம் உகுப்ப முகந்திடு கும்பம்
உய்த்திடும் நல்லமு தச்சுவை யொக்கும். 81

கரம்பட ருங்கவி கைத்தொகை தேரின்
உரம்படு கால்கள் உலம்புரை தோளான்
சரம்பட விற்ற தலைத்தலை உற்று
வரம்பின் மதிக்குறை மல்கிய வென்ன. 82

மேக்குயர் மொய்ம்பன் விடுங்கணை யால்பாய்
மாக்கள் துணிந்து மறிந்து கிடந்த
தேக்கிய தெண்கட லிற்றிரை முற்றும்
தாக்கிய சூறை தனக்குரிந் தென்ன. 83

பெருந்தகை விட்ட பிறைத்தலை வாளி
திருந்தலர் தோளுறு செங்கை துணிப்ப
வருந்திட மாமதி வெளவும்அ ராவைந்
துரந்திடு கின்றதன் சுற்றம தென்ன. 84

வேறு

தக்க வன்மையால் சிறந்துளோர் தமதுமாற் றலர்மேல்
மிக்க வெஞ்சினத் தேகல்போல் அனிகவெள் ளத்தில்
தொக்கு வந்துவந் திரிந்தசெஞ் சோரியின் வெள்ளம்
மைக்க ருங்கடல் வெள்ளத்தி னூடுபோய் மடுத்த. 85

குரைத்தி டும்பெரு ஞாளியும் குறுநரிக் குழாமும்
நிருத்த மேயின கவந்தமும் பிணனுண்டு செருக்கி
உருத்த குந்திறல் காளியும் கூளியும் ஒருசார்க்
கிருத்தி மங்களும் தலைத்தலை மயங்கின கெழுமி. 86

சிலையின் வல்லவன் இவ்வகை கணைமழை சிதறி
நிலைய வெல்லையின் மலைந்திடும் தானவர் நீத்தம்
உலைப டுங்கனல் முன்னுறும் இழுதென உடைந்து
குலைகு லைந்துதம் உயிருடன் யாக்கையுங் குறைந்த. 87

ஆளி யாயிரம் பூண்டதேர் மிசைவரும் அவுணர்
மீளி யாயது கண்டனன் எடுத்ததோர் வில்லின்
வாளி யாயிரம் ஒருதொடை தூண்டியே மறவெங்
கூளி யாயிர கோடியோ ரிமைப்பினில் கொன்றான். 88

கொன்ற காலையில் பூதவெம் படைகளும் குலைந்து
சென்ற மாதிரம் தெரிந்தில தழல்விடம் தெறக்கண்

டன்று போகிய தேவரே ஆயினர் அதனை
நின்ற தானையம் தலைவரில் கண்டனன் நீலன். 89

கண்ட நீலனும் இறுதிநாள் அழலெனக் கனன்று
திண்டி றற்கெழு மன்னவன் மதலைமுன் சென்றே
அண்ட முந்தலை பனித்திட உருமென ஆர்த்தான்
உண்டு போரினி என்றனர் அமரரா யுள்ளோர். 90

காலை யனனதில் அவுணர்தம் இறைமகன் கனன்று
வேல தொன்றினை ஆகமூழ் குற்றிட விடுப்ப
நீலன் வன்மைபோய் நின்றிலன் சென்றனன் நெடிய
சால மொன்றுகொண் டவன்தடந் தேரினைத் தடிந்தான். 91

வையம் அங்கழி வெய்தலும் அவுணர்கோன் மற்றோர்
செய்ய தேரிடை வல்லையில் தாவிநாண் செறித்துக்
கையில் வாங்கிய சராசனத் திடையுறாக் கடைநாட்
பொய்யின் மாமுகி லாமெனச் சுடுசரம் பொழிந்தான். 92

பொழிந்த வார்கணை முழுவதும் அவனுரம் புகலும்
அழிந்தி லன்சிறி தஞ்சிலன் குலகிரி அன்றி
ஒழிந்த குன்றெலாம் பறித்தனன் வீசியே உடலத
திழிந்த சோரிநீர் சொரிதர நின்றனன் இமையான். 93

நிருப னாகிய ஆடகன் தன்னெதிர் நீலன்
மரபின் நூக்கிய வரையெலாஞ் சரங்களால் மாற்ற
விரைவி னோடுபோய் அவன்தடந் தேரினை வெகுளா
ஒருகை யாலெடுத் தெறிந்தனன் அமரரும் உலைய. 94

ஆற்ற லந்தடந் தேரினை வீசிட அதுவுங்
காற்று லாய்நிமிர் விண்ணுறப் போயது காலை
மாற்றொர் வையமேற் பாய்ந்திட உன்னினன் வரலும்
ஏற்றெ ழுந்தெதிர் புக்கனன் நீலனும் இகலோன். 95

நிற்றி நிற்றிநீ என்றுகொண் டேகியே நீலன்
எற்றி னான்அவன் உரத்திடை அவுணனும் இவனைப்
பற்றி வீசினன் பூதனும் மீண்டுதன் பதத்தாற்
செற்ற மோடுதைத் துருட்டிவான் உருமெனத் தெழித்தான். 96

நெறிந்த பங்கிசேர் நீலனங் குதைத்திட நிருதர்
முறிந்து நீங்கிய களத்திடை வழுக்கிவீழ் முகில்போல்
மறிந்து வீழ்தரும் அவுணன்மேற் பாய்ந்தனன் மகவான்
எறிந்த வச்சிரப் பெரும்படை இதுகொலென் றிசைப்ப. 97

வீழ்ந்த காளையைத் தன்பெருந் தாள்களால் மிதிப்பக்
கீழ்ந்து போயது மாநிலம் அவன்முடி கிழிந்த
போழ்ந்த தாகமும் வாய்வழி குருதிநீர் பொழிய
வாழ்ந்து வெந்துயர் உழந்தனன் செய்வதொன் றறியான். 98

திறலழிந்தனன் சீற்றமும் அழிந்தனன் செங்கோல்
மறலி கொள்வதற் கணியனே ஆதலும் மனத்தில்
இறுதி எய்திய திங்கினிச் செய்வதென் எமக்கோர்
உறுதி யாதென உன்னினன் பின்னரொன் றுணர்ந்தான். 99

மாயம் ஒன்றினைப் புரிகுதும் யாமென வல்லே
ஆய மந்திரம் புகன்றனன் பூசனை அனைத்தும்
தூய சிந்தையால் நிரப்பினன் வேண்டிய துணியா
ஆய தெய்வதம் உன்னினன் அன்னதோர் எல்லை. 100

வேறு

தன்போலொரு வடிவன்னதோர் அமரின்தலை அனுகா
மின்போலொளிர் தருபல்படை விரவும்படி பரியா
என்போலெவர் பொருகின்றவ ரெனவீரம துரையா
வன்போரது புரியும்படி வலிகொண்டுமுன் வரலும். 101

கண்டானது வருகின்றது கடிதேயெதிர் நடவா
எண்டானவர் அமரின்தலை யிட்டேகிய தொருபொற்
றண்டானது கொண்டேஅதன் தலைமோதினன் இமையோர்
விண்டானிவற் கழிந்தானென நீலன்தனை வியந்தார். 102

வியக்கும்பொழு தினில்அன்னவன் விடுமாயமும் விரையால்
உயக்குற்றவ ரெனவிண்மிசை உயர்கின்றது காணாத்
துயக்குற்றிடு நீலன்னது தொடர்ந்தான்கரந் திடலும்
மயக்குற்றனன் நெடிதுன்னினன் மண்மீமிசை கண்டான். 103

காணுவல மருவானிது கரவாமென உணரான்
நாணுல்மிகு சீற்றத்தொடு நணுகுற்றனன் அதுவுந்
தூணேர்தடந் தோள்கொண்டமர் தொடங்குற்றது தொடங்கிச்
சேணுகிய தணித்தாயது திசையெங்கணுந் திரியும். 104

பாரிற்புகும் விண்ணிற்புகும் பரிதிச்சுட ரெனவே
தேரிற்புகும் மாவிற்புகும் சிலையிற்புகும் திரைமுந்
நீரிற்புகும் வடவாமுக நெருப்பிற்புகும் நீலக்
காரிற்புகும் நிரயத்திடை கடிதிற்புகும் எழுமே. 105

முன்னேவரும் இடத்தேவரும் முதுவெம்பிடர் தழுவிப்
பின்னேவரும் வலத்தேவரும் பெரும்போரினைப் புரியும்
பொன்னேகரு தியமங்கையர் புலனுமெனத் திரியும்
என்னேஅதன் இயல்யாவையும் யாரேபுகல் வாரே. 106

மாலுந்திறம் இதுபெற்றியின் வருகின்றதொர் மாயக்
கோலந்தனி தொடராவலி குறைந்தான்திரிந் துலைந்தான்
காலுந்தளர் கின்றானவன் கல்வித்திறம் புகழா
மேலென்செய லெனஉன்னி வெகுண்டான்அடல் வீரன். 107

வென்றார்புகழ் தருவீரனும் வினையந்தனை உன்னி
நின்றான்அது காலந்தனில் நிருதன்றனி துருவம்

ஒன்றாயது பலவாயுல கெல்லாமொருங் குறலால்
நன்றாமிது மாயம்மென நாணத்தொடு நவின்றான். 108

திண்டோளுடை நீலன்னிது தெளிகின்றுழி அவனால்
புண்டோய்தரு குருதிப்புனல் புடைபோதரப் புவிமேல்
விண்டோனென மறிகின்றவன் மிடல்பெற்றெழுந் திதனைக்
கண்டோர்தடந் தேரேறினன் மாயத்தொடு கலந்தான். 109

கலந்தானொரு சிலைவாங்கினன் கனல்வாளிகள் தெரியா
உலந்தானுறழ் தருமெய்யிடை உய்த்தானவன் பொங்கர்
மலர்ந்தாலென உரம்புண்பட வடிவாளிகள் படநின்
றலந்தான்மன மெலிந்தான்பொரு தலுத்தான்மிகச் சலித்தான் 110

## வேறு

ஈண்டு சீர்த்தி இரணியன் மாயமும்
ஆண்டு நீலன் அயர்வது நோக்குறாப்
பூண்ட வாகைப் புயத்தவன் சீறியே
தூண்டு தேரொடு துண்ணென நண்ணினான். 111

தாங்கு கின்றதன் தாழ்சிலை தோள்கொடே
வாங்கி நாணியின் வல்லிசை கோடலும்
வீங்கு மொய்ம்பின் விறல்கெழு தானவர்
ஏங்கி யாரும் இரிந்தனர் போயினார். 112

சோதி நெற்றிச் சுடர்த்தனி வேலினான்
பாத மெய்த்துணை பன்முறை போற்றிடா
ஆத ரத்தின் அருச்சனை ஆற்றியே
பேத னப்படை செங்கையின் வாங்கினான். 113

தூய போதகத் தொல்படை அன்னவன்
மாயை மேல்விட மற்றதன் பட்டிமை
ஆயி ரங்கதிர் ஆதவன் நேர்புறப்
போய கங்குல் நிசியெனப் போந்ததே. 114

போந்த காலைப் புலம்புறு தானவர்
ஏந்த லேத மியாக எரியெனக்
காந்தி நின்றவன் காமர்வில் வாங்கியே
ஆய்ந்து தீங்கணை ஆயிரம் தூண்டினான். 115

தூண்டு கின்ற சுடுகணை வீரமார்த்
தாண்டன் முன்னவன் தன்வரை மார்புறா
மீண்டு நுண்டுகள் ஆதலும் மேலது
காண்ட லுஞ்சுரர் கையெடுத் தார்த்தனர். 116

பொறுத்த வாகைப் புயன்வலி வெவ்விடர்
நிறத்த நூறு நெடுங்கணை தூண்டியே
எறித்த சீர்த்தி இரணியன் கேதனம்
அறுத்து வில்லொ டரணமுஞ் சிந்தினான். 117

பொருவில் சாலிகை போதலுஞ் சூர்தரும்
திருவில் கோமகன் செங்கரம் தன்னில்வே
றொருவில் கொள்ளவொ ராயிரம் வெங்கணை
விரைவில் தூண்டினா னல்விறல் மொய்ம்பினான். 118

விடுத்த வாளிகள் வெவ்விறல் ஆடகன்
எடுத்த வாளி இருஞ்சிலை பின்னுறத
தொடுத்த தூணிமுன் தூண்டிய பாகுதேர்
படுத்து மார்பகம் பல்றுளை செய்தவே. 119

செய்ய வேறொரு தேர்மிசைச் சூரருள்
வெய்யன் வாவலும் வீரருள் வீரனும்
ஐயன் வாளிகொண் டன்னது மட்டிட
மையல் எய்தி இருந்தனன் வன்மையே. 120

வேறு பின்னரும் மேதகு சூர்மகன்
ஏறு தேர்க ளியாவையும் செல்லுமுன்
நூறு நூறு கணைகளின் நூறியே
ஈறு செய்தலும் ஏங்கியி தெண்ணினான். 121

இந்த வேலை இடர்ப்படு மென்றனக்
கந்த மெய்திய தன்னவ னல்உயிர்
சிந்தும் என்னொடு தீர்வது வோஇனித்
தந்தை யாரும் இறத்தல் சரதமே. 122

இற்ற காலை இருங்கடன் செய்திட
மற்றி யாவரும் இல்லைஇம் மாநகர்ச்
சுற்ற மானவ ருந்தொலைந் தார்இனி
உற்று ளோரும் இறப்பரி துண்மையே. 123

உறுதி யாவ துரைக்கவும் ஆங்கது
வறிது மோர்கிலா மன்னவன் மாயுமுன்
இறுவ தேகடன் இற்றில னேயெனின்
அறுவ தோளன் அகத்திட ராயினும். 124

ஒய்யெ னச்சுர ரோடவென் கண்டஎன்
ஐயன் மற்றினித் துஞ்சின் அருங்கடன்
செய்வ தற்கொரு சேயுமின் றுலெனின்
வைய கத்தில் வசையதுண் டாகுமே. 125

மைந்த னைப்பெறு கின்றது மாசிலாப்
புந்தி அன்பொடு போற்றி வளர்ப்பதும்
தந்தை மாண்டுழித் தம்முறைக் கேற்றிட
அந்த மில்கடன் ஆற்றுதற் கேயன்றே. 126

அசைவி லாத அமரிடைத் துஞ்சிடின்
இசைய தாகும்இ றந்தில னேயெனில்

தசையு லாமுடல் தாங்கிஉய்ந் தானெனா
வசைய தாகுமென் வன்மையும் துஞ்சுமே. 127

என்னை எய்தும் இசையது வேயெனின்
மன்னை எய்தும் வசையுரை ஆங்கதன்
றென்னை எய்தினும் எய்துக நந்தைபால்
அன்ன தாதல் அழகிதன் றலெனா. 128

ஆவ துன்னிஎன் னாருயிர் போற்றியே
போவ தேகடன் என்று பொருக்கெனத்
தாவி வான்முகில் தன்னிடைப் போயொரு
தேவ மந்திரம் சிந்தையில் உன்னினான். 129

உன்ன லோடும் உருவரு வாதலும்
தன்னை யாரும் தெரிவரும் தன்மையால்
பொன்னு லாய புணரியுட் போயினான
மினனு தண்சுடர் மீனுரு வாகியே. 130

ஆண்டு போன அவுணன்அம் மாநகர்
மீண்டு செல்கிலன் மேல்வினை யின்றனை
காண்டும் நந்தம் கடன்முடிக் குந்துணை
ஈண்டு வைகுதும் என்றவண் மேவினான். 131

ஆய காலையில் ஆடகன் செய்திடு
மாயை யாமெனக் கங்குலு மாய்ந்திடத்
தூய போதகத் தொல்படை தோன்றல்போல்
சேயி ருங்கதிர்ச் செல்வனவந் தெய்தினான். 132

ஆங்கு வெய்யவன் அப்படை போலெழு
நீங்கு மாயையின் நீள்நில வற்றிட
ஏங்கி யோடும் இரணிய னாமெனா
ஓங்கு திங்கள் உததியில் போயினான். 133

நீங்கு சூர்மகன் நீர்மையை நோக்கியே
வீங்கு தோளுடை வீரன்நம் மாற்றலன்
ஓங்கும் ஆழியுள் ஓடினன் தோற்றெனா
ஏங்கு சங்கம் எடுத்திசைத் தானரோ. 134

சங்கம் வாயிடைக் கொண்டுதன் சீர்த்தியை
எங்கு ளோரும் தெளிய இசைத்துழிப்
பொங்கு பூதர் புகழ்ந்தனர் வாழியென்
றங்கண் வானவர் ஆசிசெய் தார்க்கவே, 135

நின்ற வீரர்கள் நேரலர் சேனையைப்
பொன்று வித்தனர் போரிடைத் தூதுவர்
சென்று காலொடு சிந்தையும் பிற்பட
மன்றன் மாநகர் மந்திரம் எய்தினார். 136

மந்தி ரத்துறை மன்னை வணங்கினீ
நந்த அக்கும ரன்சமர்க் காற்றலன்
உய்ந்தி டக்கொல் உவரையொர் சூழ்ச்சியால்
சிந்தி டக்கொல் அகன்றனன் சிந்துவில். 137

என்று தூதர் இசைத்தலும் மன்னவன்
குன்றி வெள்கிக் கொடுஞ்சினம் கொண்டிடா
தொன்று மாற்றம் உரைத்திலன் அவ்வழிச்
சென்ற னன்கனல் மாமுகச் செம்மலே. 138

ஆகத் திருவிருத்தம் - 1,303



# 8. அக்கினிமுகாசுரன் வதைப் படலம்*

—oo—

எட்டாயையு ளோர்களை எண்கரியைக்
கட்டாவுறு சில்கதி ரைப்பரியை
முட்டாவரு தேரினை முன்கொணரா
வட்டாடிய தோர்வலி பெற்றுடையான். 1

கருவாயுறு இன்றதொர் காலைமுதல்
திருமாதுடன் முற்றழல் சிந்திடலும்
பெருமாயவள் வந்துபி றந்திடுவோன்
எரிமாமுகன் என்ற இயற்பெயரான். 2

பன்னுக மிசைத்துயில் பண்ணவனூர்
பொன்னூர்சிறை கொண்டதொர் புள்ளினுடன்
அந்நான்முக னூர்தியும் ஆடுறுவான்
முன்னாட்கொடு வந்ததொர் மொய்ம்புடையான். 3

முன்னும்றவன் வானெழு மொய்கதிரோன்
தன்னைச்சிறை யிட்டது தான்வினவா
மன்னூற்றிடு சோமனை வைகல்பல
இன்னற்பட வேசிறை இட்டுடையான். 4

தெய்வப்படை தாங்கிய செங்கையினான்
ஐவர்க்குள தாகிய ஆற்றலுளான்
மைவைத்திடும் வஞ்சனை மாயம்வலான்
எவ்வெப்படை தன்னையும் ஈறுசெய்வான். 5

அந்தார்முடி கொண்டிடும் ஐயன்முனம்
வந்தானடி தன்னை வணங்கியிவண்

* நாலாநாட் பகல் அக்கினிமுகாசுரன் வதை நிகழ்ந்ததாகும்

எந்தாய்மெலி வுற்றனை என்னெனலுஞ்
சிந்தாகுல மோடிது செப்பிடுவான். 6

உண்ணாடிய மாயைகொ டொற்றுமையால்
விண்ணாடர் பொருட்டிவண் மேவியுளான்
கண்ணாரெயில் வேலி கடந்துநமை
எண்ணாது புரத்திடை ஏகினனால். 7

ஏகுந்தொழில் வெய்யவன் இந்நகரம்
வேகும்படி செந்தழல் வீசிடலும்
மாகொண்டல்கள் ஏவினன் மற்றவைமா
றாகும்புனல் சிந்தி அவித்தனவே. 8

மடல்கொண்டிடு தாரினன் மற்றதுகண்
டடல்கொண்ட சினத்தொ டொருங்குலகங்
கடைகொண்டிடு கின்ற கனற்படைதொட்
டடல்கொண்ட முகிற்றிறல் அட்டனனே. 9

அட்டானது கேட்டனம் ஆடகனை
விட்டாம்அனி கத்தொடு வெஞ்சமர்செய்
தொட்டார்வலி நோக்கி உடைந்தவனும்
நெட்டாழி புகுந்து நிமிர்ந்தனனால். 10

நங்கொற்ற மிகுத்திடு நாற்படையும்
அங்குற்றிடு கின்றன மாநகரை
உங்குற்றிடு தூதன் ஒருத்தனனால்
இங்குற்ற நிகழ்ச்சியி தென்றனனே. 11

செங்கோன்முறை கோடிய தீயவுணன்
அங்கோதிய கேட்டலும் ஆரழல்கால்
வெங்கோரமு கத்து வியன்புதல்வன்
தங்கோமுக மாவிது சாற்றிடுவான் 12

மன்னர்க்கிறை யாகிய மன்னவநீ
உன்னுற்றுள மீதில் உருத்திடவே
முன்னுற்றிடு தூதுவன் மொய்ம்பினனோ
என்னுக்கவன் ஆற்றலை எண்ணுதிநீ. 13

மிடல்கொண்டிடு தூதனை மிக்கவரைப்
புடைகொண்டமர் செய்திடு பூதர்தமை
அடல்கொண்டிவண் நின்னை அடைந்திடுவன்
விடைதந்தரு ளென்று விளம்பினனே. 14

நன்றேயிது செப்பினை நண்ணலனை
வென்றேவரு கென்று விடுத்திடலும்
நின்றேதொழு தவ்விடை நீங்கினனால்
குன்றேநிகர் தோள்வலி கொண்டுடையோன். 15

கார்க்கோலமும் வெய்ய கருங்கடலின்
நீர்க்கோலமும் அன்னவன் நீடியதன்
சீர்க்கோநக ரத்திடை சென்றனனால்
போர்க்கோலம் அமைந்து புறம்படர்வான். 16

மைக்கொண்டல் படர்ந்திடு மால்வரைபோல்
மொய்க்கொண்டிடு சாலிகை முன்னுறவே
மெய்க்கொண்டணி புட்டில் விரற்பரியாக்
கைக்கொண்டனன் விண்ணவர் கைப்படையே. 17

தன்றாதையி னைத்தரு தாயுதவும்
பொன்றாழ்சிலை கைக்கொடு பொள்ளெனவே
ஒன்றாகிய தேரிடை யொல்லைபுகாச்
சென்றான்விழி யிற்கனல் சிந்திடுவான். 18

அறமற்றிடு தீயன் அகன்றுநகர்ப்
புறமுற்றனன் அங்கது போழ்துதனில்
திறமற்றது தூதுவர் செப்புதல்முன்
மறமுற்றிடு தானைகள் வந்தனவே 19

ஓராயிர வெள்ளம் ஒருத்தலினம்
தேரானவும் அத்தொகை திண்டிறல்மா
ஈராயிர வெள்ள மியாவர்களும்
ஆராய்வரி தாலவு ணக்கடலே 20

வேறு

ஆன காலையில் அங்கி முகாசுரன்
மான மேற்கொண்டு மாற்றலர் யாரையும்
யானொ ருவன்முன் றுசெய் வேனெனாச்
சேனை தன்னொடுஞ் சென்றிடல் மேயினான். 21

நல்கு மாறின்றி நாள்பல நீங்கியே
மல்கு காதலர் வந்து கலந்துழிப்
பில்கு காமத்துப் பெய்வளைப் பேதையர்
அல்கு லென்ன அசைந்தகல் வுற்றதேர். 22

அருத்தி மெல்லியர் ஆரதங் கொண்டுழல்
விருத்தர் கூட்டம் வெறுத்திடு மாறுபோல்
எருத்த மீதில் இடிப்பவர் தம்முரைக்
கருத்தின் நிற்கில காய்சின வேழமே. 23

மண்ணிற் பாய்வன மாதிரஞ் சூழ்வன
விண்ணிற் றாவுவ வீதியிற் செல்வன
எண்ணிற் பல்பொருள் இச்சைகொள் வேசியர்
கண்ணிற் கொப்பன கந்துக ராசியே. 24

வஞ்சம் நீடி அருளற்று மாயமே
எஞ்ச லின்றி இருள்கெழு வண்ணமாய்

விஞ்சு தம்மல்குல் விற்றுணும் மங்கையர்
நெஞ்ச மொத்தனர் நீள்படை வீரரே. 25

தார்த்த டம்புயத் தானவர் பல்லியம்
ஆர்த்த ஓதை அகிலமும் புக்கதால்
தூர்த்த மங்கையர் சோர்வினிற செய்பழி
வார்த்தை எங்கணும் வல்லையிற் சேறல்போல். 26

சோதி மெய்யெழில் தூயன மாற்றியே
மீது செல்லரும் வெவ்விருள் உய்த்தலால்
ஏதின் மாதரை எய்திடும் புன்மையோர்
காதல் போன்ற கடிதெழும் பூழியே. 27

பீட்டின் மிக்க பெரும்பணை தாங்கிய
மோட்டின் ஒட்டக முந்திய கந்தரம்
நீட்டி வாங்குவ நேர்ந்தவர் முன்தலை
காட்டி வாங்கும் கணிகையர் போலவே. 28

சீறு மால்கரி தேர்மிசைப் பூண்டுவிண்
ஆற ளாவிநின் றுடுவை கேதனம்
ஊறு காதல் ஒருவன்கண வைகினள்
வேறு ளாரையும வெஃகிவி ளித்தல்போல். 29

வீழு மும்மத வேழங்கள் மத்தகம்
சூழி காலின் அசைதொறும் தோன்றுவ
மாழை நோக்கியர் மைந்தற்கு மாலுறக்
காழு கத்தனம் காட்டி மறைத்தல்போல். 30

தோம ரஞ்சிலை சூலம் மழுப்படை
நாம வெங்கதை நாஞ்சில் முசலம்வேல்
நேமி தானவர் நீள்கரம் செல்வன
காமர் மங்கையர் கட்டொழில் தாங்கியே. 31

வேறு

எற்றின பறையின் வீழ்ந்த எழிலிகள் எழுந்த பூழி
சுற்றின வான மீப்போய்த் தூர்த்தன கங்கை நீத்தம்
வற்றின படையும் பூணும் வயங்கின மயங்கி எங்கும்
செற்றின பதாகை ஈட்டம் இருண்டன திசைக ளெல்லாம். 32

சோமகண் டகனே சோமன சூரியன் பகைஞன் மேகன்
காமர்பிங் கலனே ஆதிக் கடிதெழு தானை வீரர்
மாமருங் கதனிற் செல்ல மன்னவர் மன்னன் மைந்தன்
ஏமரு பூத சேனைக் கெதிருற எய்தி னனால். 33

எதிர்ந்தனர் பூதர் தாமும் அவுணரும் இடிப்பிற் பேரி
அதிர்ந்தன துடியுஞ் சங்கும் ஆர்த்தன அண்ட மீன்கள்
உதிர்ந்தன அனையர் கூடி உடன்றுபோர் புரிய வையம்
பிதிர்ந்தன பொதிந்த அண்டப் பித்திகை பிளந்த தன்றே. 34

தொட்டனர் வேலும் வாளுந் தூண்டினர் பகழி மாரி
விட்டனர் பிண்டி பாலம் வியன்மழுத் தண்ட மோச்சிக்
கிட்டினர் சூலம் வீசிக் கிளர்ந்தனர் அவுணர் பூதர்
பட்டனர் அளப்பி லோர்கள் பரந்தன குருதி நீத்தம். 35

முத்தலைக் கழுவைத் தண்டை முசலத்தை நேமி தன்னைக்
கைத்தலத் திருந்த கூர்வாய்க் கணிச்சியைப் பிறங்கல் தன்னை
எத்திறத் தவரும் பூதர் எறிந்தனர் எறிந்த காலை
அத்தலை அவுண வீரர் அளப்பிலர் பட்டா ரம்மா. 36

தறிந்தன புரவித் தாளுந் தலைகளுந் தடந்தேர் அச்சும்
முறிந்தன துவசம் அற்ற மும்மதக் கோட்டு மாக்கண்
மறிந்தன உடலம் வேறு மடிந்தனர் வயவர் எங்கும்
செறிந்தன கழுகு காகம் திரண்டன கூளி திண்பேய். 37

இருபெரும் படையும் இவ்வா றேற்றிகல் புரியும் வேலை
வெருவரு வேற்கண் மாதர் வியர்ப்பின்வந் துதித்த வீரர்
பொருவருஞ் சிலைகள் வாங்கிப் புங்கவம் பொழிந்து சூழ
ஒருவரும் அவுணர் நில்லா தோடினர் உடைந்து போனார். 38

உடைதலும் அவுணன் மைந்தன் ஒய்யென விடுப்ப மேகன்
கடுமுரட் சோமன் சோம கண்டகன் முதலா வுள்ள
படையுறு தலைவர் பல்லோர் பகழியின் மாரி தூவி
அடுசிலை வீரர் மேற்சென் றமரினை யிழைத்தா ரன்றே. 39

இழைத்திட அதனை நோக்கி இலங்கெழில் தாளில் வீரக்
கழற்புனை கின்ற வீர புரந்தரன் கடிய சீற்றத்
தழற்பெருங் கடவுள் போல்வான் அசனியே றஞ்ச ஆர்க்கும்
முழக்கினன் ஒருதன் சேனை முன்னுறக் கடிது வந்தான் 40

வந்தனன் அங்கைச் சாபம் வாங்கினன் வாளி மாரி
சிந்தினன் தலைவர் தேரைச் சிதைத்தனன் சென்னி தள்ளி
இந்துகண் டகனை வானில் ஏற்றினன் ஏனை வீரர்
உந்திய சேமத் தேர்மேல் உற்றிகல் புரிந்து சூழ்ந்தார். 41

சுற்றினர் வீரன் மேனி சோரிநீ ரொழுகும் ஆற்றால்
முற்றுறு பகழி தூவ முழங்கழ லென்னச் சீறி
மற்றவர் சிலையுந் தேரும் மண்மிசை வீட்டி வல்லே
நெற்றியின் உரத்தின் தோளின் நெடுங்கணை பலவும் உய்த்தான் 42

உய்த்தலும் அவுணர் வேந்தற் குற்றுழி யுதவ நின்ற
மெய்த்திற லாற்ற லாளன் மேகனென் பவனோர் தண்டங்
கைத்தல மிசையி லேந்திக் கணப்படை வீரன் தேர்மேல்
மத்திகை முட்கோல் கொண்ட வலவனை மோதி ஆர்த்தான். 43

மோதலுந் தனது பாகன் முடிந்திடு தன்மை காணா உ
மேதகு தலைவன் வீர புரந்தரன் வேலொன் றேந்தி

ஈதினின் முடிதி என்றே ஏவினன் ஏவ லோடும்
பூதல மிசையே வீழாப் பொன்றினன் புயலின் பேரோன். 44

புயலுறு நாமத் தண்ணல் பொன்றலும் அதனை நாடி
அயலுறு தானை வீரர் அஞ்சினர் அகன்று போக
இயலது தன்னை நோக்கி எரிமுகன் எரியிற் சீறிப்
பரிவுறு சிலையொன் றேந்திப் படையொடுங் கடிது வந்தான். 45

வேறு

வளைத்தான் தனிப் பெருவில்லினை மருவார்மனம் வளைய
விளைத்தான் அவட் சிறுநாணொலி மிகவார்த்தனன் விண்மேல்
முளைத்தார்தரு பிறைபோல்வதொர் முனைவாளிகள் தெரியாக்
கிளைத்தார்தரு பூதப்படை கேடுற்றிடப் பொழிந்தான். 46

தலையற்றனர் கரமற்றனர் தாளற்றனர் தோளா
மலையற்றனர் மார்பற்றனர் வாயற்றனர் செய்யுங்
கொலையற்றனர் செவியற்றனர் கூறுற்றிடு நாவின்
நிலையற்றனர் படையற்றனர் நெடும்பூதர்கள் எவரும். 47

ஆரிற்றன சகடிற்றன அச்சிற்றன கிடுகின்
ஏரிற்றன கொடியிற்றன முடியிற்றன ஈர்க்கும்
மூரிப்பரி மாவிற்றன முருகன்படை வீரர்
தேரிற்றன படையிற்றன செருவிற்றன அன்றே. 48

ஓடுற்றன குருதிப்புனல் உலகச்சுற வொலியா
ஆடுற்றன கவந்தக்குறை அலகைக்குல மிகவே
பாடுற்றன ஞமலித்தொகை பரவுற்றன கொடிமேற்
கூடுற்றன பாறுற்றன குறுகுற்றன கழுகே. 49

அக்காலையின் அதுகண்டனன் அழல்கான்றிட நகையா
மைக்காலனும் வெருவுற்றிடு வலிசேர்திறல் மகவான்
கைக்கார்முகந் தனைவாங்குபு கணைமாரிகள் சொரியாப்
புக்கான் அவுணனுமாங்கெதிர் பொழிந்தான் சர மழையே. 50

கரவன்விடு நெடுவாளிகள் கந்தன்படை ஞன்மேல்
வருகின்றன உறுகின்றன மன்னன்மகன் முன்னம்
பொருகின்றநம் வீரன்விடு புகர்வெங்கணை பலவும்
இரிகின்றன படுகின்றன விருவோர்பக ழியுமே. 51

போரிவ்வகை புரிகின்றுழிப் புரைதீர்விறல் மகவான்
தேரும்பொரு சிலையுங்கணை செறியாவுமுஞ் சிதையா
ஈரைம்பது சரமார்புற எய்தேயிகல் அவுணர்
ஆரும்படி புகழும்படி ஆர்த்தான் அறம் போர்த்தான். 52

மாறுகிய அவுணர்க்கிறை வலியுந்திறல் மகவான்
வீறுனவை இழந்திட்டதும் விழிதீயுற நோக்கிச்
சீறுச்சிலை வளையாக்கணை சிதறுவகை பலவுங்
கூறுவெதிர் புகுந்தாரவன் துணையாமெழு குமரர். 53

இடிகாலுறு முகிலாமென எழுவீரரும் ஏகிக்
கடிதேமுனி வொடுசிந்திய கணையாவையும் விலக்கா
விடமாகிய எரிமாமுகன் விறலோர்புய வரைமேல்
வடிவார்கணை பலசிந்துபு மழையாமென மறைத்தான். 54

சகத்தானவர் புகழப்படு தலைவன்மகன் சரங்கள்
மிகத்தான்விட மெலிவுற்றிடும் எழுவீரரும் வெய்யோன்
முகத்தாயிரங் கரத்தாயிரம் உரத்தாயிரம் மொய்ம்பின்
அகத்தாயிரங் கணைபாய்ச்சினர் அவன்றேரையும் அறுத்தார். 55

வேறு

அறுத்திடும் எல்லையின் அழலின் மாமுகன்
மறித்துமோர் தேரிடை வாவி வல்லைபோய்
எறித்தரு கதிருடை யெழுவர் தம்மையுஞ்
செறுத்தெரி விழித்திவை செப்பல் மேயினான். 56

ஒன்றொரு படையினால் உங்கள் ஆவியைத்
தென்றிசை மறலியார் தெவிட்ட நல்கியே
வென்றிகொள் மொய்ம்புடை விடலை தன்னையுங்
கொன்றிடு கின்றனன் என்று கூறினான். 57

கூறுபோ தத்தினிற் குமரன் தானையோர்
வேறுவே றடுகணை வீசி வெய்யவன்
ஏறுதேர் தன்னையும் இவுளி தன்னையும்
நூறினார் அவனுடல் நூறை யாக்கினார். 58

ஆயது காலையில் அவுணன் வேறொரு
பாயிருந் தேரிடைப் பாய்ந்து கண்ணுதல்
தூயவன் படையினை எடுத்துத் துண்ணென
நேயமொ டருச்சனை நிரப்பித் தூண்டினான். 59

அடலெரி முகத்தினான் ஆதி நாயகன்
படைதொட அன்னது படியும் வானமும்
வடவையின் உருவமாய் வரலும் அச்செயல்
விடலைகள் எழுவரும் வெருண்டு நோக்கினார். 60

அனற்படை அன்னதால் அதற்கு மாறதாப்
புனற்படை விடுக்குவ மென்று புந்திகொண்
டினப்படு துணைவர்கள் யாரும் வாருண
முனைப்படை தூண்டினர் முடியுஞ் செய்கையார். 61

தூண்டிய வாருணத் தொல்லை மாப்படை
சேண்டொடர்ந் திடுதலும் தேவன் தீப்படை
ஆண்டெதி ராகியே அவற்றை நுங்கிற்றால்
ஈண்டொரு முனிகடல் ஏழும் உண்டென. 62

ரலபதி படைகளைத் தடிந்து வாய்மடுத்
துலகுளோர் வெருவர ஊழி யான்பனை

வலியுட னேகிஏழ் வயவர் தம்மையும்
மெலிவுசெய் துயிர்கொடு மீண்டு போயதே. 63

மீண்டது போதலும் வீரர் அவ்விடை
மாண்டனர் கயிலையின் மருங்கு போயினர்
மூண்டிடு பெருங்கனல் முகத்தன் அங்கது
காண்டலும் ஆர்த்தனன் களிப்பில் உம்பரான். 64

ஒருங்குற வீரர்கள் உலந்து வீடலும்
மருங்குற நோக்கிய வயவெம் பூதர்கள்
கரங்களை மறித்தனர் கலங்கி வாய்புடைத்
திரங்கினர் வெருவினர் இரிந்து போயினர். 65

நெற்றியில் வீரர்தம் விளிவு நீங்கலா
துற்றிடு பூதர்கள் உலைந்து சாய்வதுந்
தெற்றென நோக்கினன் செயிர்த்து விம்மினன்
வெற்றியின் கிழவனும் வீர வாகுவே. 66

வீரமொய்ம் புடையவன் வெருவ லீரெனப்
பாரிட க் கணங்களைப் பாணி யாலமைத்
தோரிறை முன்னரே ஒருதன் தேரொடும்
ஆரழல் முகத்தன்முன் அணுகப் போயினன். 67

போய்க்குறு குற்றுழிப் பொருநர்த் தேய்த்தலின்
வீக்கிய கனைகழல் வீர வாகுவைத்
தாக்கெரி முகமுடை த் தறுகண் வெய்யவன்
நோக்கினன் வெகுண்டிவை நுவறல் செய்குவான். 68

வேறு

எதிரா கியபூ தரைஏ னையரை
மதியேன் நினையே அடவந் தனன்நீ
அதுகா லையின்இங் ஙன்அடைந் தனையால்
விதியே உனைஎன் முன்விடுத் ததுவே. 69

கொன்றாய் பலரைக் கொடுவெஞ் சமரின்
வென்றாய் பலரை மிகைசெய் தனையாய்
நின்றாய் வருவாய் நினதா ருயிருக்
கின்றா குவதோ இறுதிப் பகலே. 70

முன்னர்ப் பொருதே முரிவுற் றவர்போல்
என்னைக் கருதேல் இனிஓ ரிறையில்
உன்னைத் தலைகொய் தொருசென் னியையும்
மன்னர்க் கிறைசே வடிவைத் திடுவேன். 71

பூண்பால் முலைமா தர்புணர்ச் சியெனும்
ஆண்போர் தனிலே வலியற் றழியும்
ஆண்பால் ஒருவன் அவனே அலனோ
ஏண்பால் உனையான் இவண்வென் றிலனேல். 72

என்று எதிரா இவையொப் பனசொற்
சொன்னான் அதுகேட் டிடுதொல் விறலோன்
பொன்னார் தருசெங் கைபுடைத் துநகைத்
தொன்றன் முகநோக் கியுரைத் திடுவான். 73

முனையார் தருபொன் னவன்முந் துாமர்
வினையா வடிவந் தனைவிட் டகலா
வளையார் புனல்புக் கனன்அன் னவனுங்
கிளையாய் ஒருநீ எவனுய் குதியோ. 74

மூண்டார் அமர்செய் திடுமொய்ம் பரெலாம்
மாண்டார் கதிரோன் பகைமற் றொருவன்
மீண்டான் அவனும் விளிவுற் றிடுநீ
ஈண்டா ருயிர்தோற் றிடவே கினையோ. 75

வீடிச் செருவில் விளிவா குதியோ
பேடித் தொழில்கற் றிடுபிள் ளையென
ஓடிக் கடல்புக் குயிருய் குதியோ
நாடிக் கடிகொன் றைநவிற் றுதியே. 76

பார்காத் திடினும் பலதா னவரும்
நேர்காத் திடினும் நிலைபெற் றரியாச்
சூர்காத் திடினுந் தொலைவில் விறலோய்
ஆர்காத் திடினும் அடுவேன் உனையே. 77

என்றிங் கிவைவீ ரன்இசைத் திடலும்
குன்றன் னசினத் தழல்கொம் மெனவே
சென்றுள் ளமலைத் துழிதீ முகவன்
வன்றிண் சிலையொன் றைவளைத் தனனே. 78

வேறு

நடுத்தான்அகன் றிடுசூர்மகன் நாணேறுதயைச் சிலையின்
றெடுத்தான்எடுத் தலும்வெய்யவன் இரவோனுடன் இரிந்தான்
உடுத்தான்உதிர்ந் தனரேடனும் உலைந்தான்உல கனைத்துங்
கெடுத்தான்இவ னெனவானவர் கிளையோடின அன்றே. 79

அக்காலையின் முகமாறுடை அமலன்றனக் கன்பன்
கைக்கார்முகம் இருகால்வளைத் தொருகாலொலி காட்டத்
திக்கானன முடையான்முதல் தேவாசுரர் துளங்கி
இக்காலம தோபார்முழு திறுங்காலம தென்றார். 80

என்றுவிசைத் திடுமெல்லையில் எரிமாமுகன் ஈரேழ்
கொன்றார்கணை விடுத்தார்த்தனன் குறுகுற்றது வருமுன்
மின்றுமெனப் பதினாற்கணை விடுத்தேயவை விலக்கிப்
பொன்றார்தரு திறல்மொய்ம்பினன் புயலேறெனத் தெழித்தான். 81

செஞ்ஞாயிறு கதிர்கான்றெனத் தீமாமுகத் தவுணன்
ஐஞ்ஞான்கெனுந் தொகைபெற்றிடும் அயில்வெங்கணை தொடுபா

எஞ்ஞான்றுமுற் றிடுசீர்த்தியன் இருபான்கணை துரந்து
மைஞ்ஞான்றிடு முகில்மேற்செலு மருத்தாமெனத் தடுத்தான். 82

கண்டங்கது கனல்மாமுகன் கணையாயிரந் துரந்து
புண்டங்கிய தனிவேலுடைப் புனிதன்றன திளவல்
முண்டம்புக உய்த்தேதிறல் முதுவால்வளை அதனை
அண்டங்கிழி படஊதினன் அவுணப்படை புகழ. 83

ஆராரும் வியக்குந்திறல் அடல்மொய்ம்பினன் அங்கண்
ஓராயிரம் வடிவாளிகள் ஒருங்கேதொடுத் துய்த்துச்
சூராகிய அவுணன்தரு தொல்லைத்தனி மைந்தன்
தேரானதும் பரியானதும் சிலையானதுஞ் சிதைத்தான். 84

சிதையும்பொழு தயல்வேறொரு தேரின்மிசைப் பாயாக்
கதையொன்றினை விடுத்தான்எரி கனல்மாமுகன் அதன்மேல்
குதையொன்றினைத் துரந்தேயருட் குமரேசனுக் கிளையோன்
சுதையொன்றியக் களத்தேவிழத் துண்டம்பல கண்டான். 85

மாற்றோர்சிலை யினைவாங்கி வளைத்தேகனல் முகத்தோன்
காற்றோன்படை துரக்கின்றுழி இவனும்மது கடவக்
கூற்றோன்படை தொடுத்தானவன் குமரன்றனக் கிளையோன்
வேற்றோர்படை துரந்திட்டிலன் அதுவேசெல விட்டான். 86

மாகத்துறு கதிர்வெம்படை மன்னன்தரு மதலை
வேகத்தினில் விடவாங்கது விடுத்தேயது விலக்கி
நாகத்தமர் கறைநீவிய நனிகூரிய கணைநூ
றாகத்திடை படவேதுரந் தடல்மொய்ம்பினன் ஆர்த்தான். 87

தருமத்தியல் நிறுவுற்றிடு தக்கோன்விடு சரங்கள்
மருமத்தினிற் படுகின்றுழி வானோரமு தருந்தும்
கருமத்தினில் விரவிக்கடல் கடையக்கவிழ்ந் திட்ட
பெருமத்தென நிலைசோர்ந்துதன் பெருந்தேர்மிசை வீழ்ந்தான். 88

விழுகின்றதொ ரெரிமாமுகன் வியன்மார்பெனும் வரையின்
றிழிகின்றன நதியாமென மருவைப்புனல் உயிரும்
ஒழிகின்றது வருகின்றது லாவுற்றது தேற்றம்
அழிகின்றது வருமந்தகன் அச்சுற்றனன் அணுக. 89

விளிந்தானென மயங்குற்றவன் வெஞ்சூர்உரும் ஏற்றால்
நெளிந்தாடர வரைந்தாலென நெடுந்தேர்மிசைப் பெயராத்
தெளிந்தாயிடை யிரங்கிப்பொரு திறல்வன்மைய திலனாய்
எளிந்தான்எளிந் திடுகின்றவன் இத்தன்மைசிந் தித்தான். 90

மொழிபட்டிடு திறல்மாற்றலர் முனைவெஞ்செருத் தனில்யான்
அழிபட்டிடின் வருவாயென அந்நாட்சிறு காலைப்
பழிபட்டிடும் வெறியாட்டினைப் பயின்றேபலி யூட்டி
வழிபட்டதன் நகர்க்காளியை மனத்தின்மிசை நினைத்தான். 91

வேறு

விஞ்சுந் தொல்விறல் மேவு சூர்தரு
மைஞ்சன் தன்னை மனத்தில் உன்னலும்
நஞ்சுந் துண்ணென நண்ணு காளிதன்
நெஞ்சந் தன்னில் நினைத்தல் மேயினாள். 92

சூலங் கொண்ட லமர்ந்து தோன்றுவாள்
சூலங் கொண்ட லமைந்த தோளினாள்
கோலம் பெற்ற குலிங்க வேணியாள்
கோலம் பெற்ற குறுங்கொ லைக்கணாள். 93

போதங் கொன்று பொருமை மிக்குளாள்
போதங் கொன்று பொலஞ்செய் தாளினாள்
ஏதந் தீர்ந்திடும் எண்ண லார்சிரம்
ஏதந் தீர்ந்திடும் ஏம வாளினாள். 94

சங்கா ரத்தணி தாங்கு கொங்கையாள்
சங்கா ரத்தணி தந்த செங்கையாள்
உங்கா ரத்தின் உரத்த ஆடையாள்
உங்கா ரத்தின் உரப்பும் ஓதையாள். 95

ஞாலத் தேவரும் நாகர் வேந்தரும்
ஞாலத் தேவரும் ஏத்த நண்ணுவாள்
காலத் தீயர்க ளிற்றின் மேலையோர்
காலத் தீயர் கலங்கு காட்சியாள் 96

அஞ்சரத் தானடி யான வானவர்
அஞ்சரத் தானடி போர்த்து லாவுவாள்
நஞ்சரத் தானவர் நைய வெம்மைசெய்
நஞ்சரத் தானவர் சுற்றம் நல்குவாள். 97

அங்கத தன்மை யளாய மர்ந்திடும்
அங்கத் தன்மை யளாய காளிமால்
சிங்கத் தேறிய செல்வன் மைந்தன்முன்
சிங்கத் தேறினள் செல்லல் மேயினாள் 98

வில்லுச் சூலம் வியன்ம ழுக்கதை
எல்லைப் பல்படை யாவை யுங்கொளா
மல்லற் காளிகள் மாப்பெ ரும்படை
செல்லக் கூளி செறிந்து சூழ்தர. 99

மூதக் கார்ப்பொடு விண்ணை முட்டுற
வேதக் கூளிகள் ஏறு கேதனம்
ஊதச் சங்கம் ஒழிந்த பல்லியம்
மேதக் கோசை மிகுத்து மேவவே. 100

வேறு

விரைவொடு பறந்தலை மேவி வீழ்ந்தயர்
எரிமுக மதலையை எய்தி நோக்கியான்

உரமிகும் ஒன்னலர் உயிரை உண்பன்நீ
பரிவுறல் என்றனள் அமைத்த பாணியாள். 101

இவ்வகை அருளியே இளவல் பாற்படும்
தெய்வதப் பூதர்தஞ் சேனை மேற்செலாக்
கவ்வைகொள் பெருந்தொழில் கருதி ஆர்த்தனள்
ஐவகைப் பூதமும் அச்சங் கொள்ளவே. 102

ஆர்த்திடும் எல்லையில் அளக்கர் சூழ்ந்தென
ஆர்த்திடும் எல்லையில் அடல்கெழும் பூதரும்
வேர்த்தனர் அழுங்கினர் மேற்சென் றேற்றனர்
வேர்த்தனர் அழுங்கினர் விண்ணு ளோரெலாம் 103

காளிகள் சூலம்வேல் கணிச்சி கார்முகம்
வாளிகள் சிந்தினர் வரைநெ டுந்தரு
நீளிகள் எழுக்கதை நேமி இன்னன
கூளிகள் வீசினர் நெருங்கிப் போர்செய்தார். 104

அத்திறன் நோக்கியே ஆடற் பூதர்கள்
எத்திறத் தவரையும் ஈறு செய்கெனக்
கைத்தலத் திருந்தநேர் கழுமுள் வீசினள்
பத்திரை தன்னருள் படைத்த காளியே. 105

வீசிய முத்தலை வெய்ய வேற்படை
காய்சின எரிபுகை கான்று காளிகள்
மாசகல் உருப்பல வகுத்துப் பாரிடர்
பாசன மருளுறப் படர்தல் உற்றதே. 106

சண்டிகை விடுபடை படைத்து வன்மையைக்
கண்டனன் இளையவன் கணங்கள் ஆருயிர்
உண்டிடும் இஃதென உன்னி யேழிரு
புண்டரு சிலீமுகம் பொள்ளென் றேவினன். 107

தீக்கலுழ் வேலினன் செலுத்தும் ஆசுகம்
மேக்குறு முத்தலை வேலை நுண்டுகள்
ஆக்கிய தாக்கலும் அனைய தன்மையை
நோக்கினள் காளியென் றுரைக்கும் நோன்மையாள். 108

துண்ணென யான்விடு சூலந் தன்னையும்
அண்ணலம் பகழியால் அறுத்தென் றுற்றனை
எண்ணலன் நிற்பனல் இன்னும் அங்கவன்
உண்ணிகழ் உயிரினை உண்குவேன் என்றாள். 109

என்றிடு காளியோ ரிமைப்பின் முந்துற
நின்றிடு சேனையங் கடலை நீக்கியே
வென்றிடு வயப்புலி மிசைக்கொண் டார்த்திடாச்
சென்றனள் வீரன்முன் செப்பல் மேயினள். 110

முன்னுற யான்விடு மூவிலைப் படை
தன்னைவெங் கணைகளால் தடுத்து நின்றனை
இன்னுமோர் சூலமுண் டெறிவன் வீறுதி
அன்னது காத்திடல் அரிது காணென்றாள். 111

என்றலும் முறுவல்செய் திலங்கு சூலமாங்
கொன்றல ஆயிரம் ஒருங்கு வீசினும்
நின்றவை முழுவதும் நீறு செய்வனென்
வன்றிறல் தெரிந்திலை மாதுநீ யென்றான். 112

கொற்றமொய்ம் பினன்இவை கூறக் கேட்டனள்
செற்றம தாகியே தெழித்துச் சண்டிகை
மற்றுமோர் சூலவேல் வல்லை வீசினாள்
சுற்றிய பாரிடத் தொகுதி யுட்கவே. 113

அருந்திறல் அமரர்கள் அழுகொல் ஆமென்
றிரிந்தனர் பணியெனு இனனும் இந்துவும்
வருந்தினர் சூலமுன் வந்த தன்மையைத்
தெரிந்தனன் வீரமொய்ம் புடைய செம்மலே. 114

எட்டுடன் இரண்டுநூ றெனுந்தொ கைப்படு
நெட்டிரும் பகழிகள் நிகரத் தூண்டியே
அட்டனன் துணிபட அரியின் மேலவள்
தொட்டிட வருவதோர் சூலந் தன்னையே. 115

எறித்தரு சூலமற் றிற்று வீழ்தலுஞ்
செறுத்தனள் இங்கிவன் சிரத்தை வாளினும்
அறுத்துதி ரப்புனல் சுவைத்திட் டாவியைப்
பறித்திடு வேனெனப் பகர்ந்திட் டாளரோ. 116

நாலிரு தோளுடை நங்கை தோன்றல்முன்
வாலுளை மடங்கலின் இருத்தல் மாண்பொரீஇப்
பாலுறு திரைக்கடற் பரப்பை விட்டகல்
ஆலம தாமென ஆர்த்திட் டேகினாள். 117

ஆர்த்திடு சண்டிகை அங்கை தன்னிலோர்
கூர்த்திடும் வாட்படை கொண்டு கொம்மெனத்
தீர்த்தனுக் கினியதோர் செம்மல் நிற்புறுந்
தார்த்தடந் தேர்மிசைத் தனிவந் தெய்தினாள். 118

நோக்கினன் மொய்ம்பினன் நோன்மை பூண்டுளான்
தாக்கலை யங்காம்இவள் தன்ன தாவியை
நீக்குதல் செய்வது நீர்மைத் தன்றெனாத்
தூக்கினான் அவள்வலி தொலைக்க உன்னுவான். 119

இடித்தெனா உரப்பினன் எண்கை தன்னையும்
ஒடித்தன னுமொரு ருங்கை யாலுறப்

படித்தனன் மற்றொரு பெருங்கை யாலுரத்
தடித்தனன் காளிவீழ்ந் தவசமாயினள். 120

கரங்கொடு தேவகன் கல்லென் றெற்றலும்
உரங்கிழி வுற்றனள் உமிழ்ந்த சோரிநீர்
தரங்கம தெறிகடல் தன்னைப் போன்றுலாய்
இரங்கிய தவள்துயர் யாவர் கூறுவார். 121

பண்கையும் ஒருகையால் ஏந்தல் பற்றியோர்
ஒண்கையின் நீலிதன் உரத்தில் எற்றலும்
மண்கிழி வுற்றன வரைகள் கீண்டன
விண்கிளர் அண்டமித் திசையும் விண்டவே. 122

திரைபெறு கடலெனக் கான்ற செம்புனல்
வரைபெறு தனதுமெய் மறைத்த லால்துயர்க்
கரைபெறல் இல்லவள் காளி என்றுமுன்
உரைபெறு பெயரையும் ஒழிவுற் றுளரோ. 123

இவ்வகை அவசமாய் இம்பர் வீழ்ந்தபின்
அவ்வகை உணர்ச்சியும் அறுதி யானவுஞ்
செவ்விது தொன்மைபோற் பேரர் சூர்மகள்
வெவ்வலி இழந்துகண் விழித்து விம்மினள். 124

ஆண்மையின் மேலவன் அகலத் தெற்றிட
வண்மையும் வீரமும் இழந்து வீழ்ந்தது
நீண்மைய லானது நினைந்து நெஞ்சிடை
நாண்மலி வுற்றனள் நடுங்கும் ஆவியாள். 125

அந்தமில் அறுமுகத் தமலன் ஏவலால்
வந்தவ னொடுபொரின் வாகை எய்துமோ
புந்தியி லாதிவட் புக்க னன்னெனச்
சிந்தைசெய் தெழுந்தனள் வன்மை தீர்ந்துளாள். 126

இகழ்ந்தவர் உரத்தினை இகழ்ந்து கூர்நகத்
தகழ்ந்துயி ருண்டிடும் அணங்கு தேர்மினைத்
திகழ்ந்தனன் நின்றிடு திறலி னுன்றனைப்
புகழ்ந்தனள் இனையன புகல்வ தாயினள். 127

கன்றிய கற்புடைக் கனலி மாமுகன்
இன்றெனை அருச்சனை இயற்றி ஏத்தியே
ஒன்றல வுயிர்ப்பலி யுதவி வேண்டினன்
நன்றிய நயர்த்திலன் நானிங் கெய்தினேன். 128

உன்னுடை வன்மையும் உனது வீரமுஞ்
சின்னமும் உணர்ந்திலன் செருவின் முந்துறீஇ
நின்னுடன் இகலியிந் நிலைமை யாயினன்
இன்னினி ஏகுவன் இருந்த தொல்லிடை. 129

கறுத்தினி வல்லையில் கனன்முக கத்தனை
ஒறுத்துயிர் உண்குதி ஒழிந்து ளாரையும்
அறுத்தனை நிற்குதி அலரி தன்னைமுன்
செறுத்தவன் தன்னையும் அடுதி செம்மல்நீ. 130

அடையலர் தம்மைவென் றுறு மாமுகம்
உடையவன் கருணைபெற் றுவகை மேவுதி
நெடிதுபல் லூழியும் நீடி வாழ்தியால்
கடைமுறை இவையெலாங் காண்டி நீயென்றாள் 131

இத்திறம் யோகினி இசைத்து வெஞ்சமர்
வித்தகன் விடை கொடு மீண்டு கோளரிச்
சித்திர வெருத்தமேற் சேர்ந்து தொல்படை
மொய்த்திடப் போயினள் முந்து வந்துழி. 132

வேறு

சண்டிகை போந்த காலைத் தழல்முகன் அனைய வெல்லாங்
கண்டனன் வெகுண்டு நன்றிக் கள்வனை யாற்றல் என்னுத்
திண்டிறல் ஆற்றல் சான்ற சேணிடந் துருமுக் கான்று
கொண்டல தெழுந்தா லென்னக் கொம்மெனை எழுந்து சொல்வான். 133

கொன்றுயிர் பலவும் நுங்கிக் குருதியும் வடியும் மாந்தி
ஒன்றுதன் னகடு தூரா துலப்புறுப் பசிநோய் மிக்குச்
சென்றிடு காளி யாலோ தெவ்வர்தஞ் செருவை யான்முன்
வென்றனன் சூரன் சேய்க்குத் துணைகளும் வேண்டு மோதான். 134

சூலமுந் தண்டும் வாளுஞ் சுடர்மழுப் படையுஞ் சீற்றக்
கோலமுங் கொண்டு பாங்கிற் கூளிகள் சூழ வைகும்
நீலிதன் வன்மை காண்பான் நினைந்திவண் விளித்த தன்றி
வேலவன் படையை அன்னாள் வெல்லுமென் றுளங்கொண் டேனே. 135

வாவியுங் குளனும் பொய்கை நதிகளும் மற்று மெல்லாந்
தூவுநுண் பனியா லன்றே துளும்புவ அஃதே போலத்
தேவரை ஏவல் கொண்ட சிறப்புடைத் தமியேன் இங்ஙன்
மேவிய காளி யாலோ எய்துவன் வீரத் தன்மை 136

இன்னினிக் கணம தொன்றின் இளவலா ருயிரை வௌவி
முன்னுற அகன்ற ஒற்றன் முரண்வலி அதனைச் சிந்தி
அன்னவன் ஆவி கூற்றுக் கடிசிலா அளிப்பன் அல்லான்
மன்னன்முன் போவ தில்லை வஞ்சினம் இஃதே என்றான். 137

கனல்முகன் இனைய மாற்றங் கழறியே அவுணத் தொல்பேர்
அனிகம்வந் தயலின் ஈண்ட ஆழியந் தேரிற் சென்று
வனைதரு சிலையொன் றேந்தி வன்மையால் வாங்கி நூறு
முனையிரும் பகழி வீர மொய்ம்பன்மேல் தூண்டி ஆர்த்தான். 138

கொடுந்தொழி லாளன் செய்கை குரைகழல் வீரன் காணு
முடித்திட வந்தாய் போலும் முயற்சியீ தழகி தென்னு

நெடுந்தனிச் சிலைகா லூன்றி ஞெரேலென வளைத்துத் தானும்
அடுந்திறற் கணைநா ரேச்சி அறுத்தனன் அவுணன் வாளி. 139

**வேறு**

அறுத்தபொழு தத்திலவு ணர்க்கரசன் மைந்தன்
மறத்தினொடு நூறுபரம் வாலியன பூட்டிச்
சிறப்புடைய செம்மலுறு தேரினை யழித்துக்
கறித்தவிறல் கொண்டமரர் வால்வளை குறித்தான். 140

தேரழித லும்வெகுளி செய்திளவல் ஈரேழ்
கூரிய நெடும்பகழி கொம்மென விடுத்தே
ஆரழல் முகத்தவுணன் அங்கையிடை கொண்ட
மூரிவரி வெஞ்சிலை முரித்தமர் விளைத்தான். 141

வில்லது முரிந்திட லும் வேறொர்சிலை வாங்கிக்
கல்லென வெயிற்றணி கறித்திவனை இன்னே
கொல்வனெனும் வெய்யமொழி கூறிமண நாறும்
அல்லிமல ரோன்படையை அண்ணல்மிசை உய்த்தான். 142

அத்தகைமை நோக்கினன் அயனபடையை யானும்
உய்த்திடின் மனக்குவரும் ஊதியம்என் என்றுச்
சித்தமுறு பூரனை செலுத்திவிறல் வீர
பத்திர நெடும்படை யொர் பாணிகொடு விட்டான். 143

வாரிதி வளாகம்அரை மாத்திரையின் உண்ணும்
வீரனொடு வெம்படை விரைந்துபடர் காலை
நாரணன் மகன்படை நடுங்கிநனி தாழா
யாருநகை செய்திட இரிந்துளதை யன்றே. 144

அன்னமிசை யோன்படை அழிந்திடலும் வீரன்
தன்னது நெடும்படை கடுப்பில்வகை யேகி
வன்னிமுகன் ஆவிகொடு மாமுடிகள் தள்ளி
மின்னுமென விரலிடை மீண்டுபடர்ந் தன்றே. 145

**வேறு**

வெய்யஅக் கனல்முகன் விளிந்து வீழ்ந்தனன்
ஒய்யென அச்செயல் உம்பர் நோக்குறா
ஐயனை வாழ்த்திநின் றலரின் மாரிதூய்
மெய்யணி துகிலெலாம் வீசி யாடினார். 146

புறந்தரு கலிங்கமும் பூணும் நாணமும்
துறந்தனர் உவகையால் சொல்லும் ஆடலர்
சிறந்துடன் ஆர்த்தனர் தேவர் அற்றைநாட்
பிறந்திடு மைந்தர்தம் பெற்றி எய்தினார். 147

எரிமுகன் அவ்விடை இறப்ப ஆங்கவன்
பெரும்படை வீரர்கள் புலம்பி யாமெலாம்
ஒருசிறு தூதனுக் குடைது மோவெனாச்
செருவினைக் குறித்தனர் உலப்பில் தீமையோர். 148

முற்படுந் தலைவர்கள் மூவெண் ணாயிரர்
பொற்புடை இளையவன் புடையிற் சுற்றிடாக்
கப்பணந் திகிரிகோல் கணிச்சி வேல்கதை
சொற்படு படையெலாஞ் சொரிந்து போர்செய்தார். 149

செய்தது நோக்கியே செயிர்த்துச் சேவகன்
கைதனில் இருந்ததோர் கார்மு கம்வளை இ
நொய்தினில் ஆயிர நூறு கோடிகோல்
எய்தனன் தெழித்தனன் அவுணர் ஏங்கவே. 150

இத்திறங் கண்டமைதொன் றிடைய றாமலே
கைத்தனு உமிழ்ந்திடுங் கணையின் மாமழை
உய்த்தனன் திரிந்தனன் உலகம் போர்த்திடும்
மெய்த்திறல் மருத்தினும் விரைவின் மேவியே. 151

எறிந்திடு படைகளும் எய்த கோல்களும்
முறிந்தன துணிந்தன மொய்ம்பு மார்பமுஞ்
செறிந்திடு கரங்களும் சிரமும் தாள்களும்
தறிந்தன அவுணர்தந் தலைவர் வீடினார். 152

வேழமும் புரவியும் துணிந்து வீழ்ந்தன
வாழியம் தேர்நிரை அனைத்தும் இற்றன
சூழுறும் அவுணரும் தொலைந்து போயினார்
பாழியம் தோளினான் பகழித் தன்மையால். 153

பாறெழுக் குற்றன ககனம் பார்மிசை
வீறெழுக் குற்றதொல் படைகள் வீந்திடச்
சேறெழுக் குற்றன திசைகள் செம்புனல்
ஆறெழுக் குற்றதால் அமர்செய் ஆறெலாம். 154

பலவுடை நெடுந்தலைப் பதகர் துஞ்சலும்
நிலவுடை எயிற்றிடை நிவந்த தீக்கனல்
புலவுடை விழுநிணம் புழுக்கல் செய்ததால்
கலிகெழு கொடியொடு கணமுந் துய்க்கவே. 155

மாமையில் செறித்தன வடிவின் மால்கரி
தாமயிர்ப் புறவடி தடக்கை வன்றலை
ஏமயிர்த் தோகையோ டிற்று நீங்குற
ஆமையிற் போவன குருதி ஆற்றினே. 156

கார்கெழும் அவுணருட் கலந்த சோரியின்
தாரைகள் நீத்தமாய் எழுந்து தக்கவர்
பேருட லுட்கொடு பெயர்ந்த பின்னுற
வாரிதி வடவையுண் டுலவு மாண்பென. 157

கரியினும் பரியினுங் கால்கொண் டோங்கிய
குருதியம் புனல்மழை குலாவும் வைகலின்

வரைதொறும் வரைதொறும் மாறு மாறெழா
அருவிகள் சென்றென அழுங்கிச் செல்லுமால். 158

மீளிகள் குருதிநீர் வெள்ள மாயதில்
வாளுறு வேல்களும் வாளும் மற்றவுங்
கோளுறு மயிலையிற் குலவக் கண்டுதங்
கேளியொன் றெதிர்வன கெழும வேலைமீன். 159

அழல்பொரு செக்கர்வா னகத்தின் மாமதிக்
குழுவினர் சேர்ந்துறக் குலவுங் கொள்கைபோல்
நிழல்பொதி கவிகைதந் நெடிய தாளற
ஒழுகிய குருதியின் ஒருங்கு செல்வவே. 160

அலைகெழு குருதியா றழுங்குற் றேகலால்
தலைகளும் உடல்களும் தசையும் வாரிடக்
கொலைபுரி மறவர்தங் குடரிற் பின்னியே
வலையெறிந் தீர்த்தனர் வயவெம் பூதரே. 161

ஞாளிகள் திரிவதோர் மருங்கு நாமவெங்
கூளிகள் திரிவதோர் மருங்கு கூளியாம்
மீளிகள் திரிவதோர் மருங்கு வென்றிடும்
காளிகள் திரிவதோர் மருங்கு கண்ணெலாம். 162

தேரிடை உலந்தவன் சிரத்துந் துஞ்சிய
சாரதி தலையினும் புரவி தம்மினுஞ்
சோரிகள் இழிவன தொலைந்த வையமும்
ஆருயிர் எய்தியாங் கதுபெற் றென்னவே. 163

சினவலி அவுணர்தந் திகிரி பூண்டிடு
துணைவரு கேசரி துஞ்சச் சோரிநீர்
கனைகட லிடைசெலக் கண்டு தேரைதம்
இனமென எதிர்தழீஇ யிரங்கு கின்றவே. 164

விரிந்தஇத் திறமியல் வெங்க ளத்திடை
இரிந்திடு தானவர் இறந்து நீங்கினார்
கருந்தலை அடுக்கலிற் கழல்கள் தாக்குறத்
திரிந்தனர் அயர்ந்தனர் சிலவர் துஞ்சினார். 165

மழுக்களும் அயில்களும் வாளும் முத்தலைக்
கழுக்களுங் கால்படக் கவலுற் றார்சிலர்
விழுக்கொடு வள்ளுரம் விராய பூழியில்
இழுக்கினர் அழுந்தினர் இறந்துற் றார்சிலர். 166

பாய்ந்திடு குருதியம் பரவை ஆற்றிடை
நீந்தினர் ஒருசிலர் நீந்திக் காலெழா
தோய்ந்தனர் ஒருசிலர் ஓடி னார்சிலர்
மாய்ந்தனர் ஒருசிலர் மாய வீரரே. 167

காண்டொறுங் காண்டொறும் அவுணர் கண்ணிடை
ஈண்டிய வெள்ளிடை இளவல் மேனியாய்
நீண்டதொர் பையுளாய் நிகழ ஏங்கியே
மாண்டனர் சிலர்சிலர் வாய்வெ ரீஇயினர். 168

துப்புறு பூதர்பின் தொடரத் தாடொழா
மெய்ப்படை முழுவதும் வீசி ஆயிடைத்
தப்பினர் இறுதியில் சாய்ந்து மாய்ந்தவர்
கைப்படை வாங்கியே கடிதுற் றார்சிலர். 169

எண்ணமில் படைக்கலம் யாவும் வீசியே
தண்ணுமை வரிதுடி தக்கை பேரியாம்
பண்ணமை இயம்பல பற்றி ஆர்த்திடா
நண்ணினர் நடுவணே நடுக்குந் தானவர் 170

பரிக்குவை அரிக்குவை படைத்த மாமுகத்
திரக்கமில் அவுணர்கள் இரத்தத் தில்தம
நெருக்குறு சிரத்தொகை நீட்டி மெய்யெலாங்
கரக்குநர் ஒருசிலர் உயிரின் காதலார். 171

சூழுறு போரிடைத் தொலைந்து போகியே
நீளிகல் உறுகிலா நிருதர் சம்புவாய்
ஆளுடை வயவர்ஊன் அருந்த ஆயிடை
ஞாளிகள் கவர்தலும் நடுக்குற் றார்சிலர் 172

தீயினை முருக்குறுந் திறல்வெம் பூதர்கள்
தாயினர் தொடர்தலுஞ் சாய்ந்து ளோர்சிலர்
நாயின துருக்கொடு நடக்க ஞாளிகள்
ஆயின அடர்த்தலும் அஞ்சி னார்சிலர். 173

விசையொடு சாரதர் விரவ வேற்றுரு
இசைகிலர் இறந்தவர் இனத்துள் மேயினர்
தசைகவர் ஞமலிகள் தலைசென் றீர்க்கவும்
அசைவில ராகியே அழுங்கி னார்சிலர். 174

புண்டரு குருதிநீர் புறத்துச் சிந்திட
மண்டமர் தன்னிடை மாண்ட கேள்வரைக்
கண்டிலர் சிரந்தெரீஇக் கவன்ற ரற்றிய
ஒண்டொடி மாதரின் உலவி னார்சிலர். 175

சூர்த்திடு நோக்கொடுந் துண்ணென் றெய்தியே
ஆர்த்திடு பூதர்வந் தணுக வாய்வெரீஇ
வேர்த்துடல் பனிப்பவீழ்ந் துதைத்தும் வெய்யதாள்
பேர்த்திடல் இன்றியும் பேதுற் றார்சிலர். 176

அழிதரு வோர்தமை அவரின் முன்னரே
கழிதரும் உயிரினர் கணங்க ளாகிவிண்

வழிதரு செலவினில் வந்து பற்றியெம்
பழிதரு வீரெனப் பணிக்கின் றார்சிலர். 177

வல்விரை பறவையை நோக்கி மற்றவட்
செல்லுதிர் பூதர்கள் தெரியக் கண்டிரேல்
இல்லையிந் நெறிதனில் இறந்து ளோரெனச்
சொல்லுதிர் நீரெனத் தொழுகின் றார்சிலர். 178

காசினி அதனிடைக் கவிழ்ந்த கேள்வரை
ஆசையி னெடுதழீஇ அலமந் தேங்கிய
பாசிழை மாதரிற் பரவப் பூதர்கள்
நாசியீர்ந் திடுதலும் நாணுற் றார்சிலர். 179

அடல்கெழு தூதனால் அவுணர் யாவருங்
கெடுவது திண்ணம்யாங் கெடுகி லோமெனக்
குடர்கெழு சோரியங் குடிரைக் கண்ணுறீஇக்
கடலுறு வரையினுட் கலந்து ளார்சிலர். 180

சாரதர் குழுவினைத் தப்பித் தத்தம
தாருயிர் உய்ந்தபின் அங்கண் மாண்டவர்
சோரிய துரமிசை துதையப் பூசியே
வீரர்கள் இவரென மேவு வார்சிலர். 181

இவ்வகை துஞ்சினா அன்றி எண்ணிலா
வெவ்வலி அவுணர்கள் வெருவி ஓடலும்
மைவரு நெறிமுயல் மகேந்தி ரப்புரங்
கௌவையின் அரற்றின கடலு டைந்தபோல். 182

அங்கது பொழுதினில் ஆடல் முற்றியே
செங்களம் நடுவுறு செம்மல் தன்புடை
எங்கணும் நீங்கிய இலக்க வேந்தருஞ்
சங்கையில் பூதருந் தலைச்சென் றீண்டினர். 183

எரிந்திடு கனல்முகன் எய்த வெஞ்சரம்
உரந்தனை யகழ்ந்திட ஒருதன் வன்மைபோய்
அரந்தையின் மூழ்கியே அரிந்த வீரமா
புரந்தரன் எழுந்தொரு புடையில் எய்தினன். 184

புண்டர நீறணி புனிதன் பாங்கரின்
மிண்டினர் இவரெலாம் மேவி நிற்றலும்
எண்டகும் இளையவர் எழுவர் தம்மையுங்
கண்டிலன் நவன்றனன் கவறல் மேயினன். 185

ஆண்டகை வீரர்கள் அடைய லார்க்கெதிர்
மூண்டமர் இயற்றிய மூவர் நால்வரும்
மாண்டன ரேகொலோ மயங்கி னார்கொலோ
ஆண்டவர் கிடந்தனர் இயம்பு வீரென்றான். 186

என்றலும் உக்கிரன் என்னுஞ் சாரதன்
உன்றுணை யார்களை ஒன்ன லன்மகன்
கொன்றனன் அவருயிர் கூற்றும் வௌவினான்
பொன்றிய வைப்பினைப் புகலக் கேட்டியால். 187

இம்பரின் முன்னுற இயம்பும் யோசனை
ஐம்பதிற் றிரண்டின்மேல் ஆலம் ஒன்றுள
தும்பருஞ் சிறிதென ஓங்கும் ஆயிடைத்
தம்பியர் மாய்ந்தனர் சரதமேயென் றான். 188

உக்கிரன் இனையன உரைப்ப யாரினும்
மிக்கவன் வினவியே விழுமநோயுறீஇப்
பக்கம தாயினர் படர ஏகினான்
தொக்குறும் இளைஞர்கள் துஞ்சும் எல்லைவாய். 189

வேறு

ஓசனை நூறு நீங்கி ஒலிகழல் வீரன் எய்தப்
பாசிலை வடத்தின் பாங்கே பரிவுடைத் தம்பி மார்கள்
காய்சின அங்கி செங்கண் கான்றிடக் களேவ ரத்து
வாரமென் புள்ளி மீது மாய்ந்தனர் கிடப்பக் கண்டான். 190

கண்டனன் விழிகள் செந்நீர் கான்றிட வீழ்ந்து புல்லிக்
கொண்டனன் இளைஞர் தம்மைக் கூவினன் அரற்றிச் செவ்வாய்
விண்டனன் உயிர்த்து மேனி வியர்த்தனன் வீரன் ஆவி
உண்டில தென்னச் சோர்ந்தான் உணர்ந்துபின் இரங்க லுற்றான். 191

தம்பிமீர் தம்பி மீரென் றுரைத்திடும் தழுவிக் கொள்ளீர்
எம்பிமீ ரென்னும் ஐயோ எங்ஙனஞ் சென்றீ ரென்னும்
வெம்பினேன் என்னும் என்னை விட்டகன் றீரோ என்னும்
நம்பினேன் உம்மை என்னும் நானுமக் கயலோ என்னும். 192

அங்கிமா முகனே நும்மை அடல்செய வல்லான் என்னும்
இங்குநீர் முடிந்தீர் என்றால் என்செய்வன் தமியேன் என்னும்
துங்கவெம் படைகள் ஏந்திச் சூழ்ந்துடன் துணையாய் வந்த
உங்களைத் தோற்றி யானே உய்ந்தனன் போலும் என்னும். 193

அம்மவோ விதியே என்னும் ஆதகா துனக்கீ தென்னும்
இம்மெனச் செல்லா தின்னும் இருத்தியோ உயிரே என்னும்
செம்மைகொள் குணத்தா ரோடு பிறப்பரே சிலரிங் கென்னும்
எம்மையா ளுடைய வள்ளற் கென்னினி உரைக்கேன் என்னும். 194

சீரிள மைந்தர் துஞ்சச் சிலையொடு திரிவேன் என்னின்
ஆரெனக் கொப்புண் டம்மா அழகிதென் னாற்றல் என்னும்
சூரர்தங் கிளையை எல்லாந் துண்ணெனச் சென்று சுற்றி
வேரொடு முடித்தால் அன்றி அகலுமோ வெகுளி யென்னும். 195

துப்புடை வில்லின் கல்வித் துணைவர்கள் ஈண்டு துஞ்ச
வெப்படை தூண்டி னானோ எரிமுகத் தவுணன் என்னும்

அப்படை நல்கு தேவர் ஆர்கொலோ அறியேன் என்னும்
மெய்ப்படை வேலினுருக் கடியரோ வினையேம் என்னும். 196

அடுவனோ அவுணர் சூழ்வை என்றிடும் அனலி உண்ண
விடுவனோ இவ்வூர் என்னும் எந்தைதன் படையைச் சூர்மேல்
விடுவனோ என்னும் அந்தோ அஞ்சினேன் வேலுக் கென்னும்
படுவனோ துயரத் தென்னுஞ் செய்வதென் பாவி என்னும். 197

ஒன்றிய துணைவர் தம்மை ஒருங்குடன் படுத்த நீரால்
இன்னமர் செய்து பட்ட எரிமுகன் தன்பால் அன்றோ
வென்றிய தென்னார் என்றன் வீரமா ரண்ட தென்னும்
பொன்றிலன் அளியன் போலப் புலம்பினன் வறிதே என்னும். 198

வில்லினைப் பார்க்கும் செங்கேழ் வேலினைப் பார்க்கும் ஏனை
மல்லலம் படையைப் பார்க்கும் வாளியைப் பார்க்கும் வீரச்
சொல்லினைப் பார்க்கும் வந்து சூழ்தரு பரியைப் பார்க்கும்
கல்லென எயிற்றின் பந்தி கறித்திடும் கவலு மன்றே. 199

அருந்துயர் எய்தி இவ்வா றழுங்கினேன் எளிய னாகி
இருந்தனன் அல்லன் ஏங்கி யாதுமோர் செயலும் இன்றி
வருந்தினன் அல்லன் காலின் மருந்தினுக் குழன்றான் அல்லன்
விரைந்துதன் இளையர் தம்மை எழுப்பவோர் வினையங் கொண்டான். 200

நாற்றலை யுடைய அண்ணல் நாரணன் முதலோர் நல்க
ஏற்றிடு படையில் ஒன்றை இளையர்கள் எழுவர் மீது
மாற்றலன் விடுத்தான் என்னின் மற்றவர் ஆவி உண்டோன்
கூற்றுவன் அன்றே என்னாக் குறித்திவை கூற லுற்றான். 201

வேறு

ஊனோ டாவிக் கின்பம் விரும்பி உழல்கின்ற
வானோ ரேபோல் தானவ ரேபோல் வழிசெல்லா
ஏனோ ரேபோல் எண்ணின னேகொல் எமர் ஆவி
தானோ உண்பான் கூற்றுவன் என்னும் தமியோனே. 202

விழுமுணர்ச்சியை மாற்றுவ தல்லால் விண்ணோர்கள்
ஒருபடை தானும் நங்கள் இனத்தை உயிருண்ணா
தெரிமுக னென்பான் அட்டனன் அன்றே இளையோரைத்
தரியல னாகிக் கொன்றவ னம்மா தானன்றோ. 203

போதத் துக்கோர் வைப்பிட மாயோர் பொறியாகி
ஓதக் கோர்எண் டாரக மூல மொழிகேட்டு
வேதத் தோனை வெஞ்சிறை பூட்டி விதியாற்றும்
ஆதித் தேவன் தம்பியர் என்ப தறியானோ. 204

ஆறிட் பட்ட ஐயிரு காலத் தரன்நாமங்
கூறிட் டோவாச் சேய்உயிர் வவ்வக் குறுகுங்கால்
சீறித் தாளால் தாக்கிய சின்னஞ் சிறிதுந்தான்
மாறிற் றில்லைக் கூற்றது தானும் மறந்தானோ. 205

சீலந் தன்னால் ஓர்விழு போதைச் சிவனுக்கென்
றேலங் கொண்டே விண்ணிடை புக்கோன் உயிர்வெளவிச்
சூலந் தன்னிற் கண்ணுதல் ஏற்றச் சுழலுற்றுக்
காலன் பன்னாள் தூங்கிய வண்ணங் காணாயோ. 206

நஞ்சிற் றீயன் வேட்டுவன் அன்றோர் நாள்முற்றுந்
துஞ்சற் றாணற் றான்மிசை வில்வந் தூர்த்தோனை
வெஞ்சொற் கூறிப் பற்றலும் யாங்கண் மிகஎற்ற
அஞ்சித் தன்தூ தாயினர் போன தறியாயோ. 207

அக்கா லத்தின் எல்லையின மைந்தற் கரவெனறே
முக்கா லோதித் தீமை குறித்தே முடிவோனை**
மெய்க்கா லன்தூ தாயினர் பற்ற விடுவித்தேம்
இக்கால் கொண்டே அவரை உதைத்தேன் யானன்றே. 208

மெச்சியல் கொள்ளாத் துன்மதி யாலும் மிகவெய்ய
துச்சக னாலும் ஏனைய ராலுந் தொன்னாளின்
இச்சக மாற்றுந் தன்னிறை நீங்கி இடரெய்தி
அச்ச முழுந்தே பட்டது சண்டன் அயர்த்தாயோ. 209

நீறு முகத்தார் கண்டிகை பூண்டார் நிமலன்போ
கூறு முகத்தார் தம்புடை செல்லக் குலைகூறறன்
ஆறு முகத்தான் அடியவர் ஆவி யலைத்தானே
சேறு முகத்தாழ் கரியை யடாதோ சிறுபுள்ளும். 210

வேறு

என்று மாற்றங்கள் இயம்பியே இளையவன் எழுந்து
பின்னர் யாத்திடு தூணியில் ஒருசரம் பிடுங்கித்
தன்ன கங்கொடே யன்னதன் தலைதனில் தரும
மன்னர் மன்னவன் கண்டிட இத்திறம் வரைவான். 211

வேலு டைத்தனி நாயகற் கிளையவன் விடுத்தேன்
கால நாடுறு கூற்றுவ னென்பவன் காண்க
கோல வெஞ்சிலைத் துணைவர்தம் ஆருயிர் கொண்டாய்
வாலி தோவிது விடுக்குதி கடிதென வரைந்தான். 212

செங்க லங்கிளர் தன்னகத் தின்னவா றீட்டிப்
பொன்னெ டுஞ்சிலை வாங்கியப் பகழியைப் பூட்டிப்
பன்னி ரண்டுதோள் விமலனை மனங்கொடு பரவி
மின்னெ னச்சென்றி யமபுரம் புகும்வகை விடுத்தான். 213

** ஒரு வேடன் தன் மகனுக்கு இறுதிக்காலத்தில், ஆகா (பிடுங்கு), பிரகா (அடி), சங்கா (கொல்) என்னும் சொற்களைக் கூறி, அதன்படி நட என்று கட்டளையிட்டு மாண்டான் அச்சொற்கள் தீமை குறித்தனவாயினும் சிவநாமம் அடங்கப் பெற்றமையால் அவன் சிவகதி அடைந்தான் என்பது இங்குக் குறித்த வரலாறாகும்.

கரந்தை சூடுவான் திருமகற் கிளையவன் கணைமுன்
விரைந்து தெண்கடல் ஏழையுங் கடந்துவிண் ணோங்கி
இருந்த மானசோத் தரகிரித் தென்புறத் தியம
புரந்த னிற்சென்று மறலிதன் முன்புபோந் ததுவே. 214

தொடுத்த அக்கணை அந்தகன் முன்புதுண் ணெனப்போய்
அடுத்து வீழ்தலும் விம்மிதம் எய்தியே அவன்சென்
றெடுத்து நோக்கினன் வீரவா குப்பெயர் இளவல்
விடுத்த தாகலு முற்றுற உணர்ந்தனன் விரைவில். 215

அயில்நெ டுங்கணைப் பாசுரத் தகலம துணர்ந்து
துயரு ழந்துஞ்சி ஈண்டிலர் இளையவன் துணைவர்
பயில எங்ஙனஞ் சென்றன ரோவெனப் பார்த்தான்
கயிலை யேகியே இருப்பதா உணர்ச்சியிற் கண்டான். 216

கண்டு தேறினன் கடாமிசை ஏறினன் கடுங்கால்
கொண்ட தானைகள் சூறையங் காலெனக் குழுமப்
பண்டு தானுறை பதியினை நீங்கினன் படரா
அண்டர் நாயகன் கயிலையஞ் சாரலை யடைந்தான். 217

ஆன காலையில் ஆயிடைப் பொதும்பரொன் றதனின்
மான வேற்படை அவுணர்தம் படைகளின் மாண்ட
சேனை வீரர்கள் சூழ்தர எழுவருஞ் சிறந்து
கான விஞ்சையர் பாடல்கேட் டிருப்பது கண்டான். 218

தொழுது மற்றவர் முன்னுற மறலிபோய்த் துன்னி
முழுது ணர்ந்துளீர் நுங்களை நாடுவான் முன்னோன்
அழகி தென்றிவண் இருப்பதென் என்னையும் அயிர்ப்பான்
எழுவி ருங்கடி தெழுவிர்இப் பூதரோ டென்றான். 219

என்ற காலையின் எழுவரும் எழுந்திரு மருங்கு
நின்ற பூதர்கள் யாவரும் போந்திட நீங்கி
ஒன்றோர் மாத்திரை ஒடுங்குமுன் அவுணர்கோன் உறையும்
மன்றல் மாநகர் அடுகளம் புக்கனர் மன்னோ. 220

புக்க காலையின் எழுவரும் தம்முடல் புகுந்தார்
மிக்க பாரிடத் தலைவர்கள் யாவரும் விரைவில்
தொக்கு வீழ்தரு மியாக்கைகள் உற்றனர் சுரர்கள்
அக்க ணந்தனிற் பூமழை தூவினின் றார்த்தார். 221

இன்ன வேலையின் எழுவரும் பதைபதைத் தெழுந்து
முன்ன வன்றன தடிக்கம லங்களை முறையால்
சென்னி தாழ்வுற வணங்கினர் செங்கையால் எடுத்துப்
பொன்னின் மார்புறப் புல்லினன் எல்லைதீர் புகழோன். 222

புல்லி னான்இள வீரரைப் புயங்கமுண் டுமிழ்ந்த
எல்லி னானென விளங்கினான் அவுணரை இனிநான்

வில்லி னால்அடல் செய்வதோ அரிதென விறலும்
சொல்லி னான்மகிழ் வாயினான் புன்கணும் தொலைந்தான். 223

எண்ட குந்திறல் எழுவரும் பிறரும்உய்ந் தெழுதல்
கண்டு வீரமா புரந்தர னுங்கணத் தவரும்
திண்டி றற்புனை இலக்கரும் உவகையிற் சிறந்து
**கொண்டல் கண்டிடு சாதகம் போல்**உளங் குளிர்ந்தார். 224

அன்ன தாகிய எல்லையில் கூற்றனும் அனிகம்
துன்ன ஆயிடை வந்தனன் இளவலைத் தொழுது
மின்னு லாவிய வேலினாய் தமியனை வெகுண்டாய்
முன்னி கழ்ந்திடு வரன்முறை கேளென மொழிவான். 225

எழுதி றத்தரும் இங்ஙனம் தம்முடல் விட்டுக்
குழுவி னோடுபோய்க் கயிலையஞ் சாரலில் குறுகி
வழிப டுஞ்சில பூதரும் சுற்றிட வதிந்தார்
அழிபெ ருந்துயிர் உழத்தலில் தெரிந்திலை அதனை. 226

**அங்க மீதினில் நீறுகண் டிகையினை அணிந்தார்**
**தங்கள் பாலினுஞ் செல்லுதற் கஞ்சுறுந் தமியேன்**
இங்கு நின்இனை யார்உயிர் கொள்வனோ எவரும்
**வெங்க னற்பொறி யுண்பரோ பசிப்பிணி மிகினும்.** 227

வினைய முன்னிநீ விடுகணை நோக்கியான் வெள்ளித்
தனிவ ரைப்பெருஞ் சாரலில் போந்துளா ரதரோ
டுனது தம்பியர் தங்களை விளித்திவண் உய்த்தேன்
முனிவு கொள்ளலை ஐயஎன் னிடையென மொழிந்தான். 228

அந்த கன்மொழி வினவலும் ஐயனுக் கிளவல்
நந்து யர்க்கடல் சுவற்றினை கயிலையின் நமர்கள்
வந்த தன்மையைத் தேற்றில மயங்கியீண் டுற்றும்
புந்தி கொள்ளலை யாவது நீயெனப் புகன்றான். 229

புகல லுற்றபின் விடைகொண்டு கூற்றெனும் புத்தேள்
உவகை தன்னொடு தன்புரந் தேகினன் ஒன்னார்
இகலை வெஃகியே பூதரும் துணைவரும் ஏத்த
நிகரி லாதவன் அன்னதோர் களத்திடை நின்றான். 230

நின்று மற்றிவை நாடிய ஒற்றர்நீள் நகரில்
சென்று சூரனைத் தொழுதுநின் மதலைபோர் செய்து
வென்றி மொய்ம்பினன் விடுத்திடு வீரன்மாப் படையால்
பொன்றி னான்பொடி யாகிவீழ்ந் தனனெனப் புகன்றார். 231

**வேறு**

அக்கா லைதனில் அவுணர்க் குளெலாம்
மிக்கான் புவியின் மிசைவீழ்ந் தயரா
எக்கா லுமுறா தவிடர்க் கடலுட்
புக்கான் மெலிவோ டுபுலம் புறுவான். 232

உண்ணே யமதாம் உயிரே உறவே
கண்ணே மணியே கனல்மா முகனே
விண்ணை கினையோ இவண்மீள் கிலையால்
எண்ணேன் உயிர்வாழ்க் கையையிங் கினியே. 233

எந்தைக் கிளையான் தனையிந் நகரின்
வந்துற் றதொர்தூ தன்மலைந் திடலான்
நொந்துற் றனைமெய் யுநுடங் கினையால்
அந்தத் துயர்இங் ஙனமா றியதோ. 234

தேறா இகல்செய் திடுதே வரெலாம்
மாறா மகிழ்வுற் றிடவைத் துமனத்
தாறா இடர்என் வயின்ஆக் கினையால்
கூறாய் இதுவுங் குமரற் கியல்போ. 235

காரோ திமருங் குளகா ரணனே
சீரோ திமனே திருமா லவனே
நேரோ தியவொற் றடநீ முடிகென்
றோரோ தினரோ அதறிந் திலனே. 236

பொய்விட் டிடுதூ துவர்போ ரிடைநீ
மெய்விட் டனையென் றுவிளம் பினரால்
நெய்விட் டவயிற் படைநே ரலன்முன்
கைவிட் டெனையே குவதுன் கடனே. 237

தூதா னவன்வா ளிதுணித் திடவிண்
மீதே கினையென் றுவிளம் பினர்அப்
போதே அதுணர்ந் துபொறுத் தனனால்
ஏதே துபொறா தினமென் னுயிரே. 238

ஆவா தமியேன் அயர்வுற் றிடவே
மூவா இளமைந் தமுடிந் தனையே
ஓவா துமகப் பெறவோங் குதவத்
தேய்வார் களுமுண் டுகொல்இன் னமுமே. 239

எல்லே உனைநம் புவதென் அகல்வாய்
சொல்லே துமுரைத் திலைதுன் புறுவேன்
கல்லே புரைநின் கவின்மார் பதனை
வல்லே தழுவிக் கொளவந் தருளே. 240

செய்யாய் கரியாய் திருவே சிறுவா
மெய்யா ருயிரே விடலாய் அடல்வேற்
கையாய் அரசே களிறே தமியேற்
கையா வெனைநீ யும்அயர்த் தனையோ. 241

என்றின் னனபன் னியிரங் குதலும்
நன்றுன் னையநேர்ந் துநடுக் கமுறுந்

துன்றுந் துயரக் கடல்துன் னினளால்
அன்றந் நகர்மிக் கழுங் குரலே. 242

ஆகத் திருவிருத்தம் - 1,545



# 9. மூவாயிரர் வதைப் படலம்*

—oo—

ஆயதோர் காலைமூ வாயி ரத்தொகை
மேயின மைந்தர்கள் வினவி யதெலாம்
மாயிரு விசும்பினை அளாவு மன்னவன்
கோயிலை யடைந்தனர் குழுவொ டேகினார். 1

துன்னுறு பழியெனுங் குறை எற்றிட
இன்னலந் தெண்டிரை எறிய வைகிய
மன்னியல் நோக்கியே வணக்கஞ் செய்தெழீஇ
முன்னரின் றினையன மொழிதல் மேயினார். 2

உரமிகும் இலக்கரும் ஒழிந்த எண்மரும்
பெருவிறல் மொய்ம்பனும் பிறரும் உற்றுழி
எரிமுக னொருவனை ஏவி னாய்அவன்
செருவினை அவரொடு செய்ய வல்லனோ. 3

வலியவர் தம்மையும் வரம்பின் மிக்குறின்
மெலியவ ராயினும் வென்று போவரால்
உலகினில் வழக்கமீ துணர்ந்தி லாய்கொலோ
கலைபயில் கற்புடைக் காவல் மன்னனே. 4

ஒட்டலர் குழுவினுள் ஒருமகன் றனை
விட்டனை மேல்வரும் வினையம் ஓர்ந்திலை
அட்டுறு தாரினாய் அமரில் அங்கவன்
பட்டனன் என்றிடிற் பரிதற் பாலையோ. 5

தீமுகன் ஒருவனுக் கிரங்கித் தேம்பலை
யாமுளம் இரணியன் இன்னும் உற்றுளன்
தாமரை மகிழ்நனைத் தளைப டுத்திய
கோமகன் உளன்ஒரு குறையுண் டாகுமோ. 6

நண்ணல ராயினோர் நலிந்து செற்றிடக்
கண்ணகல் தேர்பரி களிறு தானவர்
எண்ணில மாய்ந்தவென் றிறையும் ஆகுலம்
பண்ணலை ஐயஅப் பரிசு கேட்டிநீ. 7

* நாலாநாட் பகலே மூவாயிரவர் வதை நிகழ்ந்ததாகும்

ஏழெனுங் கடல்வறந் திடினும் நின்னடி
சூழ்தரு படைக்கொரு தொலைவும் இல்லையால்
ஊழியும் அழிகுறு ஒருவ நீயிவண்
பீழையின் உறுவதும் பெருமைப் பாலதோ. 8

நின்றுவா னளவெலாம் நிவந்த மேருவாங்
குன்றினோர் தினைத்துணை குறைந்த தன்னதால்
துன்றுநந் தானையுள் துன்ன லார்பொர
இன்றுகா ருகவே இறந்த ரேனையே. 9

சிறந்திடு தலைமையுந் திறலும் ஆக்கமும்
மறந்தனை யாகியே வலிய னாகுநீ
இறந்தவர் தமைநினைந் திரங்கற் பாலையோ
புறந்தரு கின்றதோ ரமரர் போலவே. 10

அண்டர்தம் முதல்வனை அயனை மாயனைச்
சண்டனைப் பவனனைத் தழலை யாரையும்
விண்டொடர் செலவினில் விரைந்து பற்றியே
கொண்டணை கின்றனம் குறிப்ப தாகுமேல். 11

விண்ணினை அலைக்கவும் மேரு வெற்பொடு
மண்ணினை மறிக்கவும் வடவை மாற்றவும்
எண்ணினை என்னினும் யாங்கள் எந்தைநின்
உண்ணினை வின்படி முடித்தும் ஒல்லையில். 12

பன்னுவ தென்பல பணித்தி யாங்கள்போய்
முன்னுறு பூதரை முரண்கொள் வீரரைப்
பின்னுறு கந்தனைப் பிறரை யுண்டொரு
கன்னலின் வென்றுநின் கழல்கள் காண்டுமால். 13

என்றிவை புகறலும் இடுக்கண் நீங்கியே
நன்றிது மைந்தர்காள் நடமின் போர்க்கென
வன்றிறல் முதல்வனை வணங்கிக் கைதொழா
நின்றவர் எவரும் நீங்கி னாரரோ. 14

வேறு

வன்னச் சிலைகொண் டனர்வான் கவசந்
துன்னுற் றிடுவித் தனர்தூ ணியினை
வென்னிற் செறிவித் தனர்வெவ் விரலிற்
பொன்னுற் றிடுபுட் டில்புனைந் தனரால். 15

சீர்புக் குறுகைப் படைசெங் கைகொளாத்
தார்புக் கமர்தும் பைதனைத் தரியா
மார்புக் கலமாக் கலன்வர்க் கமிடாத்
தேர்புக் கனர்வந் தனரே னைகளே. 16

சங்கங் கள்முழங் கினதண் ணுமைகோ
டங்கெங் குமியம் பினவெண் படகங்

தூங்கங் கெழுபே ரிதுவைத் தனவால்
அங்கங் குருமுற் றனவா மெனவே. 17

அவுணப் படையெண் ணிலஆற் றல்பிறங்கும்
கவளக் கரிஎண் ணிலகா மருசீர்
இவுளித் தொகைஎண் ணிலவிட் டமுறு
உவணுற் றிடுதே ரும்உலப் பிலவே. 18

முழங்குற் றனபல் லியமும் மதமாத்
தழங்குற் றனதேர் ஒலிதந் தனவால்
அழுங்குற் றனவாம் பரியாங் கவைகள்
விழுங்குற் றனபா ரொடுவிண் ணினையே. 19

நீடுற் றிடுதேர் களின்நீள் துவசம்
ஆடுற் றனதா ரில்அளித் தொகுதி
பாடுற் றனவெங் கொடிபா றுமிழை
கூடுற் றனகூ ளிகுளித் தனவே. 20

தொகையா னைகடம் மொடுசூழ் தருபா
நகையா யினதா னவர்தம் முருவஞ்
சிகையா ருழலா யினசெஞ் ஞிமிறும்
புகையா னதுவான் வழுபூ றியதே. 21

இப்பான் மையதா கியெழுந் தபடை
அப்பால் விரைவுற் றுறிஅன் னதுதனை
டொப்பா ருமில்சூ ரனஉகந் தருளகூர்
மெய்ப்பா லகர்சென் றனர்வெய் தெனவே 22

மூவா யிரர்தா னைகள்முந் துதல
ஏவா மெனவெம் மைகொடேந் துதலுந்
தேவா னவர்கண் டனர்சிந் தைவெரீஇ
யாவா வெனஅஞ் சியழுங் கினரோ. 23

அக்கா லையின்மூ வகையா யிரரும்
மெய்க்கார் புவிசென் றுவிளைந் தனபோல்
தொக்கா டல்புரிந் திடுதொல் நிலமேற்
புக்கார் அதுகண் டனர்பூ தர்களே. 21

எதிர்கின் றனர்பூ தர்களேற் றனரால்
முதிர்கின் றசினங் கெழுமொய்ம் பமைவார்
அதிர்கின் றனபே ரிகள்அண் டமெலாம்
பதிர்கின் றனநே மிபிளந் தனவே. 25

வாள்கொண் டெதிர்கின் றனர்வல் லெழுவுந்
தோள்கொண் டிடுவெங் கதைதூண் டினரால்
தாள்கொண் டசிலைக் கணைதூஞ் சொரிவார்
நீள்கொண் டலயன் னவிரா யரரே. 26

சூலப் படைவிட் டனர்தொல் பரிதிக்
கோலப் படைவிட் டனர்குந் தமுடன்
ஆலப் படைவிட் டனரா டுருறட்
பாலப் படைநின் றுதளர்ந் திடவே. 27

அடுகுற் றிடுகூ லமடற் கதைகள்
தொடுகுற் றனர்நே மிகள்தூண் டிடுவார்
விடுகுற் றனர்வெற் பினைவெவ் வசுரர்
படுகுற் றனர் ஆர்த் தனர்பா ரிடரே. 28

வீழ்கின் றனபட் டிடும்வீ ரருடல்
தாழ்கின் றனசெம் புனல்பாய்ந் தனவால்
சூழ்கின் றனவே லையில்அங் கதன்வாய்
மூழ்கின் றனபேய் கொடிமொய்த் தனவே. 29

மறக்குஞ் சமரா யினவாம் பரிதேர்
சிறக்கின் றனபட் டனதீ அவுணர்
துறக்கின் றனர்ஆ வி தொலைந் திடுவார்
இறக்கின் றகணங் களுமெண் ணிலவே. 30

வேறு

ஈறுறு வயமூவாயிரர் கனல்வெஞ் சினந் திருகிக்
ஊறுகொள் தனவேயடுங் கொடும்பூதரைக் குறுகி
நீறுபட தொனிவிண்டொட நிமிர்வெஞ்சிலை குனியா
வேறுற்றுண தொலிகொண்டனர் இதுகொல் லுருமெனவே. 31

வாங்குற்றிடு சிலைதன்னிடை வல்லேசர மாரி
ஆங்குற்றிடு புயலாமெனச் சொரிந்தார்சொரிந் திடலும்
ஏங்குற்றன பூதப்படை இரிகின்றன அதுகண்
டோங்குற்றிடு கணவீரர்கள் அவுணர்க்கெதிர் புகுந்தார். 32

தண்டத்தவர் கடந்தேரினைத் தகர்ப்பார்சிலர் தருவின்
துண்டத்தவர் பரிமான்தொகை தொலைப்பார்சிலர் பாகனை
கண்டத்தலை உருளும்படி புடைப்பார்சிலர் கரத்தால்
அண்டத்தினில் அவர்தேரெடுத் தெறிவார்சிலர் அம்மா. 33

மழுக்கொண்டவர் கடமார்பினில் எறிவார்சிலர் எரிவாய்
மழுக்கொண்டவர் சிலையிற்றிட எறிவார்சிலர் வரையின்
குழுக்கொண்டவர் அனிகந்தனைக் கொல்வார்சிலர் வார்வில்
பழுக்கொண்டிடு கவடாமெனப் பறிப்பார்சிலர் முறிப்பார். 34

தாவாதுயர் கணவீரர்கள் தமர்இவ்வகை புரிய
மூவாயிர பெருமைந்தர்கள் முனியாச்சிலை குனியா
ஓவாதுக முடிவெல்லையில் உருமுச்செறி வனபோல்
தீவாயுமிழ் கனல்வாளிகள் சொரிகின்றனர் தெரிந்தே. 35

சேர்புற்றமர் புரிகின்றவர் நெடுந்தீவடிக் கணைகள்
மார்புற்றிடத் தடந்தோளொடும் வரையுற்றிட முகத்தின்

ஏார்புற்றிடக் கரமுற்றிடத் தாளுற்றிடச் செந்நீர்
சோர்புற்றிடத் தளர்ந்தேமனந் துயருற்றிட நின்றார். 36

கலக்கித்தட மலர்சிந்திடு களிறுமென அடல்செய்
விலக்கற்கரு மூவாயிரர் வில்லாண்மையும் வல்லார்
அலக்கட்படு கணவீரர்கள் அழிகின்றது நோக்கி
இலக்கத்தரி லோராயிரர் எரியாமெனச் செயிர்த்தார். 37

குன்றேயென மிசைபோகிய கொற்றப்புயத் தவன்முன்
சென்றேதொழு திப்போரினைச் சிறியேங்களுக் கருண்மோ
என்றேயுரைத் தனர்வேண்டலும் இளையோன்அதற் கிசையா
நன்றேயமர் செயநீவிர்கள் நடமின்னென அகன்றார். 38

விசயன்சயன் இடபன்கர வீரன்அதி கோரன்
அசலன்அதி குமன்வாமனன் அனந்தன் அக ளங்கன்
வசையில்புகழ் அனகன்சது வலிமாருதன் வருணன்
சசிகண்டகன் முதலாயிரர் சமரின்தலை புகுந்தார். 39

முந்துற்றிடும் அவர்யாவரும் மூவாயிரர் எதிர்போய்க்
கந்தக்கட வுளைஅன்பொடு கருத்திற்றொழு தேத்தி
மைந்துற்றிடு தங்கார்முகம் வளையாவடி வாளி
அந்தத்தினின் முகிலாமென அவர்மேற்சொரிந் தார்த்தார். 40

ஆர்க்கின்றதொர் பொழுதத்தினில் அவர்வில்வலி தன்னை
மூர்க்கன்தரு மறமைந்தர்கள் மூவாயிரர் காணுக்
கூர்க்கின்றதொர் நெடுவாளிகள் குணிப்பில்லன பூட்டிச்
சூர்க்கொண்டல்கள் தம்மோடமர் புரிந்தாலெனச் சொரிந்தார். 41

மூவாயிரர் விடும்வாளிகள் முடுகிக்கடி தேகித்
தாவாவிற லோர்ஆயிரர் தம்வாளியை அடுமால்
மேவார்புகழ் விறல்மைந்தர்கள் வெவ்வாளிகள் அவுணர்
ஏவானவை துணியும்படி எதிர்சிந்திடும் விரைவில். 42

இவ்வாறமர் புரிகின்றுழி இலக்கத்தவர் தேரைத்
தெவ்வாகிய மூவாயிரர் சிதைவித்தனர் சரத்தால்
அவ்வாறுதெ ரிந்தேயமர் அவுணன்தரு மைந்தர்
கைவார்சிலை யொடுதேரினை அழித்தார்கணை தூண்டி. 43

இலக்கத்தவர் எதிர்கின்றவர் ஏமப்படு தேரைச்
சிலைக்கட்படு நெடுவெங்கணை சிந்திச்சிதை வித்தே
நிலக்கட்பட மூவாயிரர் தொகைதன்னையும் நிறுவி
மலைக்கட்படும் அரிபோற்புடை வருதேரிடைப் புகுந்தார். 44

சிலைபோய்க்கட விச்சென்றிடு தேர்போயடல் செய்யும்
கொலைபோயனி கம்போயுளங் கொள்ளும்பெரு மிதத்தின்
நிலைபோய்வெகு ளுற்றேபுவி நின்றோர்தமைப் பிணித்து
வலைபோகிய மானேயென வலைத்தார்வய மைந்தர். 45

வேறு

பொலம்படு தேரொடு பொன்ற வன்மைபோய்த்
தலம்படும் அவுணர்கள் தளர்தல் மேயினார்
இலம்படை வந்துழி ஈதல் சான்றவர்
குலம்படு துயரொடு குறையும் தன்மைபோல். 46

பறித்தனர் வரைகளைப் பழும ரம்பல
முறித்தனர் வியர்ப்புறு மொய்ம்பர் தம்பினைச்
செறித்தனர் அண்டமும் திசையும் ஞாலமும்
மறைத்தனர் அமரரும் மருட்கை யெய்தினார். 47

தெவ்வரை யாகிய சிறார்கள் தொன்மரங்
கைவரை வீசலுங் கணைகள் தூண்டியே
இவ்வரை யெனுங்கணத் திறுத்து வீட்டினார்
ஐவரை வென்றிகொள் அனிக வீரரே. 48

அட்டடல் கொண்டிடும் அவுணர் இவ்வகை
விட்டன கிரியெலாங் கணையின் வீட்டியே
நெட்டுயுற் பகழிகள் நிறத்தின் மூழ்குறத்
தொட்டனர் உறுப்பெலாந் துளைத்தல் மேயினார். 49

துளைத்திடு கின்றுழிச் சோரி சாய்ந்திட
விளைத்தனர் ஒருசிலர் இரிந்திட் டார்சிலர்
களைத்தனர் ஒருசிலர் கனன்று நின்றுபோர்
விளைத்தனர் ஒருசிலர் பிறங்கல் வீசுவார் 50

தேவரை வென்றுளார் சிலவர் மால்வரைக்
காவலர் தேரினைக் கரங்க ளாலெடா
மேவரும் புணரியுள் வீசி யார்த்தனர்
ஓவென அமரர்கள் புலம்பி யோடவே. 51

நீரர்கள் ஒருசிலர் நேமி சென்றிட
வீசிய தேரினும் விரைவின் நீங்குறுக்
காசினிப் பாலராய்க் கார்மு கம்வளை இ
ஆசுக மழைசொரிந் தார்த்துப் பொங்கினார். 52

மீண்டிடு பொருநர்கள் விசிக மாமழை
தூண்டிட அவுணர்கள் தொகையிற் பற்பலர்
காண்டலும் வடவையின் கணத்திற் சீறியே
ஆண்டெதிர் புகுந்தனர் அரவி ஆர்ப்பினார். 53

மறந்தொடு மடுத்தின மாங்கொள் கொம்பரை
இறுத்திடு தன்மைபோல் எந்தை பின்வரு
திறத்தவர் சிலைகளைச் செங்கை வன்மையாற்
பறித்தனர் முறித்தனர் படியில் வீசினார். 54

பற்றலர் கொடுமரம் பறித்துச் சிந்துழிச்
செற்றமொ டெய்பிரான் சேனை வீரர்கள்

மற்றவ ரும்பதை பதைப்ப மாண்கையால்
ஏற்றினர் அனையரும் இடியிற் றுக்கினார். 55

பரவிய உவரியும் பாலின் வேலையுந்
திரைகளை எதிரெதிர் சிதறி யார்த்தெழீஇப்
பொருதிற மேயெனப் பொருவில் மற்றொரீஇ
இருதிற வயவரும் மிகலி ஆற்றினார். 56

கொடுந்தொழி லாரொடு கொற்ற வீரர்கள்
அடைந்தனர் இவ்வகை யாண்மைப் போரினைத்
தொடர்ந்துநின் றியற்றியே சொல்லல வன்மைபோய்
உடைந்தனர் விசயன்அங் கொருவன் அன்றியே. 57

இடையுறு நமரெலாம் இரிந்து போதலும்
விசயனே யெனப்படும் வீரன் சீறியே
வசையுறும் அவுணர்கோன் மகாரைக் கூற்றுவன்
திசையுறு நகரிடைச் செலுத்து வேனென்றான். 58

வேணியின் மதியுடை விமலன் நல்கிய
வேணுறு வரிசிலை ஈறி லாதது
தூணியி னிடையுறத் துன்னிற் றன்னதைப்
பாணியில் எடுத்தனன் சமரில் பாணியான். 59

கரதலத் தெடுத்திடு கார்மு கந்தனை
விரையொடு கோட்டியே விசயன் என்பவன்
ஒருதனி மாருதத் தோடிச் சூழ்வுறுஞ்
சரமழை பொழிந்தனன் அவுணர் தங்கள்மேல். 60

கரங்களை அறுத்தனன் கழல்கள் ஈர்ந்தனன்
உரங்களை அறுத்தனன் உயர்திண் டோளொடு
சிரங்களை அறுத்தனன் சிலரைக் கானிடை
மரங்களை அறுத்திடும் வண்ண மென்னவே. 61

அற்றன உறுப்பெலாம் அணுகித் தம்மில்வந்
துற்றன கூடிய வுணர்வும் ஆவியும்
மற்றவர் எழுந்தனர் வாகை வீரன்மேல்
பொற்றைக ளாயின பொழிந்து போர்செய்தார். 62

தலையொடு கரங்களும் தாளுந் தோள்களும்
மெலிவொடு துணிந்தவர் மீட்டுங் கூடினார்
அலர்தரு பங்கயத் தண்ணல் தன்னிடை
வலிதவர் பெற்றிடு வரத்தின் தன்மையால். 63

கண்டமும் மொய்ம்பருங் கழலும் வாளியால்
துண்டம தாயினர் தொக்கு மேயினார்
சண்டவெங் கால்பொரத் தணந்து சிந்திய
தெண்டிரை நெடும்புனல் மீட்டும் சேர்தல்போல். 64

பன்னரும் திறலினுன் பகழி பாய்தொறும்
மன்னவன் மைந்தர்கள் மாண்டு தோன்றுவார்
மின்னது வந்துழி விளிந்து வெவ்விருள்
தொன்னிலை எய்தியே தொடர்ந்து தோன்றல்போல். 65

கையொடு சென்னியும் கழலும் மார்பமும்
கொய்யுமுன் தொன்மைபோல் கூட மைந்தர்கள்
ஒய்யென எழுந்தனர் உலகில் தேர்வுறில்
செய்யுறு தவத்தினும் சிறப்புண் டாங்கொலோ. 66

கண்டனன் விசயனுங் காளை ஆவிபோய்த்
துண்டம தாகியே துஞ்சி னோர்எழீஇ
மண்டமர் புரிவது மனத்தின் விம்மிதம்
கொண்டனன் பொருதிறல் குறைந்து நின்றனன். 67

அகத்திடை விம்மிதம் அடைந்து நின்றுளான்
திகைத்தனன் வரங்கொல்இச் செய்கை என்றனன்
புகைத்தென உயிர்த்தனன் பொங்கு கின்றனன்
நகைத்தனன் இவர்செயல் நன்று நன்றென. 68

தொட்டிடு பகழியால் துணிந்து போரிடைப்
பட்டவர் எழுந்தனர் பகழி பின்னரும்
விட்டிடின் ஆவதென் மேவ லார்தமை
அட்டிடல் இன்றெனக் கரிது போலுமால். 69

அன்னவர் தமையடல் அரிய தாமெனில்
ஒன்னலர் படையொடும் ஒன்றிச் சுற்றியே
பன்னெடு நாளமர் பயின்று நிற்பினும்
என்னுயிர் கொள்வது மெளிதன் றுலரோ. 70

வென்றிலன் இவர்தமை வென்றி லேன்எனில்
சென்றெதிர் மாற்றலர் செருவில் வன்மைபோய்ப்
பொன்றுதல் பெற்றிலன் பொதுவ னோர்மகன்
கொன்றிடும் உலவையின் கொள்கை யாயினேன். 71

பற்றலர் தங்களைப் படுப்பன் யானென
வெற்றிகொள் வானென விளம்பி வந்தயான்
செற்றில னாகியே சிலையுங் கையுமாய்க்
கொற்றவ னோடுபோய்க் கூட லாகுமோ. 72

மாற்றலர் வரத்தினர் மாயப் பான்மையர்
ஆற்றவும் வலியரென் றறைந்து மீள்வனேல்
தோற்றனன் என்றெமர் துயப்பர் அன்றியும்
போற்றலர் விடுவர்கொல் புறந்தந் தேகவும். 73

பித்தரின் மயங்கிலன் உணர்வும் பெற்றுளேன்
எய்த்திலன் வலியொடும் இன்னும் நின்றனன்

வைத்திலன் புகரினை வரையொன் றெய்துவேன்
செத்திலன் இருந்தனன் செயலற் றேனென்றான். 74

விண்டினை மாறுகொள் விசயன் இவ்வகை
அண்டரும் துன்புகொண் டகத்தி னுன்னுழி
உண்டொரு செய்கையான் உய்யு மாறெனக்
கண்டனன் துயர்க்கடல் கடக்கும் பெற்றியான். 75

ஆறுமா முகப்பிரான் அன்றி இவ்விடை
வேறொரு துணையிலை மெய்மை ஈதெனத்
தேறினன் அவனடி சிந்தை செய்தனன்
மாறிடி அருவிநீர் வழியும் கண்ணினான். 76

அண்ணலங் குமரனை அகத்துட் கொண்டுழி
எண்ணிய எண்ணியாங் கெவர்க்கும் நல்குவோன்
விண்ணிடை ஒல்லையின் விசய னென்பவன்
கண்ணிடைத் தோன்றியே கழறல் மேயினான். 77

வேறு

கேளிது விசய ஒன்னார் கிளையினை முடிப்பான் உன்னித்
தாளொடு முடியுங் கையுந் தடிந்தனை தடிந்த தெல்லாம்
மீளவும் தோன்றிற் றன்றே மேவலர் பெற்ற தோராய்
நீளமர் வயமின் றாகி நின்றனை தளரேல் நெஞ்சம். 78

ஏற்றபல் படைகள் நம்மால் இவர்தமைப் பண்ணுள் நின்று
வீற்றுவீற் றடுவை யேனும் விளிகிலர் ஒருங்கு வல்லே
ஆற்றல்சேர் படையொன் றுய்க்கின் அனைவரும் முடிவர் ஈது
நாற்றலை யுடையோன் தொன்னாள் நல்கிய வரமதென்றான். 79

என்றிவை உரைத்து வள்ளல் இம்பரை அளித்தோன் சென்னி
ஒன்றினை வாங்கி ஏனோர் உளமயல் அகற்றும் எந்தை
வென்றிகொள் படையை நல்கி விசயனுக் களித்து மேவார்
பொன்றிட இதனை இன்னே விடுகெனப் புகன்று போனான். 80

தேர்ந்தனன் முருகன் வாய்மை சிறந்தனன் மகிழ்ச்சி உள்ளங்
கூர்ந்தனன் ஞமலி யூர்தி கொற்றவெம் படையை வாங்கி
ஆர்ந்தநல் லன்பில் பூசை ஆற்றினன் அதனை யெல்லாம்
ஓர்ந்தனன் அவுணர் தம்முள் ஒருவன்உன் மத்தன் என்போன். 81

ஈண்டிவன் நமர்கள் எல்லாம் இரைவரப் படைய தொன்றால்
மாண்டிட அடுவான் போலும் மற்றதன் முன்னர் மாயம்
பூண்டிடு படையால் இன்னோற் கிறுதியைப் புரிவ னென்னா
ஆண்டுதன் னுளத்தில் உன்னி அவுணனப் படையை விட்டான் 82

மாயவள் படையை முன்னம் விடுதலும் வள்ளல் நோக்கித்
தீயுமிழ் கின்ற காரி திண்படை செலுத்தச் சென்று
பாயிருள் பரந்து நேரும் படையினைத் தடிந்து முப்பால்
ஆயிரர் தமையுஞ் சுற்றி அடல்செய்து மீண்ட தன்றே. 83

ஒருகணப் பொழுதின் முன்னர் ஓராயிர முப்பா லோருஞ்
செருநிலத் தவிந்தா ரன்ன செய்கையை விசயன் காணு
முருகனைப் பரவி நின்றான் முழுமதி தன்னைக் கண்ட
பொருதிரைப் புணரி யென்ன ஆர்த்தனர் பூத ரெல்லாம். 84

ஏமுறும் அவுணர் தானை இறந்திடா தெஞ்சிற் றெல்லாம்
காமரு திசைகள் முற்றும் கதுமென விரிந்து போன
மாமலர் பொழிந்தார் விண்ணோர் மற்றிவை அனைத்தும் நாடிக்
கோமகன் முன்பு சென்றார் குரைகழல் அவுணர் தூதர். 85

வெய்யவன் பகைவன் தாதை வியன்கழல் பணிந்து தூதர்
ஐயநின் மைந்தர் முப்பா லாயிரர் தம்மை யெல்லாம்
ஒய்யென இலக்கர் தம்முள் ஒருவனே முடித்தான் ஈது
பொய்யல சரத மென்னப் பொருக்கெனப் புலம்பி வீழ்ந்தான். 86

வீழ்ந்தனன் பதைத்துச் சோர்ந்து வெய்துயிர்த் தசைந்து விம்மிப்
போழ்ந்திட நிலத்தைக் கையாற் புடைத்தனன் புரண்டு வெற்பில்
தாழ்ந்திடு மருவி யென்ன இழிபுனல் தாரை பொங்கச்
சூழ்ந்தவர் அரற்ற மன்னன் துன்பமேல் துன்பம் வைத்தான். 87

அன்னதோ ரெல்லை மைந்தர் அனைவரும் முடிந்த தோரா
மன்னவன் இரைமை நீங்கி மாயிருந் தவிசில் தப்பி
இன்னலின் மறிந்த தென்ன இரவியங் கடவுள் மேல்பால்
போனனெடுங் கிரியின் எய்தி ஒலியிலன் புணரி வீழ்ந்தான். 88

ஆகத் திருவிருத்தம் - 1,633



# 10. தருமகோபன் வதைப் படலம்*

—oo—

முடிவுறு புதல்வரை முன்னி முன்னியே
இடரினை உழந்திடும் இறைவன் தன்முனம்
படியறு நல்லறப் பகைஞன் போந்திடா
அடிமுறை பணிந்துநின் றறைதல் மேயினன். 1

மன்னவர் மன்னநீ மனத்தில் இவ்வகை
இன்னல்செய் தாற்றவும் இரங்கு வாயெனில்
துன்னலர் மகிழுவர் சுரர்கள் யாவரும்
நன்னகை செய்குவர் நமரும் வெள்குவார். 2

முந்துறு மாற்றலர் முனைவெம் போரிடைத்
தந்தையர் விளியினுந் தமர்கண் மாயினும்

* நாலாநாள் இரவு தருமகோபன் வதை நிகழ்ந்ததாகும்.

மைந்தர்கள் விளியினும் மான வீரர்கள்
சிந்தைகொள் வன்மையிற் சிறிதுந் தீர்வரோ. 3

ஏற்றிகல் புரிந்திடும் எமரை வௌவிய
கூற்றுளன் தொன்மைபோற் படைத்துக் கூட்டுவான்
நாற்றிசை முகனுளன் நாமு ளோம்நமை
தாற்றலும் இருந்துள அயர்வும் வேண்டுமோ. 4

அந்தமில் வெறுக்கையும் அழிவில் ஆயுளும்
நந்தலில் வன்மையும் நடாத்தும் ஆணையும்
இந்திர ஞாலமும் இருக்க எந்தைநீ
புந்தியில் அமரர்போற் புலம்ப லாகுமோ. 5

விண்ணவர் சிறையினை விடாது வைத்திடக்
கண்ணிய விரதமுங் கறிந்த மானமும்
நண்ணலர் தங்களை நலியுந் தன்மையும்
எண்ணலை இடையறு திடுக்கண் போற்றுமோ. 6

மாற்றல ராகிய அமரர் மானவர்
கோற்றொடி மடந்தையர் குழலிப் பாலகர்
ஆற்றிடு துயருனக் காவ தன்றெனாத்
தேற்றினன் அமைச்சருள் தீமை மிக்குளான். 7

வேறு

ஆற்றிடு தருமம் நீத்த அமைச்சன்வந் திணைய வாற்றல்
தேற்றிடு கின்ற காலைச் சிறிதுதன் அவலம் நீந்துக்
கூற்றென யானே சென்று கூடலர் தொகையை வெல்வேன்
ஏற்றுவ னென்று சீறி அவுணர்கோன் எழுந்து சென்றான். 8

சென்றிடு மன்னர் மன்னன் சேவடி முறையிற் சூழா
இன்றிவண் இருத்தி யானும் அனிகமும் இன்னே போகி
வன்றிறற் பகைஞர் தம்மை வளைந்துவெல் விரைந்து யாடி
வென்றியுற் றிடுவ னென்ன வேண்டினன் அமைச்சர் மேலோன். 9

அறந்தவிர் அமைச்சன் வேண்ட அவுணர்கள் முதல்வன் மீண்டு
சிறந்திடு மடங்க லாற்றுஞ் செம்பொன்செய் பீட மேவி
உறைந்தனன் அனைய காலை ஒல்லையில் விடைகொண் டேகிப்
புறந்தனில் வந்து வல்லே போர்ப்பெருங் கோலங் கொண்டான். 10

போதகத் தரசு தம்முட் புண்டரீ கப்பேர் பெற்ற
மாதிரக் களிற்றை அன்னோன் வல்லையிற் கொணர்தி ரென்னத்
தூதுவர்க் குரைத்த லோடுந் துன்னென அனைய ரோடி
மேதகு நிகளம் நீக்கி விடுத்துமுன் னுய்த்து நின்றார். 11

புந்தியிற் குறிப்பிற் செல்லும் புண்டரீ கப்பேர் பெற்ற
தந்தியந் தலைவன் மீது தருமத்தை வெருளும் வெய்யோன்
அந்தமில் படைக ளேந்தி அமைச்சர்கள் பலருஞ் சூழ
இந்திரன் இவன்கொ லென்ன ஏறினன் எழிலி போல்வான். 12

அறைந்தன படகம் பேரி ஆர்த்தன விரலை தீபஞ்
செறிந்தன கரிதேர் வாசி செழித்தன அவுணர் தானை
நிறைந்தன பதாகை ஈட்டம் நெருங்கிய கவிகை வானம்
மறைந்தன எழுந்த பூழி மாதிரம் இருண்ட அன்றே. 13

எண்ணிலா வெள்ள மாவும் இபங்களும் இவுளித் தேரும்
வெண்ணிலா எயிற்றுச் செங்கண் வீரரும் புடையிற் சுற்றப்
புண்ணுலா முகத்துப் பேழ்வாய்ப் புண்டரீ கத்தை யூர்ந்தே
அண்ணல்மா நகரம் நீங்கிப் போயினன் அறத்தை நீத்தோன். 14

அண்டர்மற் றிதனை நோக்கி அம்மவோ அறத்தை நீத்த
கண்டகன் சிலையொன் றேந்தி மாதிரக் களிறு தன்னுள்
புண்டரீ கத்தை ஊர்ந்து பொருமெனில் இவனை யாற்றல்
கொண்டிடல் அரிதாம் என்ன இரங்கினர் குலைந்த மெய்யார். 15

ஆவணம் அனந்தம் நீங்கி அனிகமும் தானு மேகி
மூவிரு முகத்து வள்ளல் முழுதருள் பெற்ற சேனை
காவலன் வெகுண்டு நின்ற களத்திடை அணுக லோடும்
மேவலர் எதிர்ந்தார் என்று வியன்கழற் பூதர் ஆர்த்தார். 16

பொற்றைக ளேந்தி ஆர்க்கும் பூதரை இலக்கர் தம்மைச்
சுற்றுறு துணையி னோரைத் தொல்லைநாள் நகரஞ் செற்ற
கொற்றவன் தன்னை அன்னோர் வலியினைக் கொடியோன் நோக்கி
இற்றது கொல்லோ நந்தம் வாழ்க்கையென் றிரங்கிச் சொல்வான். 17

வேறு

பகைஞர்க ளாயினோர் பரவித் தன்மிசை
இகல்செய வருவரேல் இரங்கி ஏங்குதல்
மிகுபழி இங்கிது வினவின் மானவர்
நகைசெய்வர் பொருவதே நன்று போலுமால் 18

எச்சமில் சேனையும் படையும் ஈண்டிய
கைச்சிலை இருந்தது கரியும் ஒன்றுள
தச்சுறு கின்றதென் ஆவ தாகுமால்
பொச்சையர் கடன்நனி பொருமல் கொள்வதே. 19

வெல்லினும் செறுநர்முன் வெரிந தியினும்
அல்லது விளியினு மாக யானினி
மல்லலம் படையொடு மாற்ற லார்மிசைச்
செல்லுவ தன்றியே இரங்கல் சீரிதோ. 20

வேறு

கண்ணுறு படையை நோக்கிக் கருத்திடைக் கவலை எய்தி
எண்ணினன் றயர்தல் வீரர் இயற்கைய தாமோ பின்னர்
நண்ணிய வாறு நண்ண நானினித் தளரேன் என்னுத்
துண்ணெனத் தேறிச் சென்றான் சூரனுக் கமைச்சன் ஆனோன். 21

இங்கிது பொழுது தன்னில் எங்கணும் இருட்கு ழாஞ்சூழ்
கங்குலும் பகலும் மாலைக் காலமும் கலந்த தென்ன
அங்கவன் தானை வெள்ளத் தவுணரும் பூதர் தாமும்
பொங்கொலிக் கடல்போல் ஆர்த்துப் பொள்ளென அமரின் ஏற்றார். 22

வேறு

தலைப்பட எழுக்களில் தண்டில் தாக்கினர்
இலக்குற நேமிகள் கணிச்சி ஏவினர்
மலைக்குவை எறிந்தனர் மரங்கள் வீசினர்
சிலைத்தனர் வயிர்துடி செறிவெம் பூதரே. 23

வில்லுமிழ் சரத்தினில் வேலில் வாளினில்
கல்லினில் நாஞ்சிலில் கழுமுள் ஆயதில்
வல்லையந் தனில்உடை வாளில் வச்சிரச்
செல்லினின் நுதிகெழு திகிரி நேமியில். 24

தண்டினில் தோமரம் தன்னில் சங்கினில்
பிண்டிபா லத்தினில் ஆற்றப் பீடுமேல்
கொண்ட தோர் எழுவினில் பிறவில் கொட்புறு
அண்டரும் அவுணரும் அணிந்து போர்செய்தார். 25

அயர்ப்புறு தானவர் அமைச்சர் யாவரும்
வியர்ப்பினில் வந்திடு வெங்கண் வீரரும்
வயப்பெரும் சிலையினை வணக்கி வாளிதூய்ப்
புயற்படு பெயலெனப் பொழிந்து போர்செய்தார். 26

பெய்வதொத் தெங்கணும் பெரிதும் வீழ்தலால்
உய்வதெத் தன்மையென் றுலகம் அச்சுற
இவ்வகைத் திறத்தினர் இரண்டு பாரினும்
தெய்வதப் படைகளும் மரபில் சிந்தினர் 27

மாய்ந்தனர் பூதரும் வாம்பில் தானவர்
சாய்ந்தனர் கரங்களும் தலையும் சிந்தினர்
வீந்தன கரிபரி விளிந்த தேர்நிரை
பாய்ந்தன செம்புனல் பரந்த கூளியே. 28

நொந்தனர் இலக்கரும் நோன்மை நீங்கினர்
முந்துறும் அமைச்சர்போர் முயன்று நின்றனர்
அந்திலவ் வேலையில் அதனை நோக்கியே
வெந்திறல் வெய்யவன் வெகுண்டு சென்றனன். 29

இடித்தென உரப்பினன் இமைப்பில் எய்திமுன்
வடித்திடு சிலையினை வாங்கித் தானவர்
முடித்தலை பனித்திட முழுதும் யாக்கைகள்
பொடித்தென வழுத்தினன் புங்க வாளியே. 30

நீண்டதோர் சிலீமுகம் நெடிது மேலவன்
தூண்டிய காலையில் துணிந்த கையினர்

வீண்டிடு தலையினர் விளிந்த மெய்யினர்
மாண்டனர் அமைச்சர்கள் வறந்த தானையே. 31

துறக்கம தலைத்திடு தொலைவில் தானவர்
மறுக்கமுற் றுரைந்தனர் வந்து போர்செய
விறற்படு சாரதர் வெகுண்டு மேற்செலா
இறப்புறு வரைபல எடுத்து வீசினர் 32

வீசிய வேலையில் வெதும்பி விம்மியே
மாசுறு தானவர் வாகை சிந்தியே
ஆசறு போலகத் தட்டில் சூடுறு
பூசைய தாமென உடைந்து போயினர். 33

இடைந்தனர் ஆகியே அவுணர் யாவரும்
உடைந்தனர் போதலும் உலப்பில் பூதர்கள்
படர்ந்தனர் தெழித்தனர் பையுள் மாலையில்
தொடர்ந்தனர் பற்றினர் தொலைத்தல் மேயினர். 34

கண்டனன் ஆங்கவை அறத்தைக் காயபவன்
புண்டிகழ்ந் தானையகட் பூதர் மேற்செலா
விண்டொடர் பெருந்தனு வாங்கி வெவ்வுயிர்
உண்டிடு பாந்தெரீஇ உலப்பின் றேவினன், 35

ஏவிய நோன்கணை யாவும் ஏன்றெழு
தீவிழிப் பூதர்பால் சேறல் இந்திரன்
வாவிய ஊர்திகள் வாரி நேமியில்
தூவிய துள்ளியின் தோற்றம் போன்றதே. 36

கைச்சிலை உகைத்திடு கணைகள் யாவையும்
நச்சென விடுத்தலும் நடுங்கிப் பூதர்கள்
அச்சுற மெலிந்தனர் அமரர் கோமகன்
வச்சிரம் எய்திய வரைகள் மானவே. 37

வேறு

வானவர்கள் கோமகன் வயக்களிறு தென்னத்
தானவர்கள் போற்றுதரு மப்பகைஞன் ஊர்ந்த
ஆனையது பூதர்தமை அங்கைகொடு வாரி
ஊனொடுயிர் சிந்திட உடற்றியதை அன்றே. 38

கோடதொறு நான்குகொடு குத்தியது தாளின்
ஊடுறமி தித்தவண் உழக்கியது வாலால்
பாடுற எறிந்தது பனைக்கைய துகொண்டே
வீடுறமுன் எற்றியது வீரர்படை தன்னை. 39

மாறகலும் வெங்கரியில் வாறடல்செய் காலை
வீறுகெழு சாரதர்கள் வெற்புமிசை வீசி
ஊறுசெய அங்கதின் உலப்பில்கணை ஓச்சி
நாறுநடு வார்தொகையின் நண்ணினர்கள் வீரர். 40

காயமுழு தொன்றிய கணக்கில்படை யாவும்
மூயதவ ளக்களிறு முற்றுமெழு சோரி
பாயவலை கிற்பது பணிக்குழுவு கவ்வச்
சேயபணி சுற்றமறை திங்கள்படர்ந் தென்ன. 41

வெந்திறல்கொள் புண்டரிக வேழமிது தன்மை
நொந்ததெனி னுந்தனது நோன்மையழி யாதாய்
முந்தியிடு சேனையை முருக்கவது நோக்கித்
தந்திநிரை சாரதர் தமைத்தடித லுற்ற. 42

கண்டைகெழு தாரினொலி கல்லெனு விரைப்ப
அண்டமுடைந் தென்னநனி ஆர்த்தவுணன் ஊரும்
புண்டரிக வெங்களிறு போர்த்தொழில் இயற்ற
உண்டைகெழு பூதநிரை ஒய்யென உடைந்த. 43

தண்டமுடை கின்றசெயல் தன்னைவிறல் வெய்யோன்
கண்டனன் அழனறுதன கார்முகம தொன்று
கொண்டனன் எடுத்தது குனித்தழலின் வாளி
அண்டர்பகை யூர்தியின் அடைச்சிநனி ஆர்த்தான். 44

ஆர்த்தடரும் வேலையில் அடற்களிறும் அங்கோர்
மூர்த்தமயர் வுற்றது புனிந்தவுணர் கோமான்
பார்த்திறையின் நூறுகணை பாலமிசை ஒச்சத்
தேர்த்துலவு சோரியொடு தேர்மிசை இருந்தான். 45

இருந்ததிற லோன்மிசையொ ரெஃகமது வாங்கி
விரைந்துதரு மப்பகை விடுத்திடலும் நோக்கி
மருங்கெனமுன் வந்துதிறல் வாசவன்அவ் வைவேல்
முரிந்துதுணி யாகவொர் முரட்கணை தொடுத்தான். 46

மத்தகய மன்னதிறல் வாசவன் விரைந்தே
பொத்திரம தொன்றுகொடு போரயில் முருக்கிக்
குத்திரம தொன்றவுணர் கூவிவெருக் கொள்ள
அத்திரமென் மாரிகொட வன்றனை மறைத்தான். 47

மறைத்தலும் மறப்பகைஞன் வாளிமழை தூவிக்
குறைத்தனன் அளப்பில்கணை ஏனவை குழீஇப்போய்ச்
செறுத்தவன தாகமிசை சென்றுசெருக் கின்றி
விறற்கவச நக்குபு விளிந்துபுடை வீழ்ந்த. 48

வேறு

மீண்ட வேலையின் வெய்ய சூழ்ச்சியோன்
மாண்டு ளானென வாகை வீரன்மேல்
பூண்ட யங்குறு பொன்னந் தண்டமொன்
றீண்ட வீசினன் யாரும் அஞ்சவே. 49

எழுவின் நீள்கதை இமைப்பில் சென்றவன்
பழுவின் மார்பகம் பட்ட வேலையின்

விழும நோயுறு விம்மி னனரோ
வழுவை மேலையோன் வயத்தின் மேவவே. 50

கருத்தில் நல்லறங் காய்ந்த வன்செயல்
தெரித்து நின்றிடும் திறல்கொள் வாகினன்
உருத்து நோக்கியே உரையும் தன்னுளக்
கருத்தும் பிற்படக் கடிது செல்லுவான். 51

நின்னில் ஐயநின் நேர லன்புயந்
தன்னை யாத்துநிற் றருவம் யாமெனப்
பன்னு மானவர் பௌவம் நீத்தொராய்
முன்னு தானவர் முதல்வன் நேர்புக. 52

எதிரி லாமையால் யாரும் அஞ்சவே
அதிரு நோன்கழல் ஆடல் மொய்ம்பனை
மதியில் தானவன் மழைகள் மின்குழுச்
சிதறி யென்னத்தீச் சிந்த நோக்கினன். 53

நோக்கி நீகொலோ நோன்மை யோடெனைத்
தாக்கு மாறுவந் தனையை யானுனை
யாக்கை சிந்திய அமைந்து நின்றனன்
காக்க வல்லையேல் காத்தி நீ யென்றான். 54

மொழியும் ஆடல்சேர் மொய்ம்பன் கேட்டிது
விழுமி தாரினும் வெற்றி பெற்றனன்
அழிவ னேநினைக் காடல் கொள்வன்யான்
கழியை நீந்துதல் கடலில் பாடதோ. 55

மற்றுன் வன்மையும் மதர்ப்பும் நின்பெருங்
கொற்ற மானதும் வரத்தின் கொள்கையும்
இற்றை வைகலே ஈறு செய்வன்நீ
கற்ற போரினைக் கடிது செய்கென. 56

வேறு

கானக்களி வரிபம்பிய கமழ்தார்புனை அகலம்
வானக்கிறை தனதூர்திகள் மரபோடுசென் றிசைக்கும்
தீனக்குர லெனநாணொலி திசையெங்கணும் செல்லக்
கூனற்சிலை தனையொல்லையில் தருமப்பகை குனித்தான். 57

மற்கொண்டிடும் மிடல்மொய்ம்புள மதியில்லவன் ஒருபால்
எற்கொணடெழு களிற்றின்மிசைச் சிலைவாங்கினன் இருத்தல்
கற்கொண்டதொர் வெள்ளிக்கிரி மிசைகாணிய கணைதூய்
விற்கொண்டொரு பசுங்கார்முகில் மேவுற்றென லாமால். 58

அதுவன்றியும் அவனுந்திய அடுவெங்களி றலர்தண்
கதிரின்குழு முழுதொன்றுபு ககனந்தனில் எழுசெம்
மதியந்தன தொருபங்கையொர் வயவெம்பணி நுகரப்
புதிதொண்பிறை யதுவொன்றிடை புகநின்றது பொருவும். 59

முந்தேயவன் விடுக்கின்றதொர் முரண்வெஞ்சிலை முனியாக்
கந்தேயென நிமிர்தோளுடைக் கடுஞ்சூழ்ச்சியன் ஒழுகும்
செந்தேனுறழ் குணத்திற்சரம் பெலுத்தாத்திறன் மொய்ம்பற்
கந்தேயுமெய் வெளியின்றென அவனைக்கரந் தார்த்தான். 60

கரக்கின்றவன் விடுவாளிகள் கந்தன்படை ஞன்மெய்
அரக்குன்றுபட் டயின்மாய்ந்தவை அயல்வீழ்ந்தன கண்டான்
இரக்கின்றவர்க் குதவான்கரந் தேற்காத்திரு வினர்பால்
பரக்கும்பொரு ளுகுத்தன்னதிற் பயன்பெற்றிலன் எனவே 61

அயில்சிந்திட முரணவெங்கணை அயல்வீழ்தலும் அடுபோர்
முயலுந்திறல் கொண்மொய்ம்பினன் முனிந்தெஃகமொன் றெடுத்துப்
புயலன்னதொர் வடிவத்தவன் பூணுருநெஞ் செறியச்
செயலன்னது கண்டாங்கெதிர் தீவாளிகள் உய்த்தான். 62

உய்க்குஞ்சுடர் வடிவாளிகள் ஒருங்கேதவ முருக்கி
மைக்கொண்டதோர் நிகர்மேனியன் மனந்தன்னென அணுகி
மெய்க்கொண்டதோர் நெடுஞ்சாலிகை விளியும்படி வீட்டிப்
புக்குள்ளுற மூழ்கித்தனி புறம்போந்தது விரைவில். 63

புறம்போதலும் இகல்மைந்தி பொருமிப்புகை உயிர்த்து
நிறம்போகிய செந்நீரொடு நிலைநின்றிலன் இருப்ப
மறம்போகிய தனிவெங்கரி மதிமன்னவை யலோரா
அறம்போகிய மனத்தான்றனை அடுவுற்றதை யன்றோ 64

முந்துற்றடு கரிதன்னடி நல்மொய்ம்பன்னி ரதத்தைத்
தந்ததகொடாகை கொடுதாக்குபு தரைதன்னிடை இட்ட
கந்தொத்ததொர் பொழிவொன்றது மைந்தொகவவன் வலவன்
சிந்தப்புடைத் ததுகாண்டலுஞ் செந்தீயெனக் கனன்றான். 65

வையந்தனை தீர்தலும் வறிதேயயல் பாயா
மெய்யங்கையை பொருமுலவன் மேல்வந்திடும் வேழக்
கையங்குறப் பற்றுக்கடங் கலுழுங்கவுள் மோதி
ஓய்யென்றெடுத் தப்பாலையின் உலகம்புக உய்த்தான். 66

எறிந்தானெடுத் ததுகாலையில் இபம்விண்ணணிடை யேகிப்
பிறிந்தாகவம் இயற்றெல்லையில் பெயர்காலையின் அமைச்சன்
அறிந்தான்கயம் இழந்தேன்கொலென் றயிராவத ஞேடு
மறிந்தான்புனை கலந்தன்னொடு மணிமாமுடி சிந்த. 67

வீழ்கின்றதொர் களிறுற்றவும் வெருவிப்படைத பதைத்து
மாழ்கின்றது புடைபோகிய மதியில்லவன் எழுந்தே
காழ்கொண்டதொர் கதையொன்றுதன் கைக்கொண்டுரத் தெறியத்
தாழ்கொண்டதொர் கரத்திற்கடுத் தலைகொண்டது தறித்தான. 68

வலிகொண்டதொர் தனித்தண்டது மடிவாதலும் மற்றோர்
தலைசந்தனை விடவாங்கெதிர் குறுகக்கரம் பற்றிப்

புலிகண்டதோர் கலைமானெதிர் புக்காலென அவுணர்
தலைவன் படைமீன அடல்மொய்ம்பினன் தடமார்பிடைப் புடைத்தான் 69

மூளாவுருத் தறைநின்றுழி முதலற்றிடு தருப்போல்
வாளாபுவி மிசைவீழ்தலும் வயமிக்கவன் ஒருகால்
தாளாலுதைத் தனன்அத்துணை தருமப்பகை வீழ்ந்தான்
கேளாகிய அவுணப்படை கெட்டோடிய தன்றே. 70

வேறு

விழுந்தயர் புண்டரீக வெங்கரி உயிர்த்து மெல்ல
எழுந்தது தருமகோபன் இறந்தபா டதனை நோக்கி
அழுந்திடும் இன்னல் வேலைக் ககனகரை கிடைத்தா லென்னத்
தொழுந்திறல் வீரவாகுத் தலைவனை நோக்கிச் சொல்லும். 71

செய்யலை வெகுளி எந்தாய் சிறியனை அருளிக் கேண்மோ
பொய்யென நினையல் வாரிப் புண்டரீ கப்பேர் உள்ளேன்
வையகம் போற்றுஞ் சீரோன் மாதிரங் காவல் கொண்டோன்
கையனித் தருமகோபன் கடுஞ்சிறைப் பட்டேன் பன்னாள். 72

வன்றளை சூழ்கும் தீயென் மதியிலா அமைச்சற் போற்றி
இன்றுகா றார்தியானேன் ஏவின பலவும் செய்தேன்
ஒன்றுநாள் மறுத்த துண்டேல் உயிர்குடித் தூறும் வல்லே
தின்றிடு மென்றே அஞ்சித் திரிந்தனன் செயல்வே றில்லேன். 73

எட்டுள திசையில் வைகும் அரக்கர்தன் இகழ்ந்தா ரென்று
மட்டறு வெகுளி வீங்கி மற்றெனை ஊர்ந்து சென்றுள்
கிட்டினன் அவரை யெல்லாங் கிளையொடு முடித்தோன் தன்னை
அட்டனை நீயே யல்லால் அவனையார் அடுதற் பாலார். 74

புந்தியில் அறத்தைக் காயும் புரைநெறி அமைச்சன் தன்னை
வந்துநீ அடுத லாலே வானவர் கவலை தீர்ந்தார்
உய்ந்தனன் சிறந்தேன் எற்கும் ஊதியம் இதன்மேல் உண்டோ
முந்துறு தளையின் நீங்கி முத்திபெற் றுரை ஒத்தேன். 75

தீதுகொள் பவத்தின் நீரால் அவுணர்தஞ் சிறையிற் புக்கேன்
மாதவஞ் செய்தேன் கொல்லோ மற்றுனை எதிரப் பெற்றேன்
ஆதலின் உய்ந்தேன் என்றன் ஆணையை அளிக்கு மாற்றாற்
போதுவன் தமியன் என்று தொழுதது புண்டரீகம். 76

புண்டரீ கத்தின் வாய்மை பொருக்கென வினவு வீரன்
அண்டரும் உவகை பொங்க அகலுதி இருக்கைக் கென்ன
விண்டொடர் நெறியிற் சென்றுங் கவுணர்க்கு வெருவ லின்றிப்
பண்டமர் திசையின் நண்ணிப் பரிவற வைகிற் றன்றே. 77

மாதிரங் காவல் பூண்ட மதக்களிற் றரசு செல்ல
ஆதியில் அறத்தைக் காயும் அரிதகன் இறுதி நோக்கிப்
பூதர்கள் ஆர்த்து வீரன் புயவலி புகழ்த லுற்றார்
தூதுவர் அதுகண் டோடிச் சூரனைத் தொழுது சொல்வார். 78

தண்டக முதல்வ கேண்மோ தானையும் தானு மேகி
மண்டமர் புரிந்து வீர வாகுவால் அமைச்சன் மாய்ந்தான்
உண்டையும் அழித லூற்ற உங்குவன் ஊர்ந்து சென்ற
புண்டரீ கப்பேர் பெற்ற தந்தியும் போய தென்றூர். 79

வேறு

பழுது டைத்திறன் மந்திரி பட்டசொல் வினவி
முழுது சுற்றிய இன்னலம் புணரியின் மூழ்கி
அழுது யிர்த்துமெய் யுயிர்பதை பதைத்திட அங்கண்
எழுது சித்திரப் பாவைபோல் உணர்வுபோய் இருந்தான். 80

ஆகத் திருவிருத்தம் - 1,713

## 11. பானுகோபன் வதைப் படலம்*

— 00—

**எள்ளல் செய்தெனைப் பற்றியே சிறையகத் திட்ட**
**கள்வன் இப்பகல் முடிந்திடும் அன்னது காண்பான**
**பொள்ளெ னப்படர் வேன்எனப் புந்திகொண் டவன்போல்**
**ஒள்ள ழற்கதிர் வீசியே இரவிவந் துதித்தான்.** 1

சுருதி நீங்கிய அவுணர்கோன் இத்திறந் துயரம்
பெரிதும் எய்தியே இருந்துழிக் கண்டனர் பெயர்ந்து
குருதி நோக்குடை ஒற்றரில் ஒருசிலர் குறுகிப்
பரிதி தன்பகை அடிபணிந் திணையன பகர்வார். 2

முன்னை மாயமாப் படைக்கலந் தூண்டியே மொய்ம்பு
பன்னி ரண்டுளான் தூதனைப் படையொடும் படுத்துத்
தொன்னெ டுங்கடல் இட்டனை இட்டதைச் சுரர்கள்
அன்ன காலையே விளம்பினர் அறுமுகத் தவற்கே. 3

வெங்கண் மால்கரிக் கிளையவன் ஆங்கது வினவிச்
செங்கை வேலினை ஆயிடை இருந்தனன் செலுத்த
அங்க தொல்லையின் மூவிரு புணரிகள் அகன்று
பொங்கு தூயநீர் அளக்கரின் நடுவுபுக் கதுவே. 4

புக்க வேலையின் மாயமாப் பெரும்படை புறந்தந்
தக்க ணந்தொலை வெய்திய தயர்வுயிர்த் தறிந்து
தொக்க பாரிடர் யாவரும் வீரர்தந் தொகையும்
மிக்க திண்டிறல் வாகுவும் எழுந்திவண் மீண்டார். 5

ஆண்டவ் வெல்லைவந் திறுத்திடும் வேற்படை அருளி
மீண்டு கந்தவேள் இருந்துழிப் போந்தது விரைவால்

* ஐந்தா நாள் பானுகோபன் வதை நிகழ்ந்ததாகும்.

ஈண்டும் மாநகர் சுற்றியே செறுநர்கள் இகலின்
மூண்டு போர்செய்வான் புரிசையுட் புகுந்தனர் முரணால். 6

அரண முற்றுளார் இந்நகர் அலைத்தலும் அவற்றைத்
தரணி காவலன் வினவியே தன்னயல் நின்ற
இரணி யன்றனைக் கனல்முகத் தண்ணலை ஏனை
முரணில் மக்களை அமைச்சனை விடுத்தனன் முறையால். 7

ஆன காலையில் வந்துவந் தடுசமர் ஆற்றி
மான வேற்படைப் பண்ணவன் தூதனால் மற்றை
ஏனை யோர்களால் முத்திற வீரர்கள் இறந்தார்
மீன மாய்க்கடல் புகுந்தனன இரணியன் வெருவி. 8

மன்னர் மன்னவன் இவையெலாம் வினவியே மனத்தில்
உன்ன ருந்துயர் வேலைபுக் காற்றலா துழந்தான்
இந்ந கர்ப்படை யாவையும் வறந்தன இன்னும்
துன்ன லார்இவண் நின்றனர் என்றிவை சொற்றார். 9

சொற்ற வாசகம் வினவலுஞ் சூரியன் பகைஞன்
இற்ற வேகொலாம் நம்பெரும் வாழ்க்கையென் றிரங்கிச்
செற்ற மோடுதுன் பெதிரெதிர் மலைந்திடச் செங்கேழ்ப்
பொற்றை யன்னதன் இருக்கையை ஒருவினன் போந்தான், 10

போந்து கோநகர் அணுகியே அன்பொடு புணர்ந்த
வேந்தன் மாமலர் அடிகளை உச்சியின் மிலைச்சி
ஆந்த ரங்கமாம் அளியொடு முந்துநின் றவுணர்
ஏந்தல் இம்மொழி கேண்மியா நன்கென இசைப்பான். 11

மாயை தந்ததொல் படையினால் செறுநரை மயக்கித்
தூய நீர்க்கடல் இட்டனன் சுரரது புகல
ஆய காலையில் வேல்விடுத் தவர்தமை மீட்ட
சேயை வெல்வது கனவினும் இல்லையால் தெரியின். 12

தெரிந்த மற்றுனக் குரைப்பதென் முற்பகற் செவ்வேல்
பொருந்து கைத்தலத் தாறுமா முகனொடு பொருது
வருந்தி வன்படை ஆற்றலும் இழந்தனை வறிதாய்
இரிந்து மற்றிவண் வருதலால் உய்ந்தனை எந்தாய். 13

ஏற்ற தோர்சிலை இழந்தனை மானமும் இன்றித்
தோற்று வந்தனை தொல்வரத் தியற்கையும் தொலைந்தாய்
சீற்ற முற்றிலன் முருகவேள் அவன்சினஞ் செய்யின்
ஆற்று மோவெலா அண்டமும் புவனங்கள் அனைத்தும். 14

ஆர ணன்தனை உலகொடும் உண்டுமுன் னளித்த
கார ணன்தனி ஆழியைக் களத்திடை அணிந்த
தார கன்தனை நெடியமால் வரையொடு தடிந்த
வீர வீரனை யாவரே வன்மையால் வெல்வார். 15

புல்லி தாகிய விலங்கினைப் படுப்பவர் புதலுள்
வல்லி யந்தனக் குண்டியாய் மாய்ந்திடுங் கதைபோல்
எல்லை யில்பகல் அமரரை அலைத்திடும் யாமும்
தொல்லை நாள்வலி சிந்தியே குமரனால் தொலைந்தோம். 16

கோட லுஞ்சுனைக் குவளையுங் குளவியுங் குரவும்
ஏட லர்ந்திடு நீபமும் புனைந்திடும் இளையோன்
பாட லந்திறல் உரைப்பதென் ஆங்கவன் பணித்த
ஆட லம்புயத் தண்ணலை வெல்வதும் அரிதால். 17

நெடிது பற்பகல் செல்லினும் நிரம்புவ தொன்றை
இடைவி டாமலே முயன்றுபெற் றிடுகின்ற தியற்கை
உடல்வ ருந்தியும் தங்களால் முடிவுறு மொன்றை
முடியு மீதெனக் கொள்வது கயவர்தம் முறையே. 18

ஆற்றல் மைந்தரை இழந்தனை நால்வகை அனிகத்
தேற்றம் அற்றனை என்றுடன் ஒருவன்நீ இருந்தாய்
மேற்றி கழ்ந்தநின் குலத்தினை வேரொடு வீட்டக்
கூற்றம் வந்ததும் உணர்கிலை இகலைமேற் கொண்டாய். 19

வெஞ்ச மஞ்செய வல்லவர் கிடைத்திடின் மிகவும்
நெஞ்ச கந்தளிர்ப் பெய்துவன் நேரலர் தமருக்
கஞ்சி னோன்என்று கருதலை அரசநீ இன்னும்
உஞ்ச வைகுதி யோவெனும் ஆசையால் உரைத்தேன். 20

உறுதி ஒன்றினி மொழிகுவன் பொன்னகர் உள்ளார்
சிறைவி டுக்குதி நம்மிடைச் செற்றம தகற்றி
அறுமு கத்தவன் வந்துழி மீண்டிடும் அகற்பின்
இறுதி யில்பகல் நிலைக்குநின் பெருவளம் என்றான். 21

வெம்பு தொல்கதிர் வெருண்டவன் உரைத்தசொல் வினவித்
தும்பை யந்தொடை மிலைச்சிய மணிமுடி துளக்கி
மொய்ம்பும் ஆகமுங் குலுங்கிட முறுவலித் துயிர்த்து
நம்பி மந்திரச் சூழ்ச்சிநன் றெனா நவில்வான். 22

வேறு

என்னிவை உரைத்தாய் மைந்த இன்றியான் எளிய னாகிப்
பொன்னுல குள்ள தேவர் புலம்புகொள் சிறையை நீக்கின்
மன்னவர் மன்னன் என்றே யாரெனை மதிக்கற் பாலார்
அன்னதும் அன்றி நீங்கா வசையுமொன் றடையு மாதோ 23

கூனொடு வெதிரே பங்கு குருடுபே ருமை யானோர்
ஊனம தடைந்த புன்மை யாக்கையோ டொழியும் அம்மா
மானம தழிந்து தொல்லை வலியிழந் துலகில் வைகும்
எனையர் வசையின் மாற்றம் எழுமையும் அகல்வ துண்டோ. 24

தேவரும் மலர்மே லோனுஞ் செங்கண்மால் முதலா வுள்ள
ஏவரும் ஆணை போற்ற இருந்தர சியற்றல் உற்றேன்

மூவரின் முதலா முக்கண் மூர்த்திதன் வரங்கொண் டுள்ளேன்
மேவலர் சிறையை இன்று விடுவனோ விறலி லார்போல். 25

பேரெழில் இளமை ஆற்றல் பெறலரும் வெறுக்கை வீரம்
நேரறு சுற்றம் யாக்கை யாவையும நிலைய வன்றே
சீரெனப் பட்ட தன்றே நிற்பது செறுநர் போரில்
ஆருயிர் விடினும் வானோர் அருஞ்சிறை விடுவ துண்டோ. 26

இறந்திட வரினும் அல்லால் இடுக்கணொன் றுறினுந் தம்பால்
பிறந்திடு மானந் தன்னை விடுவரோ பெரிய ரானோர்
சிறந்திடும் இரண்டு நாளைச் செல்வத்தை விரும்பி யானும்
துறந்திடேன் பிடித்த கொள்கை சூரனென் றொருபேர் பெற்றேன். 27

இன்னுமோர் ஊழி காலம் இருக்கினும் இறப்ப தல்லால்
பின்னுமிங் கமர்வ துண்டோ பிறந்தவர் இறக்கை திண்ணம்
மின்னெனும் வாழ்க்கை வேண்டி விண்ணவர்க் கஞ்சி இந்த
மன்னுயிர் சுமக்கி லேன்யான் மாயவன் றனையும் வென்றேன். 28

அஞ்சினை போலும் மைந்த அளியரின் இருக்கை போகித்
துஞ்சுதி துஞ்ச லில்லா வரத்தினேன் றொலைவ தில்லை
நெஞ்சிடை இரங்கி யாதும் நினையலை நேர லார்மேல்
வெஞ்சமர் புரியப் போவேன் என்றனன் வெகுளி மேலான். 29

இவ்வகை தாதை கூற இளவல்தன் பகைஞன் கேளா
உய்வகை இல்லை போலும் உணர்ந்திலன் உரைத்த தொன்று
மெய்வகை விதியை யாரே வென்றவர் வினையிற் கேற்ற
செய்வகை செய்வேன் என்னாச் சிந்தைசெய் தினைய சொல்வான். 30

அறிவொடு சிறிதும் இல்லேன் அடியனேன் மொழிந்த தீமை
இறையதும் உள்ளங் கொள்ளா தெந்தைநீ பொறுத்தி கண்டாய்
சிறியதோர் பருவப் பாலர் தீமொழி புகன்ற ரேனும்
முறுவல்செய் திடுவ தன்றி முனிவரோ மூப்பின் மேலோர். 31

அத்தநீ வெகுளல் நம்மூர் அலைத்திடுங் கணங்கள் தம்மை
வித்தக வன்மை சான்ற விறற்புய னோடும் அட்டுன்
சித்தமும் மகிழு மாறு செய்குவன் விடுத்தி யென்னாக்
கைத்தலம் முகிழ்த்துத் தீயோன் கழலிணை பணிதல் செய்தான். 32

பணிந்திடு கின்ற காலைப் பதுமைதன் கேள்வன் செற்றந்
தணிந்தனன் உவகை பெற்றான் தனயனின் உள்ளம் போர்மேல்
துணிந்தது போலும் நன்றால் துன்னலார் தம்மை வெல்வான்
அணிந்திடு தானை யோடும் அகலுதி ஐய என்றான். 33

தொடையமை காமர் பொற்றோட் சூரிது புகல மைந்தன்
விடையது பெற்று மீண்டு மேதகு துயரி னோடு
கடிதுதன் கோயில் புக்குக் கடவுளர் பலருந் தந்த
அடல்நெடும் படைக ளெல்லாம் ஆய்ந்தனன் எடுத்தான் அன்றே. 34

மையுறு தடங்கண் மாதர் வனமுலை திளைக்கு மார்பின்
மெய்யுறை யொன்று வீக்கி விரல்மிசைப் புட்டில் சேர்த்திக்
கையுற ஒருவில் லேந்திக் கைப்புடை கட்டி வாளி
பெய்யுறும் ஆவ நாழி பின்னுற வீக்கி யாத்தான். 35

சேமமா யுள்ள எண்ணில் படைகளுந் தேருஞ் சுற்றத்
தாமநீள் கவிகை வேந்தன் தனிமகன் கடையிற் சென்று
காமர்சூழ் கனக வையம் ஒன்றின்மேற் கடிது புக்கான்
ஏமமால் வரையின் உம்பர் எழிலியே றணைந்த தேபோல். 36

மற்றது காலை தன்னில் வாம்பரி நிரையுந் தேருங்
கொற்றவெங் களிறும் வீரர் குழாங்களுங் குணிப்பில் வெள்ளஞ்
சுற்றின இயங்கள் முற்றுந் துவைத்தன துவச கோடி
செற்றின இரவி செல்லுந் தேயம தடைத்த அன்றே. 37

தேரிடைப் புகுந்து நின்றோன் இப்பெருஞ் சேனை வெள்ளம்
பாரிடைக் கொண்டு நின்ற புணரியிற் பாங்கர் சூழச்
சூரிடைக் கொண்ட அன்புந் துயரமும் உளத்தை யுண்ணப்
போருடைத் திசையை நோக்கிப் பொள்ளெனப் போதல் உற்றான். 38

வேறு

மாவாழ் தெருவு பலகோடிகள் வல்லை நீங்கி
மேவார் பொருத களத்தெல்லை விரைந்து நண்ணி
மூவா யிரரும் பிறரும்முடி வான நோக்கி
யாவா வெனவே இரங்கிக்க லுழ்ந் தல்லல் செய்வான். 39

தாளாண்மை மிக்க அசுரன்மகன் தாங்கல் செல்லா
நீளா குலத்தின் அழிகின்ற தன் நெஞ்சு தேற்றிக்
கேளார் தொகைமேற் பெருஞ்சீற்றங் கிளர்ந்து செல்லச்
சூளால் இனைய தொருவாசகஞ் சொல்லல் உற்றான். 40

மாசாத்தர் அன்ன வயப்பூதரை மாய வாட்டித்
தேசார்க்கும் வேலோற் கிளையோனைச் செகுத்தி டேனேல்
காசாற் பொலியும் அகல்அல்குலின் காமம் வெஃகி
வேசாக்கள் பின்செல் வறியானில் விளங்க யானே. 41

என்னா ஒருசூள் இசையா அவனேக லோடும்
அன்னான் வரவு தனைநோக்கி அவுணர் தங்கள்
மன்னானும் நின்ற மகனும் மலைவ தற்குப்
பின்னார் வருவார் எனப்பூதர்கள் பேச லுற்றார். 42

பேசுற்ற காலை அவுணப்படை பேர்ந்து சென்றாங்
காசற்ற பூதப் படைதம்மெதிர் ஆர்த்து நேரப்
பூசற் பறைகள் இயம்புற்றன பூமி பொங்கி
மாசற்ற வானைத் திசையோடு மறைந்த தன்றே. 43

ஆர்த்தார் கிடைத்தார் அடற்பூதர் அடுக்கல் மாரி
தூர்த்தார் படைகள் சொரிந்தார் மரந்தூவ லுற்றார்

பார்த்தார் அவுணர் எழுநாஞ்சில் பரசு தண்டஞ்
சீர்த்தா கியவில் லுமிழ்வாளி செலுத்தி விட்டார். 44

வேறு

பொங்கு வன்மைகொள் பூதரும், வெங்கொ டுந்தொழில் வினையரும்
இங்கிவ் வாறெதிர் ஏற்றிடா, அங்கண் வெஞ்சமர் ஆற்றினர். 45

அரிய ஒண்பகல் அல்லொடே, பொருது பார்மிசை புக்கபோல்
இருதி றத்தரும் இகலியே, விரவு பூசல் விளைத்தனர். 46

உரங்கொள் பாரிடர் உய்த்திடு, மரங்கள் குன்றுகள் மாண்டிட
நெருங்கி நேர்ந்த நிசாசரர், சரங்கள் கொண்டு தடிந்தனர். 47

விற்கொள் அம்பினை வேலினை, எற்கொள் நாஞ்சில் எழுக்கதை
வர்க்க மானதை வன்கணர், கற்க ளாற்றுகள் கண்டனர். 48

சிவந்த பங்கிகொள் சென்னிகள், நிவந்த மொய்ம்பு நிலத்துகக்
கவிழ்ந்து ருண்டு களத்திடை, அவிந்த பூதம் அனந்தமே. 49

நெஞ்சம் மொய்ம்பும் நெடும்பதஞ், செஞ்செ வித்தலை சிந்தியே
எஞ்சு தானவர் எண்ணிலார், துஞ்சி னார்பழி துஞ்சவே. 50

பாய்ந்த வாசிகள் பாரிடங், காய்ந்த யானைகள் காசினி
ஏய்ந்த தேர்களி யாவையும், மாய்ந்து பாரின் மறிந்தவே. 51

சோரி தூங்கிய தொல்பிணம், மேரு விண்ணை விழுங்கின
காரி யூர்தி கருங்கொடி, ஓரி கங்கம் உலாயவே. 52

இங்க வாறிரு பாலரும், வந்து நேர்ந்து மலைந்திடப்
புந்தி நோவறு பூதர்தம், முந்து தூசி முரிந்ததே. 53

தாழும் ஒன்னலர் தாக்கலால், நீள்கொ டிப்படை நெக்கிடக்
கூழை நின்றிடு கூளிகள், ஆழி யென்ன அடுத்தவே. 54

புடைநி ரம்பிய பூதர்வந், திசைவி டாதெதிர் ஏற்றிடா
அடலின் மேதகும் அவுணமாக், கடலை நின்று கலக்கினர். 55

ஒடிந்த தேர்கள் உலந்துபார், கிடந்த யானை கிளர்ந்தமா
மடிந்த தானவர் மாப்படை, தடிந்து லாயினர் பாரதர். 56

வேறு

அதிரும் கழல்சேர் அவுணப் படைகள்
முதிரும் குறளோ ற்றமுடிந் திடலும்
எதிருஞ் சமரத் திடையெய் தியதோர்
கதிரின் பகையங் கதுகண் டனனே. 57

சிந்தாய் வருமிச் சிலதா ரதரே
நந்தா னையெலாம் நலிகின் றனரோ
அந்தா இனிதென் றடுதேர் கடவா
வந்தான் விரைவால் இமையோர் மறுக. 58

கடிதாய் வருகா லொடுகா ரெழிலி
படிமே லுறவே படர்கின் றதுபோல்
கொடிதா கியவிற் குனியா முனியா
வடிவா ளிகள்தூய் அவுணன் வரலும். 59

வண்டார் தெரியல் வலியோன் வரவைத்
தண்டா தமர்செய் திடுபா ரதர்கள்
கண்டார் எதிரே கடிதே கடவா
அண்டார் தொகைஅச் சுறஆர்த் தனரே. 60

தருவுங் கதையுந் தருசூ லமுமால்
வரையுங் கொழுவும் மழுவும் எழுவுஞ்
சொரிகின் றனர்பல் வளனுந் தொலையா
எரியின் மிசையே இடுமந் தணர்போல். 61

தொடுகின் றகழல் தொடுபா ரதர்கள்
விடுகின் றவெலாம் விரைவந் திடலும்
அடுகின் றசினத் தவுணன் கழலில்
படுகின் றசரம் பலதூண் டினனே. 62

பணிபட் டகனற் படைதூண் டுதலும்
திணிபட் டகனத் திறலோர் வரைகள்
அணிபட் டதருக் குலமா தியெலாம்
துணிபட் டனவே துகள்பட் டனவே. 63

கல்லும் தருவும் கதையும் பிறவும்
சொல்லும் திறலும் துகள்பட் டிடலும்
வெல்லும் தகுவன் மிகுபா ரதர்மேல்
செல்லும் படிவெங் கணைசிந் தினனே 64

சிந்துற் றிடுசெங் கனல்வெங் கணைகள்
பொங்குற் றிடுகின் றபயங் கமெனா
வந்துற் றுடன்முற் றும்வருத் துதலால்
நொந்துற் றனர்அற் றனர்நோன் மையெலாம். 65

விடுகின் றகனற் கணைவெந் திறலோர்
உடலம் புரைசெய் திடவுற் றனரால்
படரும் குறியோன் கதைபற் றுளையா
அடுதொல் கிரவுஞ் சமதா மெனவே. 66

தெரிகூற் றநகனற் கணைசென் றுடபுகப்
பொருகொற் றமகற் றியபூ தர்மிசைப்
பெருகுற் றதுபோ ரிபெருங் கருவிண்
டுருகுற் றிடுசெம் பொழுகும் படிபோல். 67

கதிரும் கனல்வெங் கணைசா ரதர்மெய்
புதைகின் றுபரிசெம் புனல்வந் தெழுவ

உதிரம் பிறவுற் றிடுதீ யுறவால்
எதிர்வந் தவைதன் னிடனுய்ப் பதுபோல். 68

விடமெய்க் கணைமா ரிகள்தம் மிசையே
படவெய்த் தனர்சிந் தைபதைத் திடுவார்
கடவுட் கதிரைக் கனலும் கொடியோற்
குடைவுற் றனரால் உறுபூ தரெலாம் 69

**வேறு**

நிலைய ழிந்து நெடுங்கடல் பாரிடம்
தொலைய முன்னம் தொலைந்திடு தானவர்
வலிதெ ரிந்து வயம்புனை சானவர்
தலைவன் முன்வந்து சார்ந்தனர் என்பவே. 70

ஆய காலை அறிந்துவெம் பூதர்கள்
போய வாறும் புரையறு சூர்மரு
சேய வன்திறல் செய்கையும் நோக்கினன்
காயும் வெவ்வெரி கான்றிடு கண்ணினன். 71

மலைக்கு லக்கொடி வாமத்தன் மைந்தராம்
இலக்க வீரருள் ஏனைய மைந்தருள்
தலைக்கண் நின்ற பயங்கெழு மொய்ம்பினன்
விலக்கில் தேரொடும் வெம்படை ஏகினன். 72

ஆதி தந்த அறுமுகத் தெம்பிரான்
பாத முன்னிப் பரவிக் கடிதுபோய
மேத குங்கதிர் வெம்பகை தானையாம்
ஓத முட்கக் குனித்தனன் ஓர்சிலை 73

காமர் மொய்ம்பினன் கைத்தனுக் கோட்டலும்
தாமு னிந்து தகுவர்தந் தானைகள்
தோம ரங்கதை சூலம்வை வாளிவேல்
நேமி யாதி நெருக்குற வீசினர். 74

வீசு கின்ற வியன்படை மாய்ந்துகத்
தேசு லாவு திறலுடை மொய்ம்பினன்
ஓசை கொண்டதன் சாபம் உமிழ்ந்தென
ஆசு கங்கள் அளப்பில தூண்டினன். 75

தூண்டும் வாளி துணிபடச் செய்தலும்
மாண்டு போயின மற்றவர் வெம்படை
ஈண்டு தானவர் யாரும் மறைந்திட
மீண்டும் வார்கணை வீசினன் வீரனே. 76

கற்றை வார்சடைக் கண்ணுத லோன்சுதன்
கொற்ற வில்லுமிழ் கூர்ங்கணை விட்டன
பற்ற லார்மெய் படுதலும் அன்னவர்க்
கிற்ற தாள்முடி தோள்புயம் யாவுமே. 77

ஆர ழிந்தன ஆழி அழிந்தன
தேர ழிந்தன திண்பரி கைமுகக்
கார ழிந்த கடுந்தொழில் தானவர்
போர ழிந்த புகுந்தன சோரியே. 78

மற்ற வெல்லை வலியநந் தானைகள்
இற்ற வேகொல் இவன்சிலை யாலெனச்
செற்ற நீரொடு செங்கதிர் மாற்றலன்
ஒற்று தேர்வல வற்கிவை ஓதுவான. 79

அடுத்து நம்படை அட்டவன் முன்னுற
விடுத்தி தேரை வலவனை வெய்தென
வடித்த விஞ்சையன் வன்மையின் அன்னதேர்
நடத்தி யார்த்தனன் நாகர் நடுங்கவே. 80

மாண்ட கொள்கை அவுணன் வலவன்முன்
தூண்டு தேர்மிசைத் துன்னென நண்ணியே
பூண்ட தன்சிலை கோட்டிப் பொருஞ்சினம்
மூண்டு மேலவன் முன்னிது கூறுவான். 81

எஞ்ச லின்றிய என்பெருந் தானைகள்
துஞ்சும் வண்ணந் தொலைத்தனை நீயினி
உஞ்சு போகரி துன்றனை அட்டிட
வஞ்சி னங்கொடு வந்தனன் யானென்றான். 82

என்ற லோடும் இருந்திறன் மொய்ம்பினான்
பொன்று வோரையும் போர்த்தொழில் செய்துபின்
வென்று ளோரையும் விண்ணவர் காண்குவர்
நின்று தாழ்க்கலை நேருதி போர்க்கென்றான். 83

விளைத்த சீற்றத்து வெந்திறற் சூர்மகன்
வளைத்த வில்லிடை வார்கணை ஆயிரந்
தளைத்த பூந்தொடை வாகையன் தன்னுரந்
துளைத்தி டும்படி பூட்டுபு தூண்டினான். 84

ஆக மூழ்கி அடற்கணை போழ்ந்துபின்
ஏக வென்றும் இளையவன் பின்னவன்
சோக மோடுதன் தொல்சிலை வாங்கியே
நாகர் போற்றிட நாணொலிக் கொண்டனன். 85

நாணொ லிக்கொடு நஞ்சழல் கான்றெனத்
தூணி யுற்ற சுடுசரம் ஆயிரம்
வேணு வுய்த்து விரைவினில் தூண்டினான்
ஏனு டைக்கொடி யோன்புயத் தெய்தவே. 86

ஆயி ரங்கணை அம்புயம் மூழ்கலும்
நோயு ழந்துள நொந்து நொடிப்பினில்

தீய வன்மகன் செஞ்சரம் நூற்றினால்
தூய வன்வில் துணிபடுத் தானரோ. 87

திண்டி றற்புயன் செஞ்சிலை இற்றிட
அண்டர் அஞ்சினர் அன்னவன் ஓரயில்
கொண்டு ருத்துக் கொடுந்தொழிற் சூர்மகன்
முண்ட நெற்றியின் மொய்ம்புடன் வீசினான். 88

வீசு வெம்படை வெய்யவற் சீறிய
நீசன் மாண்டகு நெற்றியுட் சேறலும்
மாசில் வான்மிசை வந்தெழு செக்கர்போல்
ஆசில் செம்புனல் ஆறெனச் சென்றதே. 89

சென்ற காலையில் தீயவன் ஓரிறை
நின்று தேரின் நிலைவில னாகியே
பின்றை முன்னுணர் வெய்தப் பெருந்தகை
ஒன்றொர் வெஞ்சிலை ஒல்லையில் வாங்கினான். 90

வாங்கி வாயுவின் மாப்படை தூண்டலும்
ஆங்கவ் வெய்யனும் அப்படை யேவியே
தாங்கி வன்மை தணித்தலுந் தாவிலோன்
தீங்க னற்படை உய்த்தனன் சீறியே. 91

மாரி யன்னகை மன்னவர் கோமகன்
ஆர ழற்படை அவ்வழி தூண்டலும்
வீர வாகு விடுத்திடு தீப்படை
போரி யற்றிப் பொருக்கென மீண்டதே. 92

சுடுக னற்படை போந்திடச் சூர்மகன்
கடிது பின்னுங் கதிர்ப்படை தானெடா
அடுதி அன்னவன் ஆவியை நீயெனா
விடுத லோடும் விரைந்தது சென்றதே. 93

விரைந்து சென்றதை வீரமொய்ம் புள்ளவன்
தெரிந்து சேணிடைச் செங்கதி ரோன்படை
துரந்து நீக்கலுஞ் சூர்மகன் பங்கயத்
திருந்து வன்படை ஏவினன் என்பவே. 94

தேன்மு கத்துத் திருமல ரோன்படை
வான்மு கத்து வருதலும் ஆங்கவன்
ஊன்மு கப்படை ஒய்யெனத் தூண்டினான்
நான்மு கத்தன் அடற்கண நாயகன். 95

தூண்டு வேதன் படைக்கலஞ் சூர்மகன்
ஆண்டு தொட்ட படையை அகற்றியே
மீண்டு வந்திட வெய்யவன் வீரன்மேல்
நீண்ட மாயன் நெடும்படை வீசினான். 96

வீசும் அப்படை தன்னை விலக்கினான்
கேச வன்படை யால்இளர் மொய்ம்புடை
மாசில் கேள்வியன் மற்றது நோக்கியே
ஈசன் மாமகன் உள்ளம் நினைகுவான். 97

தொட்ட தொட்ட படைகள் தொலைவுற
விட்ட னன்படை மேலினி யாவையும்
அட்டு நல்கும் அரன்படை தூண்டுறின்
ஒட்ட லன்கரத் துணடது கண்டதே 98

ஆத லாலியான் அப்படை தூண்டிடல்
ஊதி யத்தை யுடைத்தன்று மாயையால்
ஏதி லானை இனியடல் செய்வதே
நீதி யென்று நினைந்தனன் நேரலன். 99

விஞ்சை மாய வியன்முது மந்திரம்
நெஞ்ச மீது நெறிப்பட எண்ணியே
செஞ்சு டர்க்கதி ரைச்சிறை செய்திடு
வஞ்ச மைந்தன் மறைந்தனன் தேரொடும். 100

பாங்கு முன்னரும் பின்னரும் பாய்கதிர்
தூங்கு தேரொடு துன்னலன் ஏகுறு
வீங்கும் ஆற்றல் விறலுடை மொய்ம்பன்மேல்
வாங்கு விற்கணை மாரி வழங்கினான். 101

சூறை யென்னத் திரிபவன் தூண்டிய
மாறில் வாளிப டப்பட வள்ளல்மெய்
ஊற தாகி உலப்பறு செம்புனல்
ஆற தென்ன வழிக்கொண்ட தாலரோ. 102

அண்டர் நோக்கி அழிந்தனர் பாரிடர்
தண்ட மோடு தளர்ந்தனர் யார்பினோ
விண்டு விண்டு வெருவினர் அச்செயல்
கண்டு வீரன் கனலெழச் சீறினான். 103

வேறு

ஒன்றொரு மாயை தன்னால் உய்ந்துமுன் வென்று போனான்
இன்றுமத் துன்னி னானே இனியது முடிக்க அற்றோ
நன்றிது நன்றி தம்மா நானிவன் தன்னை இன்னே
கொன்றிடு கிற்பேன் என்னாக் குறித்தனன் குமரன் பின்னோன் 104

ஈதுதன் புந்தி தேற்றி ஈங்கிவன் சூழ்ச்சி மாய்ந்து
போதரு கின்ற வாறு புரிகுவன் விரைவின் என்னாச்
சேதனங் கொண்ட துப்பின் தெய்வதப் படையைப் போற்றி
மேதகு வழிபா டாற்றி யவுணனைக் குறித்து விட்டான். 105

பொருவருந் திறலோன் விட்ட போதகப் படையே பானுள்
இருளினை இரியல் செய்யும் இரவிபோற் சேற லோடும்

விரைவொடு விஞ்சை மாயம் விளிந்தது வேந்தன் மைந்தன்
ஒருபெருந் தேருந் தானு மாகியே உம்பர் நின்றான். 106

தோன்றியே விண்ணின் நின்ற சூர்மகன் தொலைவில் ஆற்றல்
சான்றதன் மாயம் போன தன்மையுங் கடந்தோள் வீரன்
ஆன்றநல் வலியும் நோக்கி அயர்ந்தனன் அயர்ந்து முன்னம்
மான்றிடும் அமரர் யாரும் மனமகிழ் சிறந்து நின்றார். 107

அவ்வழி வீர மொய்ம்பன் அந்தர வழிக்கண் நின்ற
மைவழி சிந்தை மைந்தன் மாண்பினை நோக்கி வஞ்ச
வெவ்வழி இனிநீ போதி யானிவண் அடுவன் என்னுக்
கைவழி வரிவில் வாங்கித் தேரொடுங் ககனஞ் சென்றான். 108

விண்ணிடைப் புகுந்த வீரன் வெலற்கருஞ் சூரன் மைந்தன்
கண்ணுற முன்பு நேர்ந்து கணைபல கோடி தூர்த்தான்
நண்ணலன் அவனுஞ் சீறி நவின்றதோர் சாபம் வாங்கித்
துண்ணென விசிக மாரி சொரிந்தனன் சுரர்கள் அஞ்ச. 109

நீரொடு கனலும் மாறாய் நெடுஞ்சினந் திருகி நின்று
போரினை இழைப்ப தென்ன இருவரும் பொருது நின்றார்
ஓரிறை அளவை தன்னில் ஒராயிர நூறு கோடி
சாரிகை திரிந்த அம்மா அனையவர் தடம்பொற் றேர்கள். 110

ஏற்றிகல் புரியும் வீரர் எதிரெதிர் துரக்கும் வாளி
நாற்றிசை கொண்ட அண்டப் பித்திகை காறும் நண்ணி
மேற்றிகழ் பரிதிப் புத்தேள் வியன்கதிர் வரவு தன்னை
மாற்றியெவ் வுலகு ளோர்க்கு மலிதுயர் விளைத்த அன்றே. 111

செற்றமொ டிவர்கள் வீசுந் திருநெடுங் கணைகள் யாண்டும்
முற்றிடு கின்ற காலந் துகுவன கவன மான்தேர்
அற்றன புரவி மாலை அவிந்தன களிற்றின் ஈட்டம்
இற்றன அவுணர் சென்னி இறுவன பூதர் யாக்கை 112

கிட்டுவ சேணிற் செல்வ கிளருவ கிடைத்துப் பின்னும்
முட்டுவ ஒன்றை யொன்றை இடம்வலம் முறையிற் சூழ்ந்து
வட்டணை புரிவ வானோர் மதிக்கவும் அரிய வல்லே
எட்டுள திசையும் விண்ணுந் திரிவன இருவர் தேரும். 113

இகழுவர் முனிவர் வெஞ்சூள் இயம்புவர் வன்மை நோக்கிப்
புகழுவர் உரப்பி வீரம் புகன்றெடுத் தரைப்பர் பூசல்
மகிழுவர் நகைப்பர் வெற்றி வால்வளை முழக்கஞ் செய்து
திகழுவர் கணையின் மாரி சிந்துவர் தெழித்துச் செல்வர். 114

புரந்தனை அட்ட செல்வன் புதல்வனும் அவுணன் சேயும்
விரைந்தெதிர் மலைந்த காலை முறைமுறை வெகுண்டு விட்ட
வரந்தெறு பகழி மாரி அகிலமும் விரவிச் செல்லக்
கரந்தனன் இரவி திங்கள் கலைகளுங் குறைந்த தன்றே. 115

## வேறு

காலொப்பன கூற்றொப்பன கனலொப்பன கடுவின்
பாலொப்பன உருமொப்பன பணியார்புரம் பொடித்த
கோலொப்பன கதிரொப்பன குன்றந்தனைக் கொன்ற
வேலொப்பன இருவீரரும் விடலுற்றிடு விசிகம். 116

வரைபுக்கன புயல்புக்கன வான்புக்கன மறிதெண்
டிரைபுக்கன கடல்புக்கன திசைபுக்கன திசைசூழ்
தரைபுக்கன அண்டந்துளை தனிற்புக்கன பிலத்தின்
நிரைபுக்கன இளையோனுடன் அவுணன்விடு நெடுங்கோல் 117

திரிகின்றன இருவோர்விடு தீவாளியும் அவைபட்
டெரிகின்றன புயலின்குலம் இருநாற்றிசைக் கரியுங்
கரிகின்றன புவிவிண்டன கடல்வற்றின உடுமீன்
பொரிகின்றன உலகெங்கணும் புகைவிம்மிய தன்றே. 118

பொடியோங்கிய திறன்மொய்ம்புடைப் புலவன்விடு சரத்தை
வடியோங்கிய கணைமாரியின் அரக்கன்பகை மாற்றும்
கொடியோன்மகன் விடுவாளியைக் குதைவெங்கணை மழையால்
நெடியோன்தனித் துணையானவன் அறுத்தேயுடன் நீக்கும். 119

போரிவ்வகை இருவீரரும் பொரவுற்றிடு பொழுதில்
பாரின்தலை நின்றோர்களும் இமையோர்களும் பார்த்தார்
ஆரிங்குளர் இவரேயென அமர்செய்தவர் அடுபோர்
வீரர்தனில் எவரோஇவர்க் கிணையென்று வியந்தார். 120

அவ்வேலையின் நூறாயிரம் அடுவெங்கணை அடலால்
மைவேலையில் வருபானுவைத் தளைபூட்டிய மைந்தன்
செவ்வேலவன் திருத்தூதுவன் சேனைப்பொடி படுத்தி
எவ்வேலையும் வெருக்கொண்டிட இடியேறென ஆர்த்தான். 121

ஆர்க்கின்றுழி விறல்மொய்ம்புடை அறிவன்சினந் திருகிச்
சீர்க்கின்றவிண் மிசைநின்றுதன் சிலைகாலுற வாங்கிக்
கூர்த்தங்கணை ஓராயிரங் கொளுவித்துரந் திட்டுக்
கார்க்கின்றமெய் அவுணர்க்கிறை சடுந்தேர்துகள் கண்டான். 122

வையந்துக ளாய்இற்றிட வானத்திடை நின்ற
வெய்யன்பெருஞ் சினஞ்செய்துவில் வீரன்தன துரத்தின்
ஐயஞ்சுநஞ் சயில்வாளிபுக் கழுந்தும்படி தூண்டிச்
சையந்தனைக் கடந்தேவளர் தடந்தோள்புடைத் தார்த்தான். 123

உரத்திற்புகு நெடுவாளியின் உளநொந்திடும் உரவோன்
கரத்திற்சிலை தனிவேறிரு கணைபூட்டினன் செலுத்தி
வரத்திற்றனக் கிணையில்லதோர் மன்னன்மகன் தனது
சிரத்திற்பொலி மகுடந்தனைச் சிந்தித்துகள் செய்தான். 124

மாண்கொண்டிடு முடிசிந்திட வெறியானெனத் திகழும்
ஏண்கொண்டிடு சூரன்மகன் ஏழேழ்கணை தூண்டித்

தூண்கொண்டிடு திறல்மொய்ம்புடைத் தொல்லோன்உரம் பிணித்த
நாண்கொண்டிடு கவசந்தனை நடுவேதுணித் திட்டான். 125

ஆகம்படு நெடுஞ்சாலிகை அறிவெய்தலும் அழல்கால்
நாகம்படு சடையோன்சுதன் நன்றீதென நகையாப்
பாகம்படு பிறைபோலெழு பகுவாய்க்கணை செலுத்தி
மேகம்படு மணிமேனியன் வில்லைத்துணி படுத்தான். 126

வில்லொன்றிரு துணியாதலும் வெங்கூற்றினும் வெருளா
அல்லொன்றிய மனத்தீயவன் அயன்முன்கொடுத் துள்ள
மல்லொன்றிய தனிவேலினை எடுத்தீங்கிவன் தன்னைக்
கொல்லென்றுரைத் துரவோன்மிசை புறுவித்துச்செல விடுத்தான். 127

வேறு

விடுத்த காலையின் இருதிறந் தெரிந்திடும் விறலோன்
அடற்பெருங்கணை ஆயிர கோடிகள் அதனைத்
தடுத்திடும்படி செலுத்தினன் அவையெலாந் தடிந்து
வடித்த வேற்படை வான்வழிக் கொண்டுவந் ததுவே. 128

வந்த காலையில் அதன்வலி நோக்கியே வள்ளல்
இந்து சேகரன் உதவிய நாந்தகம் எடுத்துக்
கந்த வேளடி வழுத்தியே கருதலன் விடுத்த
முந்த வெம்படை இருதுணி பட்டிடக் குறைத்தான். 129

குறைத்த காலையில் அமரர்கள் ஆடினர் கொடியோன்
திறத்த ராகிய அவுணர்கள் ஏங்கியே திகைத்தார்
அறத்தை யாற்றிடும் இளையவன் அங்கது நோக்கி
மறித்த ருஞ்சுடர் வாளினை உறையகத் திட்டான். 130

அள்ளி லைத்தனி வேற்படை இறுதலும் அதனைக்
கள்ள விஞ்சைகள் பயின்றிடு சூர்மகன் காணாத்
தெள்ளி நம்மவோ என்படை வலியெனச் செப்பிப்
பொள்ளெ னக்கர வாளமொன் றெடுத்தனன் பொருவான். 131

கருமு கிற்புரை மேனியன் கரத்தில்வாள் பற்றி
விரவு மின்னுவின் கொடியென விதிர்த்துமுன் வீசி
உருமி டிக்குலத் தாவலங் கொட்டியார்த் துருத்துச்
செருமு யற்சியாற் சீரிளங் கோவின்முன் சென்றான். 132

சென்ற காலையில் இளையவன் தன்பெருஞ் சிலைகால்
ஒன்ற வாங்கியே பகழிபல் லாயிரம் உய்த்து
வென்றி வாட்படை யானுரங் கிழித்திட விடர்செய்
குன்றில் வீழ்தரும் அருவிபோல் வீழ்ந்தது குருதி. 133

பரிதி மாற்றலன் மிசைவரு பகழியும் பாரான்
குருதி வீழ்வதும் உரம்பகிர் வுற்றதுங் குறியான்
ஒருதன் மானமுந் தானுமா யோடினன் குறுகிச்
சுருதி யன்னவன் சிலையினை வாளினால் துணித்தான். 134

வில்லி றுத்திடு விறலினேன் மிசைபடக் கிளர்ந்து
செல்லெ னத்தெழித் தொருதன்வாள் வீசினன் திரிய
அல்ல லுற்றிடும் இமையவர் அங்கது நோக்கி
இல்லை மற்றிவன் இறந்தபின் அமரென்ப தென்றார். 135

அங்க வெல்லையில் வீரவா குப்பெயர் அறிஞன்
திங்கள் சூடிய உலகடுந் தாதையிற் சீறித்
துங்க மிக்கதன் வாளுரீஇக் கறங்கெனச் சுற்றி
எங்கண் ஏகுதி என்றுபோய் அவுணனை மதிர்த்தான். 136

ஏற்றெ திர்ந்திடும் எல்லையின் இரவியம் பகைஞன்
காற்றெ னச்சென்று நேர்ந்தனன் இருவருங் கலந்து
சீற்ற நீர்மையால் வாளமர் உழந்தனர் செங்கட்
கூற்றும் அங்கியுஞ் சமர்புரி கின்றகோட் பென்ன. 137

மாறு மாறுசென் றடிமுதல் உறுப்பினை வாளால்
வேறு செய்திட எறிகுவர் அன்னது விலக்கி
ஊறு செய்திற நாடுவர் இடைதெரிந் துழல்வர்
சூறை யாமெனச் சுற்றுவர் வட்டணை சூழ்வார் 138

இன்ன தன்மையில் இருவரும் வாளமர் இயற்றி
மன்னு காலையில் சூர்மகன் விஞ்சையின் வலியால்
தன்னை நேரிலா இளையவன் தடக்கைவாள் அகற்றி
அன்ன வன்திருத் தோள்மிசை எறிந்தனன் அன்றே. 139

மாற்ற லன்கர வாளினால் எறிதலும் வள்ளல்
ஆற்றல் மொய்ம்பிடைக் குருதியா றிறிதர அதுகண்
டேற்றம் எய்தினன் சூர்மகன் இவன்றனக் கிளையோன்
தோற்றி டுங்கொலென் றிரங்கினர் வானவர் துளங்கி. 140

அன்ன காலையில் இளையவன் அறுமுகத் தமலன்
பொன்னின் சேவடி புந்தியில் உன்னியே புகழ்ந்து
மின்னு வானதன் வாட்படை வீசியே விரைந்து
துன்ன லன்வலத் தோளினை வலியொடு துணித்தான். 141

துணித்த காலையில் வலதுகை தன்னொடு தொடர்ந்த
பணித்த னிச்சுடர் வாளினை இடக்கையால் பறித்து
மணித்த சும்புகொள் மொய்ம்புடை அவுணர்கோன் மற்றும்
தணிப்ப ருஞ்சினந் தன்னொடு முயன்றனன் சமரே. 142

தீய வன்றனி முயற்சியை நோக்கியே திறலோன்
தூய வாள்கொடே அன்னவன் இடக்கையைத் துணிப்ப
மாயை தொல்படை விடுத்திடு வேனென மதித்தான்
ஆய காலையில் அறிஞனும் அவன்தலை அறுத்தான். 143

வாளில் அங்கவன் அடுதலுஞ் சென்னியும் வரைநேர்
தோளும் யாக்கையும் வீழ்ந்தன சூரியன் பகைஞன்

நாளு லந்தனன் அவனுயிர் வெளவியே நடுவன்
ஆளி மொய்ம்பனை வழுத்தியே தென்புலத் தடைந்தான். 144

சூரன் மாமகன் முடிந்தது முனிவருஞ் சுரரும்
ஆரும் நோக்கியே ஆடினர் பாடினர் ஆர்த்தார்
வீர வீரன்நீ யாமென இளவலை வியந்து
மாரி யாமென அவன்மிசை பொழிந்தனர் மலர்கள். 145

நுவல ருந்திறல் சூர்மகன் பட்டது நோக்கி
அவலம் எய்தியே அழிந்திடு பூதர்கள் ஆர்த்துத்
தவல ருந்திறல் வீரனை வழுத்தினர் தனது
கவலை நீங்கியே களித்தனன் செங்கதிர்க் கடவுள். 146

அன்ன காலையில் வீரவா குப்பெயர் அறிஞன்
தன்னு ளஞ்சிறந் தகலிரு விசும்பினைத் தணவா
இந்நி லத்திடை வந்துதன் துணைவர்தம் மினத்தைத்
துன்னி யாங்கவர் புகழ்ந்திட இனையன சொல்வான். 147

ஆன தொல்பெரு மாயையால் நம்மைமுன் அலைத்த
பானு கோபனை அட்டனம் பயர்ந்தகு ளுறவு
தானு முற்றிய தால்இனி எம்பிரான் தன்முன்
சேனை தன்னொடு மேவுதுஞ் செல்லுதி யென்றான். 148

மிக்க வீரனித் தன்மையை உரைத்தலும் வினவி
முக்கண் நாயகன் குமரவேள் இணையடி முன்னம்
புக்கு நென்னலுந் தொழுதில நன்றுநீ புகன்றாய்
தக்க தேயிது என்றனர் துணைவராந் தலைவர். 149

ஆங்கவ் வெல்லையின் நம்பிதன் இளைஞரும் அடுபோர்
தாங்கு பூதருந் தானையந் தலைவரும் தழுவிப்
பாங்கர் வந்திடப் பொருகளம் ஒருவியே படர்ந்து
பூங்கி டங்குசூழ் பாசறை இருக்கையுட் புகுந்தான். 150

சோதி நீடிய பாசறை புகுந்திடு தூயோன்
பூதர் தம்மொடுந் துணைவர்கள் தம்மொடும் போந்து
காத லாகியே அறுமுகத் தையனைக் கண்டு
பாத பங்கயந் தன்னிடைப் பன்முறை பணிந்தான். 151

பரிந்து பன்முறை வணங்கியே எழுதலும் பகவன்
தெரிந்து நோக்கிநீ சூர்மக னோடுபோர் செய்து
வருந்தி ஆங்கவற் செற்றனை ஆதலின் மகிழ்ந்தாம்
விரைந்து கேண்மதி நல்குதும் வேண்டுவ தென்றான். 152

என்று மூவிரு முகமுடைப் பண்ணவன் இயம்ப
நின்று போற்றிடும் இளையவன் எம்பிரான் நின்னை
அன்றி யான்செய்த செயலிலை ஆயினும் அடியேற்
கொன்று மற்றிவண் அருளிய வேண்டுமென் றுரைப்பான். 153

கோல நீடிய நிதிபதி வாழ்க்கையுங் குறியேன்
மேலை இந்திரன் அரசினைக் கனவினும் வெஃகேன்
மால யன்பெறு பதத்தையும் பொருளென மதியேன்
சால நின்பதத் தன்மையே வேண்டுவன் தமியேன். 154

அந்த நல்வரம் முத்தியின் அரியதொன் றதனைச்
சிந்தை செய்திடு தவத்தரும் பெறுகிலர் சிறியேன்
உய்ந்தி டும்வகை அருள்செய வேண்டுமென றுரைப்ப
எந்தை கந்தவேள் உனக்கது புரிந்தனம் என்றான். 155

உடைய தொல்விறல் வாகுவுக் கிவ்வரம் உதவிப்
புடையி னில்தொழு துணைவர்க்கு நல்லருள் புரியா
அடைய மற்றவர் இருக்கைகள் வைகுவான் அருளி
விடைபு ரிந்தனன் யாவர்க்கு மேலதாம் விமலன். 156

செங்க திர்ப்பகை அட்டவன் முதலிய திறலோர்
புங்க வன்றனைத் தொழுதுதம் இருக்கையிற் போனார்
இங்கு மற்றிது நின்றிட அவுணர்தம் இறைவற்
கங்கண் உற்றிடு செய்கையை மேலினி அறைவாம். 157

வேறு

ஈதிவர் புரிந்ததேல் இறைவன் தன்னையுங்
காதுவர் என்பது கருத்துட் கொண்டுறா
வாதுவர் கவனமா வழிக்கொண் டாலெனத்
தூதுவர் ஓடினார் துளங்கு நெஞ்சினார். 158

மதிதொடு கடிமதில் மகேந்தி ரப்புரந்
ததிர்தரு முரசொலி யவிந்து துன்பினான்
முதிர்வுறும் அழுகுரல் முழங்கும் வீதிபோய்க்
கதுமென அரசவைக் களத்துள் ஏகினார். 159

துன்னிய பெரும்புனல் தூண்டு கண்ணினர்
உன்னருந் துயரினர் உயிர்க்கு நாசியர்
மன்னவன் இணையடி வணங்கி உன்மகன்
முன்னுறு தூதனால் முடிவுற் றானென்றார். 160

தாழ்ந்தவர் மொழிந்திடு தன்மை கேட்டலுஞ்
சூழ்ந்திடு திருவுடைச் சூரன் என்பவன்
ஆழ்ந்திடு துயர்க்கடல் அழுந்தி ஓவெனா
வீழ்ந்தனன் புரண்டனன் உயிர்ப்பு வீங்கினான். 161

நக்குறு சுடரென நடுக்கம் உள்ளுற
மிக்கெழு குருதிநீர் விழிகள் கான்றிடத்
தொக்குடல் வியர்ப்பொடு துளக்கங் கொண்டிட
அக்கணம் மயங்கினன் அறிவு சோர்ந்துளான். 162

தளர்ந்துடல் வெதும்புற தன்கண் சோர்வுற
உளர்ந்திரி வுறஉயிர் ஊசல் ஆடிட

விளிந்தவா றாமெனா வீழ்ந்து மான்றவன்
தெளிந்தனன் இரங்கினன் இனைய செப்பினான். 163

வேறு

மைந்தவோ என்றன் மதகளிறே வல்வினையேன்
சிந்தையோ சிந்தை தெவிட்டாத தெள்ளமுதோ
தந்தையோ தந்தைக்குத் தந்தையிலான் கொன்றனனே
எந்தையோ நின்னை இதற்கோ வளர்த்தனனே. 164

வன்னச் சிறுவர்பலர் மாய்ந்தார் அவர்மாய்ந்து
முன்னைத் துணையென் றுளங்கொண் டிருந்தனனால்
என்னைத் தனியேவைத் தெந்தையுமே குற்றனையேல்
பின்னைத் தமியேன் பிழைக்கும் படியுண்டோ. 165

ஒன்னார் சிறைதனைவிடின் உய்வுண்டாம் என்றுமுனஞ்
சொன்னாய் அதுவும்இகழ்ந் துன்னைத் தோற்றனனால்
என்னும் இனியதனை எண்ணுவதி யாவருக்குந்
தன்னால் வராத வினையுளதோ தக்கோனே. 166

நன்றீ தலசமர்க்கு நண்ணுவது நண்ணலர்போல்
என்றீர மாகஇசைத் தாயான் ஏகாமல்
சென்றீ எனவே செலுத்தியுனைப் போக்கினனால்
ஒன்றீங் குளதோ பிழையுன் மிசைஐயா. 167

கைப்போது கொண்டு கடவுளர்க ளெல்லோரும்
முப்போதும் வந்து முறையால் வழிபடுவார்
அப்போதல் இல்லா உனதுமே லுள்ளபகை
இப்போ துடன்நீங்கி யேமுற் றிருந்தாரோ. 168

உன்னுணைக் கஞ்சி உறங்கா துழன்றிடுமால்
இந்நாள் தனில்நீ இறந்தா யெனமகிழ்ந்து
பன்னகப் பாயல் படுத்திருவர் கால்வருடத்
துன்னுள் எனவே கவலையின்றித் துஞ்சானே. 169

நந்தா னவர்குலத்து நாயகமே நண்ணினர்க்கோர்
சிந்தா மணியே திருவேயென் தெள்ளமுதே
எந்தாய் தனியேபோய் எங்கிருந்தாய் அங்கேயான்
வந்தாலும் உன்றன் மதுரமொழி கேட்பேனோ. 170

சோராத சூழ்ச்சித் துணைவர்சிறார் எல்லாருஞ்
சேரார் பொருதலைப்பச் சென்றொழிந்து போயினரால்
ஆராய்ந் தெனதுதுயர் ஆற்றுவதற் காருமிலை
வாராய் புதல்வா கடிதோடி வாராயே. 171

நீடித் திகழ்கதிரால் தீண்டி னதுசிறை
வீடிச் சதுர்முகத்தோன் வேண்டிடநீ விட்டபின்னர்
வாடிந் தளர்ந்து வலைபடைத்த வெய்யவனும்
ஓடிக் ககனத் துளமகிழ்ந்து செல்வாரோ. 172

பற்றார் அடித்தொண்டு பேணிப் பரந்துழலும்
ஒற்றா னவனே உனைத்தான் அடவல்லான்
அற்றார் தமதுடலுக் காவியாய்ச் சென்றிடவே
கற்றா யேல்என்னை மறந்திடவுங் கற்றாயோ 173

மாகொற்ற மைந்தன் மடிந்தான் எனக்கேட்டும்
ஏகிற் றிலையால் இருக்கின்ற தின்னும்உயிர்
வேகுற்ற துள்ளம் மிகுதுயரம் வந்தவழிச
ஏகுற்ற தோர்வரமுஞ் சங்கரன்பாற் பெற்றிலனே 174

வெற்றி யுளமதலை வீந்தால் விளியாமல்
மற்றும் எனதுயிரும் வைகும் வலிதாகச்
செற்றி டலும்ஆகா தென்செய்கேன் அறியாமல்
பெற்ற வரமும் பிழையாய் முடிந்ததுவே. 175

ஆவியே கண்ணே அரசே உனைச்சமருக்
கேவியே இவ்வா றிரங்குதற்கோ இங்கிருந்தேன்
கூவியே கொண்டுசெலுங் கூற்றுவன்ஒற் றோ அறியேன்
பாவியேன் இந்தப் பதிபுகுந்த தூதுவனே 176

கூற்றேன் நகரில் குறுகினையோ அன்னதன்றேல்
வேற்றோர் இடந்தன்னில் மேவினையோ யானொன் றுந்
தேற்றேன் தனியே தியங்குகின்றேன் இத்துயரம்
ஆற்றேன் அரசேயென் னுருயிரே வாராயோ. 177

என்று இரங்கி இறைவன் வருந்துதலும்
அன்னான் உழையில் அவுணர் சிலரோடித்
துன்னார் களத்தில் துணிவுற்ற சீர்மதலை
பொன்னார் உடலங் கொடுபுலம்பிப் போந்தனரால். 178

வேறு

சேந்த குஞ்சிச் சிலதர்சென் ஞாயிறு
பாய்ந்த அண்ணல் படிவ மிரைக்கொளா
வேந்தன் முன்னுற உய்த்து விரைந்தவன்
பூந்தண் சேவடி பூண்டு புலம்பினார். 179

அண்டர் தம்மை அருஞ்சிறை வீட்டியே
தண்ட கஞ்செய் தனிக்குடை மன்னவன்
துண்ட மாகிய தோன்றல்தன் யாக்கையைக்
கண்ட ரற்றிக் கலுழ்ந்து கலங்கினான். 180

அற்ற மைந்தன் சிரத்தினை யாங்கையால்
பற்று நல்லெழில் பார்த்திடுங் கண்களில்
ஒற்றும் முத்தம் உதவும் உரனிலாப்
புற்ற ராவில் உயிர்க்கும் புரளுமால். 181

துஞ்ச லாகித் துணிவுற்றுந் தெவ்வர்மேல்
நெஞ்சு கொண்ட நெடுஞ்சினந் தீர்கிலை

விஞ்சு மானமும் வீரமும் வன்மையும்
எஞ்சு மேகொல் இனிஉன்னொ டென்னுமால். 182

கையி லொன்றைக் கதுமெனப் பற்றிடாச்
செய்ய கட்படு செம்புனல் ஆட்டியே
வெய்ய வற்கொடு விண்ணினுந் தந்தை
ஐய ஈதுகொ லோவென் றாற்றுமே. 183

வாளரம்படு வாளிகள் மூழ்கலின்
நாளரங்க ளெனப்புழை தாங்கிய
தோளை மார்பினை நோக்கும் தொலைவிலா
ஆளை நீயல தாருள ரோயெனும் 184

பாறு லாய பறந்தலை தன்னிடை
வேறு வேறது வாகநின் மெய்யினைக்
கூறு செய்தவன் ஆவி குடித்தலால்
ஆறு மோவென் னகத்துயர் என்றிடும். 185

மூண்ட போர்த்தொழில் முற்றிய என்மகன்
ஈண்டு வந்தெதிர் தூதுவன் எற்றிட
மாண்டு ளானென் றுரைத்திடின் மற்றியான்
ஆண்ட போரா ற்றல்நன் றேயெனும். 186

சிரத்தை மார்பினைச் செங்கையைத் தொன்மைபோல்
பொருத்தி நோக்கிப் புரளுமென் புந்தியை
வருத்தும் ஆகுலம் மற்றது கண்டுநீ
இருந்தி யோவுயி ரேயென்னும் என்றிடும். 187

மருளும் அங்கை மறிக்கும் மதலையை
அருளின் நோக்கி அழும்விழுஞ் சோர்வுறும்
புரளும் வாயிற் புடைக்கும் புவியிடை
உருளும் நீட வுயிர்க்கும் வியர்க்குமே. 188

மன்னர் மன்னவன் மற்றிது பான்மையால்
இன்னல் எய்தி இரங்கலும் அச்செயல்
கன்னி மாநகர்க் காப்பினுள் வைகிய
அன்னை கேட்டனள் ஆகுலம் எய்தினாள். 189

நிலத்தில் வீழ்ந்து சரிந்து நெடுமயிர்
குலைத்த கையள் குருதிபெய் கண்ணினள்
அலைத்த வுந்தியள் ஆற்றருந் துன்பினள்
வலைத்த லைப்படு மஞ்ஞையின் ஏங்கினாள். 190

அல்லல் கூர்ந்த அவுணன்றன் காதலி
தொல்லை வைகிய சூழலை நீங்கியே
இல்லை யாகிய என்மகற் காண்பனென்
றெல்லை ஆவலித் தோடினள் ஏகினாள். 191

பாவ லிக்கு மடங்கலொப் பான்தனிக்
காவ லிக்குத் துயர்வந்த கன்னிமீர்
நாவ லிக்கல நண்ணுதிர் என்றுகூய்
ஆவ லித்தனர் ஆயிழை மாரெலாம். 192

வாங்கு பூநுதல் மன்னவன் தேவிதன்
பாங்கர் மங்கையர் பற்பல ருங்குறீஇக்
கோங்க மன்ன முலைமுகங் கொட்டியே
ஏங்கி யேதுயர் எய்தி இரங்கினார் 193

இந்தி ரைக்கு நிகர்வரும் ஏந்திழை
அந்த மில்லதோ ராயிழை மாரொடு
முந்தி யேகி முரிந்து துணிந்திடு
மைந்தன் மீமிசை வீழ்ந்து மயங்கினாள். 194

மயங்கி னாள்பின் மனந்தெளி வெய்தினாள்
உயங்கி னாள்மிக ஓவென் றரற்றினாள்
தியங்கி னாள் உரும் ஏறு திளைத்திடு
புயங்க மென்னப் புரண்டு புலம்பினாள். 195

வேறு

வெய்யோன் என்றாழ் தீண்டுத லோடும் விண்ணிற்போய்க்
கையோ டன்னாற் பற்றினை வந்தென் கண்முன்னம்
மொய்யோ டன்று வெஞ்சிறை செய்த முருகாவோ
ஐயோ மாற்றுக் கின்றிறை யாவ தறியேனே. 196

பண்டே வானஞ் சென்றுயல் மூட்டிப் பகைமுற்றுங்
கொண்டே சென்றாய் அப்பகல் உன்றன் கோலத்தைக்
கண்டேன் இன்றோ இக்கிடை தானுங் காண்பேனோ
விண்டேன் அல்லேன் இவ்வுயிர் தன்னை வினையேனே. 197

செந்தேன் மல்கும் பூமகள் செங்கைக் கிளியொன்று
முந்தே நினை வேண்டிட மொய்ம்பால் அதுவாங்கித்
தந்தாய் தொந்தேற் கின்றொரு மாற்றந் தருகில்லாய்
அந்தோ அந்தோ செய்வகை ஒன்றும் அறியேனே. 198

பாபத் தாலோ விண்ணவ ரானோர் பலர்கூறுஞ்
சாபத் தாலோ யாரினும் மேலாந் தனிமூவர்
கோபத் தாலோ எவ்வகை யாலோ குறியேன்யான்
சோபத் தீயால் வாடினன் நின்னைத் தோற்றேனே. 199

பொன்போல் மேனிக் கந்தனை இவ்வூர் புகுவித்துக்
கொன்போர் மூட்டி மைந்தரை எல்லாங் கொல்வித்துத்
துன்போ டிந்நாள் நீயும் இறப்பச் சூழ்ந்தாரே
என்போ லாக வானவர் மாதர் எல்லோரும். 200

வான்றோ யுற்ற வச்சிர மொய்ம்பன் வடவைத்தீக்
கான்றொ லிக்கும் வன்னி முகத்துக் கழல்வீரன்

மூன்று நூற்றுப் பத்தினர் யார்க்கும் முதல்வந்த
தோன்று லென்றே நின்னை இறைஞ்சிச் சூழ்ந்தாரோ. 201

துன்றோர் பெற்ற மெய்யொடு புந்தி துணிவாகச்
சென்றே வானிற் புக்கனை நின்பாற் செலும்வண்ணம்
ஒன்றே உள்ளந் தான்துணி யாதால் உலைவெய்தும்
நன்றே நன்றே சிந்தையும் யானும் நண்பம்மா. 202

கருந்தேன் மொய்த்த வண்டென மின்னார் கட்கெல்லாம்
விருந்தே யாரும் நின்னடை காணும் விதியற்றேன்
மருந்தே அன்னாய் நின்னை இழந்தேன் மற்றிங்ஙன்
இருந்தேன் அல்லேன் துஞ்சினன் அன்றோ இனியானே. 203

நையா நிற்குந் தேவர் தமக்கு நனிதுன்பஞ்
செய்யா நிற்றல் நன்றல என்றேன் அதுதேரா
தையா நின்னைத் தோற்றனன் மன்னன் அவனுந்தான்
உய்வான் கொல்லோ தன்னுயிர் தானும் ஒழியாதே. 204

வேறு

என்றிவை பன்னித் தேவி இரங்கினள் இரங்க லோடு
நின்றிடு துணைவி மாரும் நீடுநொந் தினைநர் யாரும்
கன்றேழு புனிற்று என்னக் கதறினர் காமர் மூதூர்
வென்றியை நீங்கி அந்நாள் விழுமநோய் மிக்க தன்றே 205

அன்னது காலை தன்னில் அவுணர்கோன் இரக்கம் நீங்கிப்
பன்னருஞ் சிறப்பின் மிக்க பதுமையே முதலோர் தம்மைத்
தொன்னிலை இருக்கை உய்த்துத் துண்ணெனச் சீற்றங் கொண்டு
தன்னுழைத் தொழுது நின்ற தானவர்க் கிதனைச் சொல்வான். 206

மாற்றலர் தொகையை யெல்லாம் வல்லையில் இன்றே செற்றுச்
சீற்றமாய்க் குருதி வீட்டித் திமகம் ஒன்றை ஆற்றி
ஈற்றுறு மைந்தன் தன்னை எழுப்புவன் இந்த மெய்யை
வீற்றுறு சாரின் இட்டு விடாதுபோற் றிடுதி ரென்றான். 207

அன்னது பலருங் கேளா அரகிதென் றெடுத்து மைந்தன்
பொன்னுடல் ஒருசார் உய்த்துப் போற்றினர் போற்ற லோடும்
மன்னவன் வெகுண்டு நந்தம் மாற்றலர் தொகையை யெல்லாம்
என்னினி யோனுக் கூறு அளிப்பனென் றெண்ணங்கொண்டான் 208

தும்பையஞ் சுழியல் வேய்ந்த சூர்முதல் இவ்வா றுன்னிச்
செம்புன லொழுகு பைங்கண் தூதரில் சிலரை நோக்கி
அம்புதி வடாது பாங்கர் ஆசுரத் நரகு செய்யும்
எம்பியை வல்லை ஓடிக் கொணருதிர் ஈண்டை என்றான். 209

ஆகத் திருவிருத்தம் – 1,922



# 12. சிங்கமுகாசுரன் வதைப் படலம்*

—o—

என்னலும் ஒற்றர் கேளா இறைவனை இறைஞ்சி ஏகி
உன்னுறு நினைப்பின் முந்தி உத்தரத் தலக்கர் நண்ணி
மன்னகர் புகுந்து வெள்ளல் கடந்துமந் திரத்துட் புக்குச்
சென்னியா யிரங்கொண் டுள்ள சிங்கமா முகவற் கண்டார். 1

களித்தனர் மகிழ்ந்து தூதர் காண்முறை வணங்கி நிற்ப
அளித்திடும் அரசின் வைகும் அரிமுகன் வந்த தென்னை
கிளைத்திடு வீர்கள் என்னக் கேட்டலா அவுணர் மேலோன்
விளித்தனன் ஐய நின்னை விரைந்தனை வருக வென்றார். 2

வேறு

சரத்தினுங் கடியவர் இனைய சாற்றலும்
அரித்திறல் முகத்தவன் வினவி ஆயிடை
விருத்தமுண் டேலது விளம்பு வீரென
உரைத்தனன் நன்றென ஒற்றர் கூறுவார். 3

நும்பியை வரையொடு நுதிகொள் வேலினால்
அம்புவி வரைப்பில்வந் தட்ட கந்தவேள்
நம்பதி முன்னவன் நகர்வந் தெய்தினான்
வெம்பது மன்முதல் தேவர் சூழவே. 4

வந்திடும் எல்லைபோய் மலைந்து மைப்பயப்
புந்திகொள் அமைச்சருஞ் சிறாரும் பொன்றினார்
உய்ந்தனன் இரணியன் உததி ஓடினான்
எந்தையங் கிருந்தனன் புதுமை ஈதென்றார். 5

தொழுந்துணைக் கையுடைத் தூதர் இன்னணம்
மொழிந்தது வினவலும் முனிவும் மானமும்
அழுந்திடு துயரமும் ஆகம் போர்ந்திட
எழுந்தனன் அவுணரோ டேகல் மேயினான். 6

முன்புறு கடையுறு மொய்த்த தூதரை
என்பெருஞ் சேனையைக் கொணர்திர் ஈண்டெனத்
தென்புலக் கோமகன் ஒற்றிற் செப்பலும்
மன்பெருந் தானைகள் வல்லை வந்தவே. 7

தூசிகொள் நாற்படை துவன்றிச் சேர்தலும்
ஆசுறும் அரிமுகத் தண்ணல் கண்ணுறீஇப்
பாசன மன்னவர் பாங்கர் சுற்றிடத்
தேசுடை மணிநெடுந் தேரொன் றேறினான். 8

* ஆறுநாள் சிங்கமுகாசுரன் வதை நிகழ்ந்ததாகும்

தாரொலி செய்தன தாள்வ யப்பரி
பேரொலி செய்தன பிறங்கு பூட்கைசேர்
காரொலி செய்தன கண்டை ஆர்த்தன
தேரொலி செய்தன தெறித்த சில்லியே. 9

முரட்டுடி சல்லிகை முரசங் காகளம்
உருட்டுறு சுரிமுகம் உடுக்கை துந்துபி
திரட்டுறு தண்ணுமை திமிலை யாதிகள்
இரட்டிய கேதனம் எங்கும் ஈண்டிற்றே. 10

கழுங்குறான் மால்கரி புரவி தானவர்
அழுங்குறு தேர்நிரை அனிகம் வானமே
வழுங்குறு நெறியதா வலிதிற் சென்றன
முழங்கில பெயர்கில முகில்கள் அஞ்சியே. 11

எயிது தன்மையின் ஈண்டு தானைகள்
பாயின சென்றிடப் பரிதி போலொளிர்
ஆயிர மவுலியன அவுணர் நாயகன்
சேயுயர் விசும்பினில் எழுந்து சென்றனன். 12

கன்னலொன் றளவையில் ககனத் தாற்றினால்
சென்னிகள் பலவுடைச் சீய மாமுகன்
மன்னவன் உறைதரு மகேந்தி ரப்புரந்
துன்னினன் வெருவியே சுரர்கள் ஓடவே. 13

அடைத்தலை நீங்கிய அம்பொற் கோநகர்க்
கடைத்தலை வந்தனன் கனகத் தேரொரீஇப்
படைத்தலை மன்னவர் பரவ உள்புகாக்
கிடைத்தலை மேயினன் கெழுமு சூரவை. 14

அரசியல் புரிந்திடும் அவையை நண்ணிய
முரணுறு சிங்கமா முகத்தன் முன்னவன்
திருவடி மலர்களில் சென்னி தீண்டுறப்
பரிவொடு வணங்கினன் தொழுத பாணியான். 15

வணங்கிய தம்பியை மலர்க்கை தொட்டெடா
இணங்கிய மார்புறத் திறுகப் புல்லலும்
பிணங்கவர் வேலினாய் நினது செம்முகம்
உணங்கிய துற்றதென் உரைத்தியால் என்றான். 16

என்னலும் அவுணர்கோன் இளைய வன்றனை
முன்னுற இருத்தியே முரணின் மேலையோய்
என்னிடை யுற்றன இசைப்பன் கேளென
அன்னவன் உணர்வகை அறைதல் மேயினான். 17

அன்றுநீ போந்தபின் அயில்கொள் வேலினாற்
குன்றினை எறிந்திடு குமரன் என்பவன்

தன்றுணைச் சேனையுந் தானும் இங்கர்
சென்றனன் பாசறை சேர்ந்து வைகினன். 18

மற்றவன் சேனைகள் மலைய மைந்தர்கள்
இற்றனர் அமைச்சனும் இறந்து போயினன்
அற்றன தானையும் ஆட கப்பெயர்
உற்றவன் இரிந்தனன் உததி ஓடினன். 19

பொங்குளை அரிமுக புகுதி இன்னதால்
ரங்கையில் படையொடு சமரின் ஏகியே
அங்கவன் வலியினை யடர்த்து மீளுதி
இங்குனை விளித்தனன் இதனுக்கா வென்றான். 20

எஞ்சலில் சூரன்மற் றிதனைச் செப்பலும்
வெஞ்சின அரிமுக வீரன் தேர்வுறு
நெஞ்சினில் ஆகுலம் நிகழ முன்னவன்
செஞ்சரண் வீழ்ந்துநின் றிதனைச் செப்புவான். 21

மல்லலம் புயமுடை மைந்தர் தங்களைத்
தொல்லையில் அமைச்சரைச் சுற்றத் தோர்களை
எல்லவர் தம்மையும் இழந்து வைகினாய்
புல்லிது புல்லிதுன் புந்தி எண்ணமே 22

மூலமும் முடிவுமில் லாத மூர்த்தியைப்
பாலனென் றெண்ணினை படுவ தோர்ந்திலை
ஆலம தானதே ஐய என்மொழி
மேலையின் விதியையார் வெல்லும் நீரினர். 23

சென்றிடு புனலினைச் சிறைசெய் தாவதென்
இன்றினி ஏகியே எண்ண லாரெனத்
துன்றிய குழுவெலாந் துடைத்து நூங்கியே
நின்றிடு கின்றனன் நீயுங் காண்டியால். 24

கந்தனும் ஒருவனைக் கடக்கப் பெற்றிடின்
வந்துனைக் காண்பனால் மற்ற தில்லையேல்
அந்தம தடைவரால் ஆரும் ஐயநீ
புந்தியின் நினைந்தன புரிதியா லென்றான். 25

என்றுகை தொழுதுபின் இறையும் அவ்விடை
நின்றிலன் விடைகொடு நிருதன் ஏகியே
துன்றிய தானைகள் சூழ மற்றவண்
ஒன்றுதன் மந்திரத் துறையுள் எய்தினான். 26

போனக மேருவும் புடையிற் சூழ்வரும்
ஊனெனும் வரைகளும் உலப்பில் சோரிநீர்
தேனெடு பால்தயிர் தேற லாதிகள்
ஆனபல் கடல்களும் அயிறல் மேயினன். 27

வாசநீர் தோய்ந்திடு நரந்த மான்மதம்
பூசினன் பாளித மிரைபு னைந்தனன்
வீசுபன் மதுமலர் மிலைச்சு கின்றனன்
காசினி வரைப்பெலாங் கந்தஞ் சூழ்தர. 28

கலைந்தனன் பழையன கவினப் பூண்டனன்
வளந்தரு கின்றதோர் யாணர் மாண்கலன்
மிளிர்ந்திடு தினகரர் புணரி வீழ்ந்துழி
ஒளிர்ந்துடன் பலகதிர் உதிக்கு மாறுபோல். 29

படிதவிர் பருப்பதம் பத்து நூற்றினின்
முடிதொறும் இளம்பிறை முளைத்த வாறுபோல்
நெடுமைகொள் அரிமுகன் நெற்றி தோறும்வெண்
பொடிதனை அணிந்தனன் புனித மாயினன். 30

தண்டமும் நேமியுஞ் சங்கும் வன்றரக்
கொண்டதோர் சூலமுங் குலிசமே முதல்
அண்டர்தம் படைகளும் அன்னை ஈந்திடு
திண்டிறற் பாசமுஞ் செங்கை பற்றினான். 31

கைத்தலம் யாவையுங் கதிர்கள் கான்றிட
எத்திறப் படைகளும் பின்னர் ஏந்துறப்
பத்துநூ றாயிரம் பரிகள் பூண்டதோர்
சித்திர மணிநெடுந் தேரில் ஏறினான். 32

தந்திரத் தலைவருந் தனயர் யாவருஞ்
சிந்துரத் தொகுதியுந் தேரும் மாக்களும்
இந்திரப் பெருவளம் யாவுஞ் சூழ்தர
மந்திரத் திருநகர் வாயில் எய்தினான். 33

வேறு

மேற்படு கேசரி வெம்முக வீரன்
மாற்படு கோநகர் வாய்தலின் மேவ
நாற்படை யானவும் நண்ணின வெம்போர்
ஏற்புடை வெள்ளமி லக்கம தன்றே. 34

வானவர் ஏற்றமும் [1]மண்ணவர் வாழ்வும்
தானவர் இன்னலும் நீக்கிய தக்கோர்
ஊனமில் செய்கையர் ஒள்ளெரி உண்ணுங்
கானமெ னப்பொலி காட்சியின் மிக்கோர். 35

கார்பயில் கின்ற கருத்தினர் காமன்
கூர்பயில் கின்ற கொடுங்கணை யுண்ணுந்
தார்பயில் தோளர் சமர்த்தொழில் செய்தே
மார்பக மன்றி வடுப்புனை யாதோர். 36

பாடம் -1 அன்னவர்

எண்ணமில் தொல்லுயிர் யாவும் அலைக்கும்
அண்ணலை அன்னவர் ஆரழல் காலுங்
கண்ணினர் வார்கழல் கட்டிய தாளார்
விண்ணினை யேனும் விழுங்கவும் வல்லோர். 37

நேருதிர் என்றெதிர் நேர்ந்தவ ராகங்
கூர்நுதி வேல்கொடு கூறுப டுத்துப்
பேருதி ரந்தனை பெய்துநி ரம்பா
வாரிதி யென்ன வகுத்திடும் வாயார். 38

தண்ட மழுப்படை கட்டை முசுண்டி
விண்டுயர் கொல்சிலை வேலெழு நாஞ்சில்
எண்டகு பல்படை யாவையும் ஏந்தி
அண்டமு டைந்த திரும்படி ஆர்த்தார். 39

அந்தர மாமுகி லாமென ஆர்க்குந்
தந்திகள் வீழ்த்துறு தானம தோடி
உந்திக ளாயுல வைக்கதி கொண்டு
முந்திய தூசியின் முன்னுறு கின்ற. 40

வேலைய தன்னவி லாழிய வன்னிக்
கோலம தான குரங்கொள் பதத்த
கால்விசை கொண்டன கந்துக ராசி
மாலுறு பூழியின் வான்புவி செய்வ. 41

சூழ்வரு தேரிடை துன்றுப தாகைக்
காழ்வரு கோனுதி கார்முகி லுந்தி
போழ்வன வாடுறு பூந்துகில் அங்கண்
ஆழ்வரு பூழைய டைத்தன அன்றே. 42

வரங்கெழு சூர்துணை மாய்ந்திடும் என்றே
உரங்கொடு முன்னம் உணர்ந்தன கொல்லோ
துரங்கம ழுங்கின தோல்புலம் புற்ற
இரங்கின பல்லியம் ஏங்கின தேர்கள். 43

கட்புலன் நாசிக வின்செவி துன்னப்
பட்டன பூழிப தாகையும் அற்றே
ஒட்டலர் விண்செல ஒட்டல ரென்று
விட்டனர் தூக்கம் விரைந்தனர் வெய்யோர். 44

தேரினர் ஓர்பலர் திண்டிறல் வாசி
ஊருநர் ஓர்பலர் ஓங்கிய வேழம்
பேருநர் ஓர்பலர் பேரடல் கொண்டு
பாரினர் ஓர்பல ராற்படை மள்ளர். 45

துங்கமில் சூர்துணை தொல்படை மன்னன்
அங்கவன் என்ன அரித்தலை கொண்டான்

பாடம்—1 மின்னுக்

மங்கல மாயவள் மாமகன் ஆடற்
சிங்கன் எனப்படு சீர்ப்பெய ருள்ளான். 46

போர்ப்படை கொண்டு புறம்படர் கின்ற
தேர்ப்படை காற்படை சிந்துரம் வாசித்
தார்ப்படை கொண்டு தடங்கட லென்ன
ஆர்ப்படை நெற்றிய ஞகி அகன்ருன். 47

நீள்வயிர் பேரி நிசாளம் உடுக்கை
தாளம் வழிப்படு தண்ணுமை தக்கை
காளம் வலம்புரி கைத்துடி யாதி
யாளி முகன்முன் அளப்பில ஆர்ப்ப. 48

ஆகிய தால்அமர் ஈதென யாமும்
ஏகுதும் உண்டி எமக்குள தென்று
மாக நெருங்கின வன்கழு கீட்டங்
காகம் வருந்திய காளிகள் கூளி. 49

வேறு

ஆழியை யொத்துய ரம்பொற் றேர்களில்
ஆழியை உண்டெழு புயல்தந் தார்த்தன
ஆழிய நிலத்துருண் டழுதி யோவெனு
ஆழியை வினவியே அமர்தல் போலுமால். 50

இவ்வகை சேனைகள் யாவும் ஏழ்பெரும்
பவ்வமும் ஒருவழி படர்ந்த தேயென
அவ்வயிற் போந்திட அமரை முன்னியே
தெவ்வடும் அரிமுகன் சேறல் மேயினன். 51

வேறு

சேரலர் ஆவிகொள் சீயமு கத்தோன்
பேரணி கத்தொடு போந்திடல் காணூஉ
வாரிர மேலவன் வாசவன வானோர்
ஆரும்வெ ரீஇயினர் அச்சம் அடைந்தார். 52

செய்ய கரத்தினர் சிந்தை வியர்த்தே
மெய்யல சுற்றிட மேற்றுகில் சோர
ஐயுறும் எல்லையில் ஆகம் இரைப்ப
ஒய்யென யாவரும் ஓடினர் போனர். 53

ஆவதொர் பாசறை ஆலய வைப்பில்
தேவர்கள் ஈண்டுறு சிற்சபை தன்னில்
மேவரு வேற்படை விண்ணவன் முன்போய்ப்
பூவடி தாழ்ந்து புகன்றிடு கின்ருர். 54

ஆயிர மான அகன்றலை கொண்டான்
ஆயிரம் ஆயிரம் அங்கை படைத்தான்

ஆயிர மேற்படும் அண்டமும் வென்றுள்
ஆயிரம் யோசனை யாவுயர் மெய்யான். 55

நெஞ்சில் எவர்க்கும் நினைப்பரி தாகும்
வஞ்சமும் மாயையின் வன்மையும் வல்லோன்
எஞ்சலில் வன்மையன் இவ்வுல கெல்லாந்
துஞ்சினும் ஆருயிர் துஞ்சுத லில்லோன். 56

ஓங்கல் இனங்கள் உவாத்தொகை நாகம்
பாங்கம ராமை பரித்திடல் மாற்றி
ஈங்குல கங்கள் எவற்றையும் ஓர்நாள்
ஆங்கொரு செங்கையில் ஆற்றிய தோல்லோன். 57

பாந்தள் புனைந்த பராபர மூர்த்தி
ஈந்தது மாற்றலர் எல்லையி லோரைக்
காய்ந்துயி ருண்டு கறைப்பெரு நீத்தந்
தோய்ந்திடு கின்றதொர் சூலம் எடுத்தான். 58

எண்டிசை மேதினி ஏழ்பில மேனை
விண்டல மன்னதன் மேற்படும் எல்லை
அண்டம னைத்தும் ஒரங்கையில் வாரி
உண்டுமிழ் கின்றதொர் வன்மையும் உள்ளோன். 59

தூக்கொரு பால்வலி தூங்குற ஓர்பால்
மேக்குயர் கோலென மேதினிப் பாங்கா
தேக்கெறி வேலைகள் சிந்தி விசும்பில்
தாக்குற வேநடை தந்திடு தாளான். 60

தண்ட மிதென்று தருக்கின் எடுததே
அண்ட கடாகம் அதன்புடை மோத
நுண்டுகள் ஆதலும் நொய்திது வென்றோ
விண்டொடு மேருவை மீளவும் வைத்தோன். 61

மாசறு நேமி வடாது புலத்தின்
ஆசுரம் என்னும் அகன்பதி வாழ்வோன்
வீசிடின் எவ்வுல கத்தையும் வீக்கும்
பாசம் இரண்டு பரித்திடு கையான். 62

துங்கம தாகிய சூர்துணை யானோன்
அங்கவ னிற்பெரி தாற்றல் படைத்தோன்
நங்களின் நங்களை நாளும் நலித்தோன்
சிங்கமு காசுர னாகிய தீயோன். 63

அந்தமி லாவனி கக்கடல் சூழும்
வெந்திற லோடு வியன்சமர் ஆற்ற
வந்தனன் மற்றவன் மன்னுயிர் மாற்றி
எந்தை அளித்தருள் எங்களை யென்றார். 64

அன்னதை ஓர்தலும் ஆறு முகேசன்
தன்னயல் நின்றிடு தாவறும் ஓதை
மன்னனை நோக்கிநம் வாலிய தேரை
முன்னிவண் உய்க்குதி யென்று மொழிந்தான். 65

தீட்டிய வேற்படை செங்கை படைத்தோன்
மாட்டுற நின்ற வயம்புனை மொய்ம்பன்
கேட்டனன் எந்தை கெழீஇயின முன்போய்த்
தாட்டுணை வீழ்ந்திது சாற்றுதல் உற்றான். 66

தந்நிகர் அற்ற சயம்புனை வீரர்
முன்னுறு தானைகள் மொய்த்திட யான்போய்
ஒன்னலன் ஆவியை உண்டிவண் மீள்வன்
என்னை விடுக்குதி எந்தையை யென்றான். 67

ஆண்டகை மூரலொ டம்மொழி கேளா
மாண்டிட வந்திடு மாற்றலன் வெம்போர்
வேண்டினை நன்று விடுத்தனம் முன்னீ
ஈண்டுள தானையொ டேகுதி யென்றான். 68

என்றலும் வீரன் எழுந்துகை கூப்பி
வென்றிகொள் சாரதர் மெய்க்கிளை சூழ
மன்றம கன்று மணிக்கடை நண்ணி
ஒன்றுதன் மாளிகை யூடு புகுந்தான். 69

நேர்முக மான நிசாசரர் தம்மேல்
கூர்முக வாளி குணிப்பில கோடி
ஓர்முக மாயுல வாதுமிழ் நீரால்
கார்முக மாயதொர் கார்முகங் கொண்டான். 70

போதுறழ் அங்குலி புட்டில்செ றித்தான்
கோதைய தொன்று கொடுங்கை பிணித்தான்
ஏதமில் சாலிகை யாக்கையின் இட்டான்
மேதகு தூணி வெரிந்புடை யாத்தான். 71

மிக்குறு தெய்வ வியன்படை முற்றும்
தொக்குற வேகொடு தும்பை தரித்துச்
செக்கரின் விஞ்சிய செய்யதொர் வையம்
புக்கனன் வல்லை புறங்கடை வந்தான். 72

எண்மர் இலக்கர்கள் இச்செயல் காணா
வண்மை தரும்படை மாட்சிமை எய்தித்
திண்மை யுறுந்தம தேர்களி லேறி
அண்மினர் வீரனை ஆர்ப்பொடு சூழ்ந்தார். 73

மேனிக மாயிர வெள்ளம தாகுஞ்
சேனை யெழுந்து செறிந்து பிறங்கல்

வானுயர் தாரு வயப்படை பற்றித்
தானவர் கேசரி தன்புடை வந்த. 74

எறிந்தன பல்லியம் ஈண்டிய தானை
செறிந்தன மாண்கொடி செற்றின பூழி
அறந்தலை நின்றவன் அன்னது நோக்கிப்
பறந்தலை ஒல்லை படர்ந்திட லுற்றான். 75

ஆரும்வி யப்புறும் ஆயிர வெள்ளம்
பாரிடர் தானை படைக்கிறை யானோர்
சாருறு கேளிர்கள் தன்னொடு செல்ல
வீரனடைந்தனன் வெஞ்சமர் எல்லை. 76

ஆனதொர் காலையில் ஆளரி வெய்யோன்
சேனையும் வந்து செறிந்தது பூதர்
தானையும் அங்கெதிர் சார்ந்தது கங்கை
வானதி சேர்தரும் வாரிதி யேபோல். 77

கோடு புலம்பின கொக்கரை ஆர்த்த
மோடுகொள் பேரி முழங்கின பீலிக்
காடு துழங்கின கண்டை கலித்த
ஆடுப தாகைகள் ஆர்த்தன அன்றே 78

தேரொலி செய்தன திண்டிறல் மாவின்
தாரொலி செய்தன தந்தியின் ஈட்டம்
பேரொலி செய்த பெருங்கட லோடும்
காரொலி செய்திடு காட்சிய தென்ன. 79

வேறு

அந்த வேலையின் முருகவேள் தானையோர் அணுகி
முந்து வெஞ்சமர் முயன்றனர் அதுகண்டு முனிந்து
சுந்த ரந்திகழ் சிங்கமா முகன்படைத் தொல்லோர்
தந்தி தேர்பரி யணியொடும் போர்செயச் சார்ந்தார். 80

தண்டம் ஓச்சினர் கணிச்சிகள் ஓச்சினர் தடக்கைப்
பிண்டி பாலங்கள் வீசினர் தோமரம் பெய்தார்
கொண்ட லாமெனத் தனித்தனர் வார்சிலை குனித்துத்
துண்ட வெங்கணை துரந்தனர் தானவத் தொகையோர். 81

விரைகள் வீசிய மலர்த்தரு வீசிய விண்டோய்
வரைகள் வீசிய தண்டெழு வீசிய மழுவின்
நிரைகள் வீசிய நேமியின் நிரந்தபல் வளனும்
திரைகள் வீசிய தாமெனப் பூதர்தஞ் சேனை. 82

வரங்கள் சிந்தினர் வன்மைகள் சிந்தினர் வயத்தாள்
கரங்கள் சிந்தினர் புயமலை சிந்தினர் கலன்சேர்
உரங்கள் சிந்தினர் மணிமுடி சிந்தினர் உருளுஞ்
சிரங்கள் சிந்தினர் அவுணரும் பூதரிற் சிலரும். 83

வருதி நீயெனத் தனித்தனி இகல்செயும் மறவோர்
கருதி யேயடுங் களத்தினில் அவருடல் காலும்
குருதி யோடியே எங்கணும் பரத்தலில் கொடுந்தேர்ப்
பரிதி யோடிய குடதிசை நிகர்த்தது படியே. 84

கொலைசெ றிந்திடும் பூதரும் அவுணரும் கொடும்போர்
நிலைசெ றிந்திடு களத்திடை நீடுசெந் நீரின்
அலைசெ றிந்தலுன் செறிந்தன அடுகளே வரத்து
மலைசெ றிந்தன செறிந்தன கழுகுடன் மண்ணை. 85

வேறு

வெற்புறழ் தகுவர் சேனை வெள்ளமுங் கணத்து ளாருந்
தற்பமொ டெதிர்ந்திவ் வாறு சமர்புரிந் திட்ட எல்லை
வற்புடன் அவுணன் தானை மள்ளர்வந் தடர்ப்ப மாய்ந்து
முற்படு கின்ற தூசிப் பூதர்கள் முரிய லுற்றார். 86

செல்லுறழ் பகுவாய் வீரர் சிதைந்துழிப் பூதர் தம்முட்
கல்லுறழ் மொய்ம்பிற் சிங்கன் கனன்றொரு தண்ட மேந்திப்
பல்லுறு தலைகள் சிந்தப் படிமிசை வீட்டிப் பானாள்
அல்லுறு மதிபோல் நேரும் அவுணரை யடர்த்துச் சென்றான். 87

அங்கவன் செல்லும் வேலை அவுணரில் ஒருவன் நேமி
சங்கொடு தரித்தோன அன்னான் தசமுக னென்னும் பேரோன்
எங்குநீ போதி நில்லென் றெதிருறச் சென்று வாகைச்
செங்கைவார் சிலையைக் கோட்டித் திருந்துநாண் ஒலிசெய் திட்டான். 88

வேறு

விட்டனன் மழையென விசிகம் ஆங்கவை
பட்டிடத் தண்டினாற் படியில் வீட்டியே
அட்டுபூந் தாரினன் அடியொன் றலவன்
இட்டதோர் கவசமும் இறுத்து நீக்கவே. 89

கூற்றுறழ் தசமுகன் கொடியன் ஆவியை
மாற்றுவன் இவனென வலிதின் ஓர்கதை
ஆற்றலின் விடுத்தலும் அரியின் பேரினன்
ஏற்றனன் மார்புதண் டிற்று வீழ்ந்ததே. 90

வீண்டது நோக்கியே வீர வீரனும்
ஈண்டிவ னேகொலென் றெண்ணி யாமினிக்
காண்டகும் வல்லையேற் காத்தி யீதெனா
ஆண்டொரு கணிச்சியை அவுணன் ஓச்சினான். 91

மாலொடு கடவுளர் மறுகத் தீயழற்
காலொடு போந்திடுங் கடுவின் வெம்மைபோல்
மேலுறு கணிச்சியை வீரன் செங்கையின்
பாலுறு தண்டினாற் படியில் வீட்டினான். 92

நீக்கினன் கணிச்சியை நெடிய தேர்கதை
போக்கினன் தன்னெடு போர்செய் கின்றவன்
தாக்கணங் கமர்சிலை தன்னைச் சின்னமே
ஆக்கினன் அவுணர்கள் அலக்கண் எய்தினர். 93

சீலமில் தசமுகன் செயிர்த்துக் காய்கனற்
கோலம தாகிய குந்தம் ஒன்றினை
ஆலம தெனவிட அரியின் பேரினன்
மேலுற வருவதை விரைந்து நோக்கினன். 94

பூங்கழல் புனைகழற் பூத நாயகன்
ஆங்கது காலைஓர் ஆழி மாப்படை
ஓங்கிய பரிதிபோல் உருட்டி னனரோ
பாங்குறு சாரதர் பலரும் போற்றவே. 95

விடுத்திடு கின்றதோர் வேலை யாழிபோய்ப்
படுத்தது தசமுகப் பதகன் தண்டமொன்
றெடுத்தது வீரலும் இமைப்பில் எய்தியே
அடற்புனை கழலினன் ஆகத் துற்றதே. 96

ஆகமேல் அடைதலும் அரியின் பேரினன்
மோகமேல் கொண்டுநெஞ் சோரி சோர்தர
மாகமேற் செம்புனல் மாரி கான்றிடு
மேகமே யாமென விளங்கி னனரோ 97

பரந்திழி குருதிநீர் பருப்ப தத்திடைப்
பிரிந்திடு நதியெனப் பெருக ஓடியே
அருந்திறல் தசமுக னகத் தேர்கையால்
விரைந்தனன் புடைத்தலும் வீழ்ந்து பொன்றினன். 98

ஐந்திரு தலையுடை அவுணன் மாய்தலுந்
தந்திர அவுணர்தந் தானை யாவையுங்
கந்தடு தோளுடைக் கணங்கள் மேற்செலா
முந்துறு பேரமர் முயல்வ தாயினர். 99

அவ்வழி இலக்கரில் அநகன் என்பவன்
மைவழி சிந்தையன் மடித்த வாயினன்
கைவழி வில்லினன் கடியன் சேனையை
எவ்வழி போதிரென் றெதிர்ந்து தாக்கினன். 100

வெலற்கரும் வில்லுமிழ் வெங்கண் வாளியால்
அலைக்குந ராகியே அடல்செய் மள்ளர்தந்
தலைக்குவை சிந்தியே தரையில் வீட்டியே
கலக்கினன் திரைக்கடல் கடைந்த மாலென. 101

ஆடியல் தானையான் அநகன் என்பவன்
சாடினன் திரிதலுந் தகுவர் யாவரும்

ஓடினர் அன்னதை உருத்து நோக்கினன்
பீடுறு துன்முகன் என்னும் பேரினன். 102

வேறு

தன்முன் ஓடிய அவுணரை நோக்கினர் தளரேல்
மின்மி னிக்குலங் கதிரினை வெல்லுமோ வெகுளின்
என்முன் நிற்பரோ பூதர்கள் பெருந்தொழில் இழந்தார்
நின்மின் நின்மினென் றுரைக்கவும் இறையுநின் றிலரால். 103

தானை பட்டன நோக்கினன் துன்முகன் தழல்மேல்
ஆனெய் பட்டென முனிந்தனன் பூதர்கள் அந்தோ
சேனை பட்டதென் றலமரத் துனிதசனன் சிலையைச்
சோனை பட்டன வாமென வயக்கணை சொரிந்தான். 104

சொரிந்த காலையிற் பூதரும் பேரமர் தொடங்கி
விரிந்த வெற்பொடு தருக்களும் படைகளும் விடுப்ப
எரிந்து போயின சிற்சில இற்றவுஞ் சிலவால்
நெரிந்து போயின சிற்சில எதிரெதிர் நெருக்க. 105

ஈறு செய்திலன் கணைமழை இவரொடும் யானே
மாறு கொள்வதுந் தனிமையில் அரிதென வலியோன்
ஊறு சேர்தரு மாயையால் ஒவ்வொர்பூ தர்க்கும்
நூறு நூறுருக் கொண்டுசாக் குற்றனன் நொடியில். 106

ஆய காலையில் துன்முகன் வடிவமும் அடருந்
தீயெ னக்கிளர் பூதரொடு செருச் செய்யும்
ஏய கொற்றமும் நோக்கினன் விம்மினன் வெகுண்டான்
மாயை கொல்லென உன்னியன் வாகையங் கதிரோன். 107

மாற்று கின்றதெப் படைக்கல மோவென மதியாத்
தேற்று கின்றதோ போதகப் பெரும்படை செலுத்தக்
காற்றின முன்னுறு பூளையின் உருவெலாங் கரப்பக்
கூற்ற மன்னரோர் துன்முகன் ஒருவனைக் கொதித்தான். 108

கொதித்த துன்முகன் தன்பெருஞ் சிலையினைக் கோட்டி
நுதித்த ளிக்கணை ஆயிரம் ஒருதொடை நூக்க
மதித்து வீரன்றன் ஒருபெருஞ் சிலையினை வாங்கிக்
கதித்த நோன்கணை ஆயிரஞ் சிதறினன் கடிதில். 109

ஆயி ரஞ்சரத் தாலவன் விட்டகோல் அறுத்துத்
தீய வன்தனிச் சிலையை யேழ் வாளியாற் சிந்தி
மேய சாலிகை தன்னையோர் பகழியால் வீட்டிக்
காயம் எங்கணும் அழுத்தினன் அளவைதீர் கணைகள். 110

வேறு

அழுந்திடு வடிக்கணை யாகம் போழ்தலும்
எழுந்திடு குருதிநீர் இறைத்துச் சென்றிடக்

கொழுந்தழல் புரைவதோர் கொடிய துன்முகன்
விழுந்தனன் மயங்கினன் விளிந்து ளானென. 111

ஊறிய குருதியன் உறுகண் எய்துவான்
தேறினன் ஒல்லையிற் செருவில் நேர்துமேல்
ஈறினி வந்திடும் இரிந்திட் டுய்வதே
ஆறெனா உன்னினன் அமருக் கஞ்சுவான். 112

சிந்தையின் வழிபடல் செய்து மாயையின்
மந்திரம் ஒன்றினை மரபின் உன்னுறா
எந்திரத் தேரினும் எழுந்து துன்முகன்
அந்தரத் தாற்றினால் அருவில் போயினான். 113

ஆயின காலையில் அடல்வெம் பூதரில்
தீயினை முருக்குறுஞ் சீற்றத் தோர்சிலர்
மாயையின் வலியினன் வஞ்சன் வல்லையிற்
போயினன் பற்றுதும் போதுவீர் என்றார். 114

ஆங்கது கேட்டிடும் ஆடல் வெய்யவன்
ஈங்கிது தவிருதிர் இகலுக் கஞ்சியே
நீங்கினன் ஒருவனை நெருக்கி ஆருயிர்
வாங்குதல் புகழ்தோ வலியின் பாலதோ. 115

ஓடினர் தம்மையும் உற்றுத் தாள்மலர்
சூடினர் தம்மையும் தொழுத கையராய்
வாடினர் தம்மையும் வலியி லோரையுஞ்
சாடினர் அல்லரோ நவைக்கட டங்குவார். 116

வீரரை அல்லரை வெகுள லீரெனப்
பேரடல் வெய்யவன் பேச அன்னது
காரிய மேயெனக் கருத்தில் உன்னியே
சாரதர் தொடர்ந்திடுந் தன்மை நீங்கினார். 117

வேறு

அந்நேர் காணா ஆளரி மாமுக அடல்வெய்யோன்
இன்னே நந்தந் தானைகள் எல்லாம் இரிவாகும்
பின்னே நிற்ற லாவதெ தென்னாப் பெயர்குற்றே
முன்னே சென்றான் பூதரை நோக்கி முனிகின்றான். 118

நந்தா ஆற்றற் சிங்கமு கத்தோன் அவன்நம்முன்
வந்தான் யாமே மாற்றுதும் அன்னான் வலியென்னாக்
கொந்தார் தாருச் சூழலும் வெற்புங் கொண்டேகி
முந்தா நின்ற பூதர்கள் வெம்போர் முயல்கின்றார். 119

மட்டார் தொங்கற் சிங்கமு கன்மேல் மதிதோய்வான்
எட்டா நின்ற வெற்புள யாவும் எறிகின்றார்
விட்டார் தாருச் சூழல் கணிச்சி வீசுற்றார்
தொட்டார் சூலந் தண்டெழு நாஞ்சில் சொரிகின்றார். 120

சொரியுங் காலைத் தீயெழ நோக்கிச் சுடர்வேலோன்
எரியுங் காலுங் காலவுயிர்ப்ப எதிர்செல்லாக்
கரியுந் தீயும் பூழிய தாகுங் ககனத்தே
திரியும் மீளும் மப்படை செய்யுஞ் செயலீதால். 121

அன்னோ அன்னோ நம்படை யெல்லாம் அடல்வீரன்
முன்னே செல்லா தியவுயிர்ப்பின் முடிவாமால்
பின்னே செய்வ தொன்றிலை யாம்போ யமர்செய்வ
தென்னோ என்னோ யாரினு மேலான் இவனென்றார். 122

என்றார் பூதர் சீற்றம் விளைத்தார் யாரும்போய்க்
குன்றாய் அங்க ணுற்றன யாவுங் குழுவுற்ற
வன்றா ருக்க ளானவும் மாண்ணைக் கொடுகொட்டுச்
சென்றார் ஆர்த்தார் சீயமுகன்மேற் செலவுய்த்தார். 123

வேறு

கைக்கொடு தாருக் கணங்கள் ஆர்த்துடன்
உய்க்குறு வரையெலாம் ஒருங்கு சென்றிடாத்
திக்குள வரைப்பெலாஞ் செறிந்து ஞாயிறு
மெய்க்கதிர் வழங்குறும் விசும்பு தூர்த்தவே. 124

கல்லகத் தொகுதிகள் ககனந் தூர்த்துழி
பல்லுடைச் செங்கதிர் இரவி மாய்ந்திட
ஒல்லெனத் திமிரம்வந் துற்றதும் நோக்கியே
அல்லெனக் குடம்பையுள் அடைவ புள்ளெலாம். 125

வெற்பின நிரைத்தலு மறைய வெய்யவன்
எற்படு முன்னரோ இரவி ஓடினன்
அற்புதம் அற்புதம் அடைந்த தம்புயன்
கற்பமென் றறிஞருங் கலக்கம் எய்தினர். 126

போற்றலன் தனமிசைப் பூதர் தூண்டிய
மாற்றரும் பதலைகள் மலிந்து வான்படர்
ஆற்றினை அடைதலும் அஞ்சி நின்றனன்
காற்றினும் விரைந்துசெல் கதிரின் பண்ணவன். 127

இன்புகா றவுணரால் இடருறுந் தனம்
அன்றியும் பூதரீண் டடுக்கல் வீசினர்
நின்றிடின் வருந்துதும் நிகழ்ச்சி தேரலாஞ்
சென்றிடல் துணிவெனத் தேவர் ஓடினர். 128

பெருவலி வீரர்கள் பெழுத்தச் சேண்படர்
பருவரை யிடையிடை பயின்று சுற்றிய
கருமுகில் உண்டநீர் கான்று தம்வயின்
உருமிடி எங்கணும் உகுத்து வீழ்ந்தவே. 129

வெதிர்படு சிலம்பினும் வழுக்கி வீழ்ந்திடும்
அதிர்குரல் அரியினம் அண்டச் செற்றின

எதிருறு தருவனை இனமென் றுன்னியே
முதிர்தரு காதலான் முன்னுற் றுறெலன. 130

மைம்மலை யிடைவிராய் வதிந்த மோட்டுடைக்
கைம்மலை அரற்றியே கவிழ்வ காசிபன்
செம்மலை அரியென நோக்கித் தேம்பியே
விம்மலை யெய்தியே வீழ்வ தென்னவே 131

பொற்றையின் மரங்களிற் பொதிந்த கேசரம்
வெற்றிகொள் அறுமுகன் றொடையின் மேவின
விட்டவர் தம்மை விட்டேதி லார்தமைப்
பற்றொடு கலந்திடு பரத்தை மாதர்போல். 132

எறிந்திடு வரைகள்தந் தம்மில் எற்றிடச்
செறிந்திடு தீங்கனல் சென்ற திக்கெலாம்
பொறிந்தன புகைந்தன பொரித லுற்றன
மறிந்தன உலந்தன மன்னு யிர்த்தொகை. 133

ஆயின பல்லியல் அடையப் பூதர்கள்
ஏயின குன்றமுந் தருவும் ஏகியே
சீயமா முகமுடைச் செல்வற் சேர்ந்தனன்
தூயவன் கயிலையைச் சூழ்ந்த கொண்டல்போல். 134

செடித்தலை எயினரில் திகழும் ஆயிரம்
முடித்தலை யான்மிசைப் பட்ட மொய்வரை
பொடித்தில இற்றில பூழி யாய்த்தில
படித்தலம் வீழ்ந்தன நொய்ய பான்மையால். 135

வேறு

துன்னற் பட்ட குன்றெவை யுஞ்சூர் துணையானோன்
மின்னற் பட்ட மெய்யிடை பட்டே வெற்பின்கட்
பன்னற் பட்ட தாரொடை வீழ்கின் றதுபாரா
இன்னற் பட்டார் பூதர்கள் வானோர் ஏங்குற்றார். 136

சீலம் புக்க பாரிடர் வெம்போர் செயல்கா ணூஉக்
கோலம் புக்க தேரிடை நின்றான் குப்புற்று
ஞாலம் புக்கான் பூதர்கள் தம்மை நலிதற்கோர்
ஆலம் புக்கா லென்ன நடந்தான் அடல்செய்வான். 137

பார்மேல் எற்றுஞ் சிற்சிலர் தம்மைப் பகைவிண்ணோர்
ஊர்மேல் எற்றுஞ் சிற்சிலர் தம்மை உயர்பானுத்
தேர்மேல் எற்றுஞ் சிற்சிலர் தம்மைத் திரைசேர்முந்
நீர்மேல் எற்றுஞ் சிற்சிலர் தம்மை நெடிதோச்சும். 138

பற்றா நிற்குஞ் சிலவரை மூரற் பகுவாயிற்
குற்றா நிற்குஞ் சிலவரை வாரிக் குழுவோடுஞ்
சுற்றா நிற்குஞ் சிலவரை அண்டச் சுவரின்கண்
எற்றா நிற்குஞ் சிலவரை அள்ளி எறிகிற்கும். 139

புண்ட ரிகன்கட் சிலவரை வீசும் பொருசெங்கைத்
தண்டத ரன்கட் சிலவரை வீசுஞ் சதவேள்வி
அண்டம தன்கட் சிலவரை வீசும் அகிலஞ்சூழ்
எண்டிசை யின்கட் சிலவரை வீசும் இகல்பேசும். 140

மாலெரி வைப்பிற் பலர்தமை வீசும் வானத்தில்
காலெரி வைப்பிற் பலர்தமை வீசும் கரைதீர்ந்த
வேலைகள் முற்றும் பலர்தமை வீசும் வியன்மிக்க
ஞாலம் அனைத்தும் பலர்தமை வீசும் நனிதூர்க்கும். 141

சிங்கங் கொண்ட மாமுகன் வீசுஞ் செறிவாலே
துங்கங் கொண்ட பார்முதல் விண்ணின் துணையுந்தான்
எங்கும் பூத மாயின அம்மா இதுகொண்டே
அங்கங் கெல்லாம் பூதம தெனரூர் அறிவுள்ளார். 142

மிதித்துக் கொல்லுஞ் சிற்சிலர் தம்மை மிசையுந்திப்
பதத்திற் கொல்லுஞ் சிற்சிலர் தம்மைப் படிவத்தைச்
சிதைத்துக் கொல்லுஞ் சிற்சிலர் தம்மைச் செல்லென்ன
உதைத்துக் கொல்லுஞ் சிற்சிலர் தம்மை உலவுற்றே. 143

விள்ளா நிற்குஞ் சிற்சிலர் சென்னி விரல்மேலால்
தள்ளா நிற்குஞ் சிற்சிலர் சென்னி தாமுற்றக்
கிள்ளா நிற்குஞ் சிற்சிலர் சென்னி கிளையோடு
மள்ளா நிற்குஞ் சிற்சிலர் சென்னி அடுகிற்கும். 144

தாக்கிற் கொல்லும் ஒருசிலர் தம்மைத தடிகின்ற
ஊக்கிற் கொல்லும் ஒருசிலர் தம்மை யுருமொத்த
வாக்கிற் கொல்லும் ஒருசிலர் தம்மை மருளுற்ற
நோக்கிற் கொல்லும் ஒருசிலர் தம்மை நொடிதன்னில். 145

வாரா நிற்கும் பாரிட ராசியை வாரிப்பின்
சேரா நிற்கும் வாய்தொறும் அண்டச் சேர்த்திட்டே
ஆரா நிற்கும் ஆர்ந்தபி னுக அகல்மோட்டைத்
தூரா நிற்குந் தூர்த்தபின் ஆடல் தொழில்செய்யும். 146

எழுவிற் கொல்லும் ஒருசிலர் தம்மை எரிகூர்வாய்
மழுவிற் கொல்லும் ஒருசிலர் தம்மை வயநாஞ்சில்
கொழுவிற் கொல்லும் ஒருசிலர் தம்மைக் கூர்சூலக்
கழுவிற் கொல்லும் ஒருசிலர் தம்மைக் கடிதோடி. 147

கரத்திற் கொல்லுஞ் சிலவரை நோன்கார் முகமுய்க்குஞ்
சரத்திற் கொல்லுஞ் சிலவரை அம்பொற் றண்டத்தின்
உரத்திற் கொல்லுஞ் சிலவரை அங்கண் ஒசிக்கின்ற
மரத்திற் கொல்லுஞ் சிலவரை மண்மீ தினில்வீட்டும். 148

தேர்மே லானோ விண்ணுல கானோ திசையானோ
பார்மே லானோ வார்கட லானோ பதுமத்தோன்

ஊர்மே லாரோ மேருவி னாரோ உயர்பூதர்
போர்மே லாரோ தீயவன் என்றார் புலவோர்கள். 149

அற்றார் தாள்கள் கைகள் இழந்தார் அடுதிண்டோள்
இற்றார் சென்னி சிந்தினர் துண்ட மிலரானார்
பெற்றார் மார்பம் விண்டனர் வீழ்ந்து புரள்கின்றார்.
செற்றார் தம்மை அட்டிடு பூதத் திறல்வீரர். 150

சொரியா நின்ற சோரியர் ஆற்றத் துயர்மேலார்
மரியா நின்றார் எண்ணில ரால்மற் றவர்தம்முட்
பிரியா நின்ற சென்னியர் பல்லோர் பெயர்வெய்தித்
திரியா நின்றார் ஆடுறு கின்ற செயல்கொண்டார். 151

கருவந் தெய்தும் ஆருயிர் முற்றுங் கவிழ்கின்ற
பருவந் தன்னில் தீயவன் உண்ணும் படியேபோற்
செருவந் துற்ற சீயமு கத்துத் திறல்மேலோன்
ஒருவன் தானே நின்றடு கின்றான் உலவாதான் 152

அந்நீ ராகிப் பூதரை வெய்யோன் அடுகாலைச்
செந்நீர் நீத்தம் ஆயிடை தோறுஞ் சென்றீண்டித்
தொன்னீர் வேலை புக்குவர் நீக்கித் துவராக்கி
முந்நீ ரென்னுந் தொன்மையை வேறாய் முடிவித்த. 153

ஆடா நின்றான் இத்திறம் வெய்யோன் அளவில்லார்
வீடா நின்றார் கண்டனர் வெம்பூ தர்க்கெல்லாங்
கேடா நின்றான் இங்கிவ னென்னாக் கிளையோடும்
ஓடா நின்றார் வானவ ரெல்லாம் உலைவுற்றார். 154

துன்னா நின்ற தொன்மரம் வெற்பின் தொகைவீசி
முன்னா குற்ற பூதர்கள் யாரும் முடிவாகக்
கொன்னார் சிங்க மாமுகன் அட்டே குலவுற்று
மின்னார் செம்பொன் மேருவெ னுந்தேர் மிசைபுக்கான். 155

வேறு

அவ்வேலை யன்னான் அமர்செய் விளையாடல் பாரா
மைவேலை போல்வான் அழற்கண்ணன் மனங்கனன்று
செவ்வே யெதிர்புக் கரிமாமுகற் சீறி வெய்யோய்
இவ்வேலை உன்னை முடிப்பன் இகல் முற்றி என்றான். 156

என்றங் குரை செய்திடு பூதனை ஏந்தல் நோக்கி
ஒன்றுஞ்சிறி துன்னலை அச்சமும் முற்றி லாதாய்
நின்றிங்கிது கூறினை என்னின் நினக்கு நேரார்
நன்றுன்வலி என்றுநகைத்தனன் நாகர் அஞ்ச. 157

அன்னான்நகை செய்தது காண்டலும் ஆழி நாப்பட்
கொன்னார்தழ லென்னவெ குண்டனன் கூளி வேந்தன்
நின்னாடலை நீக்குவன் காணுதி நீயு மென்றோர்
மின்னார்கழு முட்படை ஆங்கவன் மீது விட்டான். 158

கூற்றனவன் ஏவவ ரும்படைக் கொள்கை நோக்கி
மாற்றனவ னேர்படை யும்வழங் காது நின்றான்
தோற்றனென வானவர் ஆர்த்தனர் சூல மார்பின்
ஏற்றனவனை மேற்படு கண்ட கத் திற்ற தன்றே. 159

உறுகின்றசூ லப்படை ஊற்றமும் ஓங்கல் மார்பத்
திறுகின்றதும் அங்கவன் நின்றதும் யாவும் நோக்கிப்
பொறுகின் றவரில் இவன்பெற்றது பேற தென்று
மறுகின்ற நெஞ்சன் ஒருகண்டிகை வல்லை உய்த்தான். 160

வேறு

உய்த்தலும் அனையதண் டொருமுற் றுலெனா
அத்தலை அரிமுகத் தவுணன் பாரதி
மெய்த்தலை கோடலும் வெகுண்டு நோக்கியே
கைத்தல மிருந்ததோர் கதையை ஏவினான். 161

மாவலி சேர்தரு மடங்கல் மாமுகன்
ஏவிய வெங்கதை இமைப்பிற் பூதர்கள்
காவலன் அகலமேற் கலந்து தாக்கிற்றால்
ஓவென அனையனும் உளம்வ ருந்தவே. 162

செயிரறத் திருத்திய செம்பொற் குன்றின்மேல்
வயிரமெய்ப் படையது வந்தற் றாலும்
அயிருறப் புனைகலன் ஆகங் கீண்டிட
உயிரினுக் கவ்வழி யுலைவு மிக்கதே. 163

தாக்கிய வேலையில் தழலின் நாட்டத்தான்
மூக்கினின் மார்பினின் முழுங்கு வாயினிற்
தேக்கிய குருதிநீர் சிந்து கின்றது
மேக்குயர் கனல்மழை விரித்த தாரைபோல். 164

மறந்தனன் தொல்லுணர் வெனினும் வன்திறல்
துறந்திலன் வெவ்வழல் சொரியுங் கண்ணினான்
சிறந்திடும் ஊபலில் திரிந்த தன்னுயிர்
இறந்திலன் அவற்கொரு கூற்றம் இன்மையால். 165

ஆரழன் முகத்தவன் அயர்வுற் றவ்வழிச்
சோர்வொடு நிற்றலுஞ் சூரன் பின்வரும்
வீரம துடையவன் வேறொர் பாகனைத்
தேரிடை நிறுவினன் சேறல் மேயினான். 166

வேறு

மூண்டமர் இயற்றச் சீய முகத்தவன் வரலும் நோக்கித்
தூண்டிய வெகுளி மேலோன் சுமாலியென் றுரைக்குந் தொல்லோன்
நீண்டிடு மேரு வென்ன நிவந்ததோர் அடுக்கல் தன்னைக்
கீண்டரி முகன்மேற் செல்லக் கிளர்ந்தனன் வீசி ஆர்த்தான். 167

மற்றவன் விடுத்த குன்றை வாளரி முகத்து வீரன்
பற்றினன் ஒருதன் கையால் பக்கென மீட்டும் உந்தப்
பொற்றட மார்பில் தாக்கப் புலம்பியே சுமாலி யென்பான்
செற்றமும் தானு மாகச் செயலற்று நிலத்தன் ஆனான். 168

நிலந்தனில் சுமாலி வீழ நெஞ்சினம் திருகி அங்கைத்
தலந்தனில் கதையொன் றேந்தித் தண்டிபோய் அவுணன் தேரில்
கலந்தவன் உரத்தில் செல்லப் புடைத்தலும் காரந் தன்னில்
புலந்தவன் தனக்குக் காட்டும் உணர்வெனப் பொடித்த தன்றே. 169

பொடித்தலும் வயிரத் தண்டம் பூதரின் முதல்வன் பொங்கிக்
கொடித்தடந் தேர்மேல் நின்ற கோளரி முகத்தன் தன்மேல்
இடித்தெனக் கையால் ஏற்று பரியெலா நசைப்புத் தன்னோர்
அடித்தலங் கொண்டு தள்ளி அமரர்கள் வெருவ ஆர்த்தான். 170

தாளினால் உந்தி விட்ட தண்டிதேர் எழுந்து மெல்ல
மீளுவான் அடுவ னென்னும் வெகுளியான் உயிர்ப்பு வீங்கி
யாளிபேர் வதனத் தண்ணல் ஆடக வயிரக் குன்றத்
தோளின்மேல் குப்புற் றேதன் னடிகொடு துகைக்கல் உற்றான். 171

ஆடிய தானை மன்னன் ஆயிரத் திரட்டி தோளும்
ஓடினன் துகைத்துத் தாளும் ஓய்ந்தனன் அவற்றை நோக்கி
நாடினன் திரியா நின்றான் நாகநீள் குடுமிக் குன்றில்
கோடுயர் பொதும்பர் தன்னிற் பாய்ந்திடும் குரங்கு போல்வான். 172

குரங்குளைக் குடுமிச் சூட்டுக் கோளரி முகத்து வெய்யோன்
கரங்களிற் பாயும் அங்கட் கலந்திடு படையிற் பாயுஞ்
சிரங்களிற் பாயும் மீளச் செவிதொறும் பாயும் பூந்தண்
மரங்களிற் பாய்ந்து செல்லும் மணிச்சிறை வண்டும் போன்றான். 173

செறிந்திடு கரமுந் தோளுஞ் சென்னியும் பூதன் செல்வ
தறிந்திலன் சிறியன் போலும் அரிமுகத் தவுணன் நம்மேல்
எறிந்துல வுற்றுச் சூழும் ஈகொலென் றெருத்தன் கையால்
சொறிந்தனன் சிறிது பின்னர்த் தண்டியைத் துடைத்து விட்டான். 174

ஒருதனிக் கரத்தால் தீயோன் உருட்டினன் துடைப்பத் தண்டி
பெரிதுநொந் தாற்றல் போகிப் பின்றினன் பெயர்ந்து போனான்
தெரிதரு பூதர் அஞ்சிச் சிந்தினர் செயலொன் றில்லார்
அரிதுசெய் தவமே அல்லால் ஆற்றல்பெற் றிடுவ துண்டோ. 175

பூதர்கள் இரிவு நோக்கிப் பொருதிறல் இலக்கத் தெட்டு
மேதகு வீரர் யாரும் வெய்யதேர் கடாவிச் சென்று
தீதறு சிலைகள் வாங்கிச் சீயமா முகவற் சுற்றித்
தாதவிழ் மலர்பெய் தென்னச் சரமழை பொழிதல் உற்றார். 176

பொழிந்திடு பகழி யெல்லாம் புகுந்திடு சுவடின் றாகி
அழிந்ததும் இன்றி முன்போல் அவன்புடை வீழ நோக்கி

ஒழிந்ததெம் மாற்ற லென்று உட்கினர் ஒருதன் தேரின்
இழிந்தனன் அவுணர் கோமான் இடிபடத் தெழித்துச் சென்றான். 177

எடுத்தனன் சிலவர் தேரை எறிந்தனன் ஒன்றோ டொன்றின்
அடித்தனன் சிலவர் தேரை அள்ளினன் அங்கை தன்னால்
ஒடித்தனன் சிலவர் தேரை உதைத்தனன் சிலவர் தேரைப்
பொடித்தனன் சிலவர் தேரைப் புதைத்தனன் சிலவர் தேரை. 178

இத்திற மடங்கல் வீரன் அடுதலும் இலக்கத் தெண்மர்
தத்தம துயிரே தாங்கித் தனுவொடு படைகள் மானம்
மெய்த்திறல் சிந்திச் சாய்ந்தார் மேவலன் தேர்மேற் புக்கான்
அத்தலை நின்ற வீர வாகுமற் றதனைக் கண்டான். 179

ஆளரி அனைய வீரன் அதுகண்டு பூதர் தம்முட்
கோளரி முகத்து வெய்யோன் கொன்றதோர் பாதி உண்டால்
தாளுடை வில்லி னோருஞ் சமரிடத் தழிந்தார் இந்த
நாளினின் முடியும் போலும் நம்பெரும் படையு மென்றான். 180

அடல்பெறு புயத்து வள்ளல் ஆடக வரைபோ லுள்ள
கொடுமர மான தொன்மைக் கோட்டினன் சினமேற் கொண்டான்
விடமுறு தறுகட் கேது விரைந்தொரு பாங்கர் புக்கு
நடுவெலாங் கவரத் தோன்று நாகிளங் கதிரே போல. 181

வாங்கிய சிலையிற் பூட்டி வடிக்கணை அநந்த கோடி
தூங்கலின் மழைகான் றென்ன உலப்புறான் சொரிந்து நிற்ப
ஆங்கெதிர் அடர்த்துப் போர்செய் அவுணர்தந் தலைகள் பாறத்
தாங்கிய படைகள் சிந்தித் தரைமிசைத் துணிந்து வீழ்ந்தார். 182

பரித்தொகை முழுதும் பட்ட பாழியந் தேர்கள் பட்ட
ஒருத்தலும் பிடியும் பட்ட உலப்பிலா அவுணர் பட்டார்
பெருத்தன பிணத்தின் குன்றம் பிறங்கின பேய்கள் மொய்த்த
திரைத்தெழு சோரி நீத்தந் தெண்டிரை மடுத்த தம்மா. 183

தேரெனப் பட்ட வீரர் திறமெனப் பட்ட மாவின்
பேரெனப் பட்ட யானைப் பெருக்கெனப் பட்ட தம்முட்
பேரிடைப் படாத எல்லாம் பொருதிரைக் குருதி வாரி
வீரனுக் குதவி யாக வேலையுள் உய்த்த தன்றே. 184

பேரியின் ஒலியும் தீய அவுணர்கள் பிடித்த வில்லின்
நாரியின் ஒலியும் சூழும் நாற்படை ஒலியும் மாண்ட
காரியின் ஒலியும் மோட்டுக் கணங்களின் ஒலியுஞ் செந்நீர்
வாரியின் ஒலியு மாகி அடுகளம் மலிந்த அன்றே. 185

மலைகளை அறுக்கும் வேலை வாள்களை அறுக்குஞ் செங்கைச்
சிலைகளை அறுக்கும் வெய்யோர் திண்டிறல் கொண்ட தோளின்
நிலைகளை அறுக்கும் மார்பின் நிரைகளை அறுக்குங் கோடி
தலைகளை அறுக்கும் அம்மா இளையவன் சரம தொன்றே. 186

காழுறும் அவுணர் சென்னி கரதல நெடுந்தோள் மார்பம்
வாழிய முருகன் தூதன் வாளிகள் வெளவி ஏகி
ஏழுள கடலும் நீங்கி எண்டிசைக் கிரிகள் தாவி
ஆழியங் கிரிபோழ்ந் தப்பால் அண்டமும் பிளந்து செல்லும். 187

கரண்டம தான செந்நீர் ஆற்றிடைக் கவிழ்ந்து மூழ்கித்
திரண்டவூன் வெளவி மீண்டு சிறகரை உதறு கின்ற
முரண்டகு வீரர் சென்னி மூளைபுக் களைந்து வாரிக்
குரண்டமீ தென்ன லான கருநிறக் கொடிக ளெல்லாம். 188

இவ்வகை அவுணர் தானை இறந்திட வீர வாகு
அவ்வயின் நின்று சென்றுங் கடுதலும் அதனைக் கண்டார்
தெவ்வரை முருக்கும் வைவேற் சியமா முகத்தன் மைந்தர்
ஐவரை வெல்லும் ஆற்றல் ஐம்பதிற் றிருவர் என்பார். 189

சினத்தனர் இதழைப் பல்லால் தின்றனர் நம்முன் வெம்போர்
வினைத்தொழில் இயற்று வானை வெய்தென அடுது மென்று
இனத்தொடு தேர்க டாவி ஏகியே வீரன் தன்மேல்
தனித்தனி வார்விற் கோட்டிச் சரமழை சிதற லுற்றார். 190

நூற்றுவர் ஒருங்கு நேர்ந்து நோன்றலைச் சிலைகள் வாங்கி
மேற்றிகழ் முகில்கான் றென்ன வீசிய விசிகந் தன்னை
ஆற்றல்சேர் வீரன் காணு அயிற்கணை அநந்த கோடி
காற்றெனத் துரந்து மாற்றிக் கடவுளர் புகழ ஆர்த்தான். 191

தொலைவுறும் அவுணன் மைந்தர் துண்ணெனக் கனன்று பின்னுங்
கொலையுடை நெடுங்கூர் வாளி கோடிகோ டிகள்நின் றுய்ப்ப
வலியுடை வீர வாகு மற்றவை மாற்றி அன்னோர்
சிலையொடு தேர்கள் தம்மைச் செஞ்சரந் தூண்டி வீழ்த்தான். 192

தேரொடு சிலைகள் மாயச் சியமா முகத்தன் மைந்தர்
வீரனை எதிர்ந்து வில்லால் வென்றிடல் அரிது போலுங்
கூருடை நுதிவாட் போரிற் கொல்லுதும் இவனை என்னுப்
பாரிடை வந்தோர் சூழ்ச்சி வகையினுற் பகர லுற்றார். 193

காட்புடைச் சிலையின் விஞ்சை கற்றதே அன்றி எம்போல்
வாட்படை பயின்றி லாய்கொல் வல்லையேல் அப்போர் செய்யச்
சேட்படை யன்றி எம்முன் சேர்தியால் வீர என்னுத்
தோட்புடை கொட்டி ஆர்த்தார் கூற்றனுந் துளக்கம் எய்த. 194

வன்றிறல் அவுணன் மைந்தர் உரையினை வள்ளல் கேளா
நன்றிது புகன்றீர் என்று நகைசெய்து நாதன் தந்த
மின்றிகழ் சுடர்வாள் கொண்டு விரைந்துகீழ்த் தலத்திற் பாய்ந்து
சென்றனன் அதனை நோக்கித் தேவரும் இடுக்கண் செய்தார். 195

வார்ந்திடு கழற்கால் வீரன் வாள்கொடு வரலும் நோக்கித்
தீர்ந்தனன் ஆவி இன்னே செகுக்கலாம் இவனை யென்னுக்

விரைசெய்தார் புனைந்து சீய வியன்பெருந் தவிசின் ஏற்றி
வரிசையோ டிந்திரற்கு மணிமுடி சூட்டி னூரால். 40

சுடர்த்தனி மவுலி தன்னைச் சூட்டலுந் துறக்கத் தண்ணல்
அடித்துணை பணிந்தார் வானோர் அனைவரும் ஆசி தன்னை
எடுத்தெடுத் தியம்ப லுற்றார் இருடிகள் அரம்பை மாதர்
நடித்தனர் விஞ்சை வேந்தர் நல்லியாழ் நவின்றி சைத்தார். 41

இந்திரன் அனைய காலை எம்பிரான் முன்னர் ஏகி
வந்தனை புரிந்து போற்றி வளமலி துறக்க நாடு
முந்துள அரசுஞ் சீரும் முழுதொருங் களித்தி எந்தாய்
உய்ந்தனன் இதன்மேல் உண்டோ ஊதியம் ஒருவர்க் கென்றான். 42

என்றலும் அருள்செய் தண்ணல் இந்நகர் அரசு போற்றி
நன்றிவண் இருத்தி என்று நாகர்கோன் தன்னை வைத்து
நின்றுள அமரர் தம்மை நிலைப்படும் இருக்கைக் கேவித்
தன்துணை அணங்குந் தானுந் தன்பெருங் கோயில் போந்தான் 43

நூறினெடில் அளவு சான்ற கூளியும் வயவர் யாரும்
வறியதோ ரணுவுஞ் செல்லா மாபெரால் வாயில் போற்ற
உறையுளின் இருக்கை நண்ணி ஒருபெருந் தலைவி யோடும்
அறுமுக வள்ளல் பல்வே றுடல்செய் திருந்தான் அன்றே. 44

தூவியந் தோகை மேலோன் துணைவியோ டிருந்த காலைப்
பூவினன் முதலோர் தத்தம் புக்கிடம் அமர்ந்தார் அன்றே
தேவர்கள் இறைவன் தானுஞ் சேயிழை சசியு மாக
மேவினன் இன்பந் துய்த்து விண்ணுல கரசு செய்தான் 45

இனைத்தியல் கின்ற எல்லை இந்திர வளனே அன்றி
அனைத்துல கத்து முள்ள ஆக்கமும் தாம்பெற் றென்ன
மனத்திடை உவகை கொண்டு மாநகர் இருக்கை புக்குத்
தனித்தனி அமரர் எல்லாஞ் சாறயர்ந் தமர்த லுற்றார். 46

ஆகத் திருவிருத்தம் - 349

# 4. கந்த வெற்புறு படலம்

—oo—

இப்படி சிலநாள் ஏக இதன்மிசை வைகல் ஒன்றில்
ஒப்பருங் கந்த வெற்பில் உறைவது கருதிச் செவ்வேள்
செப்புறழ் கொங்கை யோடுஞ் சினகரந் தணந்து செல்ல
அப்பரி சுணர்ந்து வேதா ஆதியர் யாரும் போந்தார். 1

பெருந்தகை யனைய காலைப் பிரமன்மால் முதலோர் யாரும்
விரைந்துதம் பதங்கள் செல்ல விடைபுரிந் தங்கண் வானத்

திருந்தர சியற்ற விண்ணோர்க் கிறைவனை நிறுவித் தெய்வத்
திருந்திழை அணங்கி னோடுஞ் சென்றுதன் தேரிற் புக்கான். 2

தேரிடைப் புகுந்த ஐயன் திறலுடை மொய்ம்பன் பாகாய்ப்
பாரிடைச் சென்று முட்கோல் பற்றினன் பணியா லுய்ப்பப்
போருடைச் சிலைவல் லோரும் பூதர்தங் கடலுஞ் சுற்றக்
காருடைக் களத்துப் புத்தேள் கயிலைமால் வரையிற் போந்தான். 3

போனதோர் காலை வையம் பொள்ளென இழிந்து முக்கண்
வானவன் தன்னை ஆயோ டடிகளை வணக்கஞ் செய்து
மேனதோர் கருணை யோடும் விடைபெறீஇ விண்ணு ளோர்கள்
சேனையந் தலைவன் கந்தச் சிலம்பினிற் கோயில் புக்கான். 4

புக்கதோர் குமர மூர்த்தி பொருதிறல் வயவர் யாருந்
தொக்கனர் பணியில் நிற்பத் தொல்படைக் கணங்கள் போற்ற
மைக்கருங் குவளை ஒண்கண் மடவர லோடு மேவி
மிக்குயர் மணிப்பீ டத்தில் வீற்றிருந் தருளி னானே. 5

[1]துய்யதோர் மறைக ளாலுந் துதித்திடற் கரிய செவ்வேள்
செய்யபே ரடிகள் வாழ்க சேவலும மயிலும் வாழ்க
வெய்யசூர் மார்பு கீண்ட வேற்படை வாழ்க அன்னான்
பொய்யில்சீ ரடியார் வாழ்க வாழ்கஇப் புவன மெல்லாம். 6

ஆகத் திருவிருத்தம் - 355

# 5. இந்திரபுரிப் படலம்

காசினி வியத்தகு கந்த வெற்பிடைத்
தேசுடை முருகவேள் சேர்ந்த செய்கையைப்
பேசினன் இங்கினிப் பிறங்கு பொன்னகர்
வாசவன் இயற்கையும் மற்றுங் கூறுகேன். 1

துண்ணென அவுணரைத் தொலைத்த வேற்படைப்
பண்ணவன் அருளினால் பலரும் போற்றிட
விண்ணர சியற்றிய வேந்தன் ஓர்பகல்
எண்ணினன் உளந்தனில் இனைய நீரதே. 2

பற்றலர் சிறுதொழில் பலவு மாற்றியே
உற்றதும் அளப்பிலா உகமொ ளித்தது
மற்றதன் இடையிடை வந்த தீமையும்
பெற்றிடு துன்பமும் பிறவும் உன்னினான். 3

பா-ம் 1 துய்யதா மறைகளாலுந் துதித்திட அரிய தான செய்யவேள் அடிகள்வாழ்க.

மறுத்தனன் சசியுடன் வைகும் வாழ்க்கையை
வெறுத்தனன் வெறுக்கையை வேந்தியற் கையுஞ்
செறுத்தனன் தவத்தினுற் சேர்வன் வீடெனுத்
துறத்தலை உன்னினன் துறக்க மேயினன். 4

இந்திரன் இயற்கையை எண்ணி வானவர்
மந்திரி யாகியும் மன்ன னாகியும்
அந்தண னாகியும் அமரும் பொன்னவன்
புந்தியில் ஈதொரு புணர்ப்பை உன்னினன். 5

உன்னிய மேலவன் உம்ப ருக்கெலாம்
மன்னவ னுழைதனில் வந்து வைகியே
கொன்னவில் வச்சிரங் கொண்ட பாணியாய்
இன்னன கேளென இயம்பல் மேயினன். 6

புன்மொழி லாகிய பொய்யும் வாய்மையாம்
ஒன்றொரு பெரும்பயன் உதவு மாயிடின் *
என்றனர் சுரகுரு இந்தி ரன்பதம்
நின்றிட ஈதொரு நிகழ்ச்சி கூறுவான். 7

வேறு

அன்பு நீங்கிய அவுணருக் கரசனுற் பட்ட
துன்ப மானதை உன்னியே துறக்கமேல் அரசும்
இன்ப வாழ்க்கையும் வெறுத்தனை இவைவெறுத் தனையேல்
பின்பு நோற்றுநீ ஆற்றலால் பெறும்பயன் யாதோ. 8

சிந்தை வெந்துயர் உழந்தவை நல்லரோ திருவும்
அந்த மில்பெரு வாழ்க்கையும் எய்துவர் அதுதான்
மைந்த வாழிகேள் நின்னள வன்றுகாண் மதிக்கின்
இந்த மூவுல கந்தனில் வழங்கிய இயற்கை. 9

ஓவ ருந்தவம் இயற்றிய முனிவரில் உலகத
தேவர் தங்களில் பாதலத் தோர்களிற் சிறந்த
மூவ ரென்றுபேர் பெற்றிடு முதல்வர்கள் தம்மில்
ஏவர் மங்கையர் முலைத்தலைப் போகம்விட் டிருந்தோர். 10

போன துன்பினுக் கஞ்சியே புகுந்தவித் திருவை
ஊன மாமெனத் துறந்துநீ தமியைநோற் றுழலின்
ஆன போதுறுந் துயரினுக் கவதியும் உண்டோ
கானல் நீந்திட வெருவியே கடல்புக வற்றே. 11

ஆக நோவுற வருத்தியே ஐம்புலன் அவித்து
மோக மாதியாம் மூவிரு குற்றமும் முருக்கி
யோகு செய்திடும் மேலையோர் பெறும்பயன் உரைக்கில்
போக மன்றிஒன் றில்லைகாண் எல்லைதீர் புகழோய். 12

* 'பொய்ம்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த, நன்மை பயக்கு மெனின்' என்னும் திருக்குறள் கருத்தினை இங்கு ஒப்பு நோக்குக.

காண்ட கும்புலன் ஒடுங்குமாங் கரணமும் இலையாம்
பூண்ட செய்கையும் ஒழியுமா மியாக்கையும் போமாம்
ஆண்டோர் பேரின்பம் உண்டென்பர் அதனையார் அறிந்தார்
கண்டு கண்டதே மெய்யென்பர் உலகுளோர் யாரும். 13

பொய்ம்மை உற்றிடு கானலைப் புனலென விரும்பிக்
கைம்மிசைக் கொண்ட அமிர்தினைக் கமருகுத் தாங்கு
மெய்ம்மை யிற்சிலர் உண்டெனும் வீடுபே றுன்னி
இம்மை யிற்பயன் இழக்குதி நன்றுநின் எண்ணம். 14

மங்கை மார்இடத் தின்பமே இன்பமற் றவரோ
டிங்கு வாழ்வுறும் வாழ்க்கையே இயல்புறும் வாழ்க்கை
அங்க வர்ப்பெறு செல்வமே செல்வம்ஆங் கவர்தங்
கொங்கை புல்குறு வறுமையே கொடியதோர் வறுமை. 15

மறுவி லாதவாள் மதிமுக மடந்தையர் புணர்ப்பைச்
சிறிய இன்பமென் றுரைசெய்வர் அன்னதன் சிறப்பை
அறிவ ரேயெனின் ஆங்கதே பேரின்ப மாகும்
இறைவ நீயது கேட்டியேல் மொழிகுவன் என்றான். 16

ஏமஞ் சான்றிடு சூரவன்மற் றிவையிவை இசைப்ப
நாமஞ் சான்றிடு குலிசமாப் படையினன் நகையா
ஓமஞ் சான்றிடு தீமுனர் இழுதென உடைந்து
காமஞ் சான்றிடும் உளத்தினாய் இனையன கழறும் 17

பொருந்து மாசினை அகற்றிநற் காட்சியைப் புரியும்
மருந்து போலுறு சூரநீ மடந்தையர் சிறப்புந்
திருந்து காமநல் லின்பமும் எனக்கருள் செய்யா
திருந்த காரண மென்கொலோ இன்றுகா றென்றான். 18

வேறு

வெற்றுட லத்தில் விழித்தொகை பெற்ற
சிற்றறி வோன்இவை செப்புத லோடும்
மற்றிவன் உள்ளம் மயங்கினன் என்னாக்
கற்றுணர் மந்திரி கட்டுரை செய்வான். 19

மாதர்கள் மேன்மைகள் மன்மத நன்னூல்
ஓதிடும் உண்மையை ஓர்ந்துணர் கின்ற
காதல் இலாவழி கட்டுரை செய்யார்
ஆதலின் ஐய அறைந்திலன் இந்நாள். 20

கோண்மதி யேகுடை யாவரு கோன்தன்
மாண்மதி நூலெனும் வான்கடல் முற்றும்
நீண்மதி யால்உணர்ந் தேன்அதன் நீர்மை
கேண்மதி யென்று கிளத்திடு கின்றான். 21

ஈறில வென்றும் இயம்பினர் பத்தே
நூறுடன் எட்டெனும் நாலும் நுவன்றார்

வேறும் இசைத்தனர் மெய்ச்சம யத்தார்
ஆறென ஓதினர் ஆங்கவை தம்முள். 22

சுதையமு தேயெனத் துய்த்திடு நீரார்க்
கிதமிக நல்குவ திம்மையின் முத்திக்
கதியருள் கிற்பது காமர் உலோகா
யதமென வேதெறி யொன்றுள தன்றே. 23

அச்சம யத்தலை யாற்றிடை நின்றோர்
எச்சமில் வீடுபெற் றின்புறு கின்றோர்
மெச்சியல் ஆடவர் மேலதை சவோர்
நச்சுறு கூர்விழி நாரியர் தாமே. 24

அம்மட வார்இய லானவும் அன்னோர்
தம்மை அடைந்திடு தன்மையும் மேவுஞ்
செம்மைகொ ளாடவர் செய்கையும் எல்லாம்
மெய்ம்மைய தாக விளம்பிடும் வேள்நூல். 25

சாதி இயற்கைகள் தத்துவம் மாந்தர்
தீதில் குணத்தொடு தேசம் அவத்தை
போது கருத்திவை ஆதிய பேர்வேள
வேதம் உரைக்கும் விழுப்பொருள் மாதோ. 26

வசைதவிர் மானினி மால்வட வைப்பேர்
இசையினி அத்தினி ஏந்திழை யோர்க்காம்
அசைவறு தொல்மர பாடவர் யார்க்குஞ்
சசன்இட பன்அசு வன்இவை தாமே 27

முன்னம் உரைத்திடும் மும்மர புக்குட்
கன்னியர் ஆடவர் காமர் குறிக்கு
மன்னிய ஆழமும் நீளமும் முற்றும்
இன்னன வென்றிட ஏற்ப தியற்கை 28

அந்தமில் தேவர் அருந்தவர் நாகர்
கந்தரு வத்தர் கணங்கெழு பூதர்
முந்தும் அரக்கர் இயக்கர் முரட்பேய
தந்திறன் ஆவது தத்துவ மாமே 29

எண்மைகொள் தத்துவ யாற்றிடை நின்ற
பெண்மைய ரைவளி பித்தென ஓதும்
வண்மைகொள் முக்குணம் மன்னினர் மற்றவ்
வுண்மை படைத்திடல் ஒண்குண னுமே. 30

வேறு

உருவும் வண்ணமும் ஓங்கும் செயற்கையும்
அரிவை மார்கள்தம் நாளும் அனையவுந்
தெரிய நாடித் தெளிந்தறி கிற்பரால்
மரபு நான்முதல் வான்குணத் திறமே. 31

ஏறு தேசந்தொ றீண்டிய மாதர்தம்
ஊறும் நீதியும் உள்ளமுஞ் செய்கையும்
வேறு வேறு வினவியெல் லோர்களுந்
தேற நிற்பது தேச இயற்கையே 32

தரித்த வாலை தருணி பிரவுடை
விருத்தை யாகும் வியன்பரு வங்களின்
உரைத்த காலமும் உள்ளத்தின் வேட்கையும்
பிரித்த றிந்திடப் பெற்றத வத்தையே. 33

கோல மாம்முக் குணத்தர்முப் பான்மையர்
நால்வர் எண்மராம் நாரியர் பற்றுற
ஏலும் ஆடவர் எய்துதற் கேற்றபல்
கால முந்தெரி கிற்பது காலமே 34

மக்கள் காமம் வடிவினில் வைகலும்
பக்கந் தோறும் இழிந்துயர் பான்மையால்
புக்க தோரிடை நாடிப் புரையொரீஇத்
தக்க செய்வதுஞ் சாற்றிய மேலதே. 35

பற்று ளோரையும் பற்றிலர் தம்மையும்
முற்று ளோரையும் முற்றிலர் தம்மையும்
மற்று ளோரையும் மாந்தர்கள் தேற்றுமால்
துற்ற செய்கை உளங்கொள் கருத்ததே. 36

வேறு

இங்கிவை ஆடவர் இயல்புஞ் சால்புறு
மங்கையர் பான்மையும் வகுத்த தன்னவர்
பொங்கிய புணர்வகை புணர்ச்சிக் கேற்பதோர்
அங்கிதம் பிறவுமேல் அறைய நின்றவே. 37

புல்லுதல் சுவைத்திடல் புணர்ந கக்குறி
பல்லுறல் மத்தனம் பயிலுந் தாடனம்
ஒல்லொலி கரணமோ டுவகை ஆகிய
எல்லையில் புணர்நிலைக் கிளைந்த என்பவே. 38

வேறு

விரைதலே சமந்தூக் கென்னும் வேகமும் உச்சம் நீசம்
புரைதவிர் சமமென் றேதும் பொருண்மையுங் குணத்திற் பற்றிப்
பரவும்ஐ வகையில் ஈரைம் பகுதியாற் பிறவாற் சேர்தல்
உரைதரு புணர்ச்சி யாகும் உபரியும் அனைய தொன்றே. 39

உறுத்தலே நெருக்கல் மெல்ல உரோசுதல் உறுதல் முன்னு
மறுத்தவிர் தருவு சூழ்ந்த வல்லியே மரமேற் கோடல்
செறித்தவெள் ளரிசி பாலார் தீம்புனல் செயிர்தீர் காட்சிப்
புறத்தி லோர்உறுப் புறுத்தல் புணர்ச்சியிற் புல்லற் பால. 40

வைத்தலே துடித்தல் ஒற்று மரபொப்பு விலங்கு சுற்றே
உத்தர மதுக்கல் உள்ளீ டோங்குசம் புடாதி தன்னால்
பத்துடன் ஒன்றும் ஏனைப் பல்வகை உறுப்பு நாடி
முத்திறத் தமிர்தம் உண்டல் முன்மொழி சுவைத்த லாமே. 41

சுரிதகம் எண்ணுட் டிங்கள் தூயமண் டலமே மஞ்ஞை
யிரலடி முயலின் புன்கால் நெய்தலின் இதழே வேங்கை
உருகெழு நகவி ரேகை உருவில்ஏழ் உறுப்பி லங்கும்
வரன்முறை நகத்தால் தீட்டல் வள்ளுகிர்க் குறிய தன்றே. 42

துவர்படு பவள மாலை சுனகழு டிகமே புனக்
கவரடி மணிபோழ் வட்டக் கடிகண்டப் பிரதமுற்றும்
இவைஅல பிறவும் போல இன்னமு துண்ட தானம்
அவைதமில் நெறியால் தந்தம் அழுத்தல் பற்குறிய தம்மா. 43

உரமுதல் ஐந்தில் ஐம்பால் உணர்தொழில் முறையால் ஏற்பப்
பொருவரு புணர்ச்சி வேலை புடைத்திடல் புடைப்ப தாகும்
கரிகர மாதி யாய கனங்குழை மகளிர் வெஃக
மருவிய வழிபா டன்றே மத்தனம் என்ப வல்லோர் 44

மயில்புற வன்னங் காடை வண்டு வானரஞ் செம்போத்துக்
குயிலென இசைக்கும் எட்டின குரலினை பயினறு காமர்
இயலுறு மகளிர் பாங்கர் எய்துழி இவையில் வேண்டுஞ்
செயல்வகை புரியு மாறு சிறந்தசீற் கார மாமே. 45

பாரியல் கிராமி யஞ்சீர்ப் பவுத்திக நாக பாரம்
ஏரியல் நாக ரீகம் இந்திரா ணிகமே கூர்மஞ்
சாரிதம் ஆய்தம் மூர்த்தஞ் சங்கிரா ணிகமண் டுகம்
பாரிரம் பிடிதஞ் சூலஞ் சுரும்பிதம் பதும பீடம். 46

எண்டகுஞ் சம்பு டம்வேட் டிதம்விசும் பிதமுற் புல்லம்
பிண்டிதம் பீடி தம்மே பிரேதுகை அநுபா தந்தான்
பண்டதங் கடக மத்த பத்மவா னஞ்ச மூர்த்தம்
தண்டகம் லளிதம் வேணுச் சாரிதஞ் சமவே தன்னம். 47

ஆடவஞ் சமபு டத்தோ டமர்பரி வர்த்த கஞ்சங்
காம கந்தேனு கம்மற் கட கம்ஜம் பதமே னானு
மாடமர் துகிலம் பீனம் ஆத்திக மேகூர்ப் பன்னம்
பீடிதோ ருகமம் பீதம் பீடிகை யோடு பின்னும். 48

ஒட்டுவிக் கிரம மேகோ யூதகம் என்னும் நாற்பான்
எட்டுள திறத்தி னானும் இவையல பிறவாற் றானும்
மட்டமர் குழலி னார்கள் மகிழ்தர மதனூல் தேறுஞ்
சிட்டர்கள் புணரும் பான்மை சித்திரக் கரண மாமே. 49

திணைநிலை மகளிர் தத்தந் திறங்களுஞ் சேர்தல் மாண்பும்
உணர்குல ரெனினும் மற்ற ஒண்தமு வதனுள் நின்ற

கணிகையிற் பரத்தை காமக் கன்னியர் ஒழிந்தோர் தம்மைப்
புணர்கையும் பிறவுந் தேர்தல் புலமையோர் கடனும் அன்றே. 50

முன்னுற மதன நூலின் முறையெலாந் தொகையிற் கூறி
அன்னதன் வகையுங் கூறி அகலமும் எடுத்துக் கூறிப்
பொன்னவன் இருத்த லோடும் புரந்தரன் அவற்றை ஓர்ந்து
கன்னியைப் புணருங் காமக் கவலைமேற் கருத்தை வைத்தான். 51

கொற்றவெங் குலிச வள்ளல் குரவனை இறைஞ்சி எந்தை
சொற்றிடு பான்மை யெல்லாந் துணிவது வாகக் கொண்டேன்
மற்றொரு பொருளும் வெஃகேன் வரம்பிலா இன்பந் தன்னைப்
பெற்றனன் போலும் என்னப் பெருமகிழ் வெய்திப் போனான். 52

வேறு

திரைசெறி கடலெனத் திளைக்கும் இன்பநூல்
உரைசெய்து பொன்னவன் உவப்பிற் போந்திட
விரைசெறி தொங்கலான் மேலைப் பொன்னகர்
அரசினை மதலைபால் ஆக்கி னானரோ. 53

விண்ணுல காளுறும் வேந்தி யற்கையை
அண்ணலஞ் சயந்தனுக் கருளி இந்திரன்
தண்ணறு மதிமுகச் சசியைக் கூடியே
எண்ணரும் போகமுற் றினிது வைகினான். 54

அலைகடல் அமிர்தினை வெறுக்கும் ஆயிழை
இலவிதழ் அமுதமே இனிதென் றுண்டிடுங்
கொலையயி லாவதுந் துறக்குங் கோல்வளை
முலையயி லாவது முயங்கி மேவுமே. 55

வெல்குறும் வலியுடை விருத்தி ரன்மிசைச்
செல்குறுந் தெய்வதத் தேரைச் சீறிடும்
நல்குறு நுசுப்பினை உடைய மங்கைதன்
அல்குலந் தேர்மிசை அமைந்து வைகுமே. 56

கருங்கடல் சூழ்புவி கவிழ்ந்து துன்புற
இரங்கிய இடிக்கொடி இகழ்ந்து காய்ந்திடும்
பொருங்கணை விழியுடைப் புலோம சைத்திரு
மருங்குல்மின் கொடியின்மேல் மகிழ்ச்சி கொள்ளுமே. 57

இயற்படு தவமுனி யாக்கை என்பினாற்
செயற்படு வச்சிரஞ் செங்கை நீத்திடு
மயிற்பெடை யன்னதோர் மடந்தை கண்ணெனும்
அயிற்படை சேர்ந்திட அதனைத் தாங்குமே. 58

இருள்நிற விசும்பினில் இடைய றாமலே
வருசிலை இரண்டையும் மறக்கு மாமலர்த்
திருநிகர் வனப்புடைத் தெய்வ மங்கைதன்
புருவவெஞ் சிலைகளே பொருளென் றுன்னுமால். 59

ஏந்தலம் புயலினை இகழும் ஏந்திழை
கூந்தலம் புயல்மிசை உவகை கூர்ந்திடும்
பூந்தரு வல்லியை முனியும் பூண்முலை
வாய்ந்திடும் உரோமமாம் வல்லி புல்லுமே. 60

இத்திறம் இந்திரன் இந்தி ராணிபால்
வைத்திடும் உளத்தினன் மறுமை எய்தினுங்
கைத்திடு கருத்தினன் காமத் தின்பமே
துய்த்தனன் மதனனால் துணிபு நாடியே. 61

வேறு

அன்னதோர் நாளில் ஓர்நாள் அமரர்கோன் ஆணை போற்றிப்
பொன்னகர் செங்கோல் ஓச்சிப் புரந்திடு சயந்தன் என்போன்
தன்னயல் வந்து வைகுந் தாபதர் அமரர் தம்முள்
முன்னுறு கின்ற ஆசான் முகனெதிர் நோக்கிச் சொல்வான். 62

எந்தைகேள் மலரோன் ஆதி இயம்பிய அமரர் யாரும்
அந்தமில் முனிவர் யாரும் ஆற்றல்வெஞ் சூரன் தன்னால்
வெந்துயர் உழந்து தொல்லை மேன்மையும் இழந்து தாழ
வந்தகா ரணமா தென்கொல் என்றலும் மறையோன் சொல்வான். 63

விண்ணவ ராயி னோர்க்கும் மேதகு முனிவர் யார்க்கும்
எண்ணமில் சூரன் தன்னால எய்திய தீமை யெல்லாம்
நண்ணலர் புரமுன் றட்ட நாதனை அன்றித் தக்கன்
பண்ணிய மகத்திற் புக்க பாவத்தால் விளைந்த தென்றான். 64

என்றலுஞ் சயந்தன் கேளா ஈதுகா ரணமேல் அந்தப்
புன்றொழில் தக்கன் வாழ்க்கை புரமெரி படுத்த தேவை
அன்றியே செய்த வேள்வி ஆயிடை நிகழ்ச்சி யாவும்
ஒன்றற உரைத்தல் வேண்டும் சிறியனேன் உணர்தற் கென்றான். 65

சயந்தனென் றுரைக்கும் வள்ளல் சாற்றிய துணரா ஆற்ற
வயந்தனை எய்தி வாழி மதலைகேள் இதனை என்னா
வியந்திடும் அகந்தை தன்னால் மிக்குறு தக்கன் காதை
நயந்தரு மொழியால் ஆசான் இத்திறம் நவிலல் உற்றான். 66

ஆகத் திருவிருத்தம் - 421

**தேவகாண்டம் முற்றுப்பெற்றது**

ஆகக் காண்டம் ஐந்துக்குத் திருவிருத்தம் - 8,278

கச்சியப்ப சிவாசாரியர் திருவடி வாழ்க



உ

செந்திலாண்டவன் துணை

# கந்த புராணச் சிற்றாராய்ச்சி*

## [யுத்த, தேவ காண்டங்கள்]

குறிப்பு: முதல் எண்-காண்டத்தின் எண், இரண்டாவது எண்-படலத்தின் எண்; மூன்றாவது எண்-பாட்டின் எண் [iv-8-216 என்பது நான்காவது காண்டத்தின் எட்டாவது படலத்தில் 216-ம் பாட்டு]

### 1. அருஞ் சொற்கள்—சொல்லாட்சிகள் முதலியன

அகலம்-விரிந்த உரை-பெருமை iv-8-216
அங்கத இறை-ஆதிசேடன்-iv-13-55
அங்குலி-மோதிரம்-iv-3-23; 12-71
அடலை-சாம்பல்-iv-13-256
அந்தில்-அசைச்சொல்-iv-10-29
அவ்வை-தாய்-iv-5-3
அன்னுழி-அப்பொழுது-v-1-215
ஆதபத்திரம்-குடை-v-1-6
ஆந்தரங்கம்-ரகசியம்-iv-11-11
ஆவலங்கொட்டி-ஆர்த்து வாய் கொட்டுதல்-iv-11-132, 12-438 13-165
உகண்ட-உற்சாகம் உள்ள-iv-1-61
உண்டை-படைவகுப்பு-iv-10-79
உத்துங்கம்-உயர்ச்சி-iv-12-475
உது(அது,இது,உது)-iv-16-11
எங்கை-என் தங்கை-v-2-136
எம்மையும்-எப்பிறப்பும்-v-2-9
ஓதி-ஞானம்-iv-13-459
ககுபம்-திசை-iv-3-217
ககேசன்-சூரியன்-iv-4-163
கடுத்தலை-வாள்-iv-10-68
கண்டதுண்டமதாக்கினன-iv-3-210
கந்திகள்-வாசனைப்பொருள்கள் iv-16-32
கம்புள்-நீர்ப்பறவை-iv-12-256
காரண்டம்-நீர்க்காக்கை-iv-12-255
கரவாளம்-கைவாள்-iv-11-131
கரிசம்-சுரதலீலைவகை-v-5-44
கரிசனம்-யானைக்கோடு-v-2-87
கள்வன்-முசு-v-2-38
காடி-கழுத்து-iv-13-136
காரி-இந்திரன்-iv-13-66
கிருத்திமத்தவர்-பூதர்கள்-iv-8-80
கிருத்திமம்-பூதம்-iv-7-86
குடிஞை-நதி-iv-3-175
குயவரி-புலி-iv-6-23
குரங்கு-வளைவு-iv-4-45
கேசரம்-வண்டு-iv-12-132
கைப்புடை-கைப்புட்டில்-iv-11-35
கோதை-(வில்லாளர் கையிற்பூணும் தோலுறை)-iv-3-23, 74; 4-10; 7-51; 12-71
சயந்தனம்-தேர்-iv-8-122
சனங்கள்-iv-1-34
சாலிகை-கவசம்-iv-8-22; 7-51
சிந்து-(குறளினும்சிறிது நெடியனும் மூன்றடி உயரம் உள்ளவன்)-iv-3-7
சில்லி-தேர்உருளை-iv-12-9
சின்னம்-சிறிதளவு-iv-8-129
சீற்காரம்-(மூச்சை உள் வாங்குதலால் எழும் ஒலி)-v-5-45

* இது சென்னை தணிகைமணி திரு வ. சு. செங்கல்வராயப்பிள்ளை M. A அவர்களால் எழுதப்பெற்றது.

## 2. உவமைகள்

## 3. அணிகள் —சுவைகள்

## 4. ஊர், மலை

### i ஊரும், இடமும்

### ii மலைகள்

அத்தமேல்கிரி-iv-13-172; v-2-146
அமுத சீத மந்த்ர கூடம் (இறந்தவர்களை எழுப்ப வல்லது)-iv-13-296, 299
உதய வெற்பு-iv-1-3; 3-37; 12-282, 289, 290, 291, 328, 355, 13-172
*எழுகிரி-iv-13-483

*இவை சூரனுக்கு அரணாயிருந்தவை

கந்தகிரி-v-4-1, 4; 5-1
மானசோத்தரகிரி-iv-8-214
மேரு-iv-1-8

"தக்கயாகப்பரணி"-5,170 தாழிசை; "எழுமலை பொடித்த கதிரிலை நெடு வேல்"-கல்லாடம் 3
"எழுகிரிகள் பிளந்து வீழ எறிந்த வேலா"-திருப்புகழ் 548

## 5. கணபதி

ஆனை வதனத்துக் காளை-iv-13-197
உவா-v-3-2
கண்ணுதற் களிறு-v-2-106
*கணபதி கடல் நீரை உறிஞ்சினது-v-2-106

*"மகர சலநிதி வைத்த துதிக்கர"-திருப்புகழ்—விநாயகர் துதி

"குறுமுனிபோற் கடலையெலாம் வாரித்துய்த்து"-சுழியற்புராணம்
"ஏழ்கடல் உண்ட கை"-சுழியல் பிள்ளைத்தமிழ்

[[illegible] - கோனேரியப்பர் - (உபதேச காண்டம்-கூர்மாவதாரச் சருக்கம் பாடல் 100) - பார்க்க.]

## 6. சிவபிரான்

அந்தகாசுரனைச் சங்கரித்தது-iv-7-12
ஆமையை (திருமாலின் கூர்மாவதாரத்தில்) அட்டு அதன் ஓட்டை அணிந்தது-iv-7-17
இந்திரனுடைய தோளை நெரித்தது-iv-7-16
கங்கையை அடக்கியது-iv-7-13
காமனை எரித்தது-iv-7-12
காலனை உதைத்தது-iv-7-13
தக்கன் யாகத்தை வீரபத்திரரால் அழித்தது-iv-7-14
திரிபுரத்தை எரித்தது-iv-7-12
திருமால் பிரமனைப் படைத்திட வேண்டி மேகமாகச் சிவபிரானைத் தாங்கினது (சிவபிரானுக்கு மேக வாகனமானது)-iv-13-502
திருவாலங்காட்டில் நடனமாடிக் காளியை அடக்கியது-iv-4-254, 265
நஞ்சம் உண்டது-iv-7-13
நரசிங்கத்தை (திருமாலின் நரசிம்மாவதாரத்தில்) அடக்கியது-iv-7-14
பஞ்சதசக்கிரீவரை அழித்தது-iv-7-16
பிரம கபாலத்தையும் தேவர் தலை ஓட்டையும் அணிந்தது-iv-7-17
பிரமன் சிரத்தை வடுகனாற் கொய்வித்தது-iv-7-15; 9-80;
புலியை அட்டது-தோலை உடுத்தது-iv-7-16
முயலகனை அடக்கி மிதித்தது-iv-7-18
யானையை அட்டது-தோலை உரித்தது-iv-7-16
வராகத்தை (திருமாலின் வராகாவதாரத்தில்) அட்டுக் கொம்பை அணிந்தது-iv-7-17

## 7. பார்வதி



## 8. முருகவேள்

முருகனைக் குறிக்கும் அரிய சொற்றொடர்கள்



## 9. தேவசேனை [தெய்வ யானையம்மையார்]

தேவசேனையைக் குறிக்கும் சொற்றொடர்கள்



விஷயங்கள் :



## 10. வேல்

வேல் ஒன்றே சூரனை ஈறு செய வல்லது iv-4-194

வேல் சூரன்விட்ட படைகளை விழுங்கினது-iv-4-296,298

வேலின் பெருமையை இரணியன் சூரனுக்கு உரைத்தல்-iv-7-31,32

வேலின் பெருமையை வீரவாகு தேவர் கூறுதல்-iv-5-212-214

வேற்படைக்கு அஞ்சி மாயையின் படை ஓடினது-iv-5-195

வேற்படையின் ஆணையால் திருமாலின் படை வீரகோளரியின் உயிரை உண்டு தொழிந்தது-iv-3-238

வேற்படையின் ஆற்றலைக்கண்டு சூரன் விம்மிதம் உற்றது-iv-4-299

வேற்படையை மால்படை ஆகிய படைகள் தொழுது பின் சென்றது-iv-5-191

## 11. முனிவர் (அகத்தியர்)

கடலை உண்டது-iv-2-22; 13-289

கிரவுஞ்சத்தைக் கைக் கணையால் தொளைத்தது-iv-11-66

முருகவேளிடம் மறை உபதேசம் பெற்றது-iv-13-87

## 12. திருவிளையாடற் சரிதம்

சங்கத்தார்கலகம் தீர்த்தது(உருத்திர சன்மராய்) iv-13-261

## 13. நூல்கள்

இறைவனூல்-iv-16-33

குமார தந்திரம்-iv-16-24

மதன நூல்-v-5-20, 21, 51, 61

## 14 நூலாசிரியர்

நூலாசிரியரின் பத்தி நிலையைக் காட்டும் பாடல்-v-2-231

## 15. விஷய ஆராய்ச்சி

அக்கினி முகாசுரன் சந்திரனைச் சிறையிலிட்டது-iv-8-4

அக்கினி முகாசுரனுடைய ஏவலில் வந்த காளியை வீரவாகு தேவர் வென்றது-iv-8-120

அக்கினி முகாசுரனுடைய வீரம்-iv-8-(1-5)

அசுரன் அசமுகன் பூதன் மதுமேல் விட்ட சக்கரம் மது சிராயுதனா யிருந்தமையால் அசமுகனையே அட்டது-iv-3-168, 69

அசுரன் சண்டனை பூதன் சிங்கன் அட்டது-iv-3-149

அசுரன் மாயன் ரத்தத்தைப் (பூதன்) நீலன் உண்டு கொன்றது-iv-3-135-6

அவுணர் திருமால் (மோகினியை)த் தொடர்ந்தது-v-2-104

இந்திர ஞாலத்தேர் சென்று அமுத மந்திர மலையைக் கொண்டு வந்ததும், அது வந்தவுடன் இறந்தவர் யாவரும் உயிர்பெற்று எழுந்ததும்-iv-13-300-301

## 16. வழக்கங்கள்

## 17. பழமொழிகள், நீதிகள், ஆட்சிக்கு உரிய அடிகள்

அசனி தன்னை யுணபணி விலக்க வற்றோ-iv-2-23

அரிது செய் தவமே அல்லால் ஆற்றல் பெற்றிடவ துண்டோ-iv-12-175

அரிமானேற்றை களிறெதிர் விலக்கிற் றுணடோ-iv-2-23

இழைத்திடும் விதியினை யாவர் நீங்கி னோர்-iv-5-7

ஈசன் தன்னை அடைந்தவர் மெய்யா அல்லாப் பேதையர் டாவரேனும் பிழைக்கலர்-iv-7-20

உருவுகண் டெள்ளா தாற்ற லுணா வதே யுணர்ச்சி-iv-5-136

எதிருண்டோ வலியர்க் கம்மா-iv-2-21

என்றுமிப் புகழே நிற்கும் இவ்வுடல் நிற்பதுண்டோ-iv-13-418

ஒன்றொரு பயனதனை உதவினோர் மனம், கன்றி ஒருவினை கருதிச் செய்வரேல், புன்றொழிலவர்க்கு முன் புரிந்த நன்றியே, கொன்றிடு மல்லது கூற்றும் வேண்டுமோ-iv-7-10

கழியை நீந்துதல கடலிற பாடதோ-iv-10-55

கள்ளினும் உளதுங்கால் கருத்தழிப் பதே-v-2-160

காமம் தன்னிற் புலந்தவன் தனக்குக் காட்டும் உணர்வெனப் பொடித்த தன்றே-iv-12-169

கானல் நீந்திட வெருவியே கடல்புக வற்றோ-v-5-11

கொல்லாது சீற்றம் இலதாயிகல் கொண்டொருதல் வெல்லாது கொல்லோ அரிதன்னையும் வேழ மெல்லாம்.iv-3-180

சாற்றிடில் தம்வினை தமமைச் சூழு மால்-v-1-14

சிறந்தார் நோக்கால் இருள்கெழு கரும்பொன் செம்பொன் ஆகிய இயற்கையேபோல்-iv.13-495

சிறுவ ரேதார் பருவப் பாலர் நீமொழி புகன்றரேனும் முறுவல்செய்திடுவ தன்றே முனிவரோ மூப்பின் பேலோர்-iv-11-31

சென்னியில் விதியை யாவராயினும் நீக்கதாருணடோ-iv-13-295

தங்களால் முடிவுறா தொன்மை முடியு மீதெனக் கொள்வது கயவர்தம் முறையே-iv-11-18

தவத்தினும பெரிதொன் றுண்டோ-iv-12-434

தன்னுயி ருறுதமேதா வினையிலை-iv-3-169

தனனினும உயர்ந்தா ரோடு பொரு திடற் சயமுண் டாமோ-iv-7-21

திகழ்ச்சி கொள் மேலவர் சிறுவர தமொடு....போரிடை சேர்வரே எனில். புகழ்ச்சிய திலலை.. வெலி னும இகழ்ச்சியின் பாலதாம-iv-4-396

நீருஞ் செயலை நினைந்தாவதென்-iv-3-183

நோவுறிற் செய்யுறு தவத்தினும சிறப்புண்டாங் கொல்லோ-iv-9-66

பிரான்தனி நெற்றி நாட்டத் தொரு சிறு பொறியே யன்றோ உலகெலாம் அடுவ தம்மா-iv-4-250

பிறந்தவர் இறக்கை திண்ணம்-iv-11-28

பிறது தவமே யன்றி வலியது பிறிதொன றுண்டோ-iv-13-488

புன்றொழிலாகிய பொய்யும் வாயமை யாம, ஒன்றொரு பெரும்பயன உதவுமாயிடின்-v-5-7

மகிழ்ச்சியீற்றினில் துன்புவந்தடைவ தொர் வழக்கன்றோ-iv-3-270

மிக்குயர் அறிஞரை மேவிற் கீழ்மை செய் மக்களு மேனறி அடைதல வாய்மையே-v-1-5

மின்மினிக் குலம் கதிரினை வெல்லுமோ—iv—12—103

மின்மினி கதிரினும் விளங்க வல்லதோ—iv—3—98

முற்பகலோர்பழி முடிக்கின் மற்றது பிற்பகல் தமக்குறும்—iv—4-365

மெய்வகை விதியை யாரேவென்றவர் —iv-11-30

மேலையின் விதியை யார் வெல்லு நீரினர்—iv—12—23

மைந்தனைப் பெறுகின்றது. தந்தை மாண்டுழி அந்தமில் கடனை ஆற்று தற்கே அன்றோ—iv—7—126

யாவருக்கும் தன்னால் வராத வினை யுளதோ—iv—11—166

வலியவர் தம்மையும் வரம்பின் மிக் குறின் மெலியவ ராயினும் வென்று போவரால்—iv—9—4

வனனிகொள் வெண்ணெயே போல் வலியழிந்துருகிற்று—iv—13—445

விதித திறந்தனை யாவரே வன்மை யால் வென்றோர்—iv—7—46

விதியைப் புந்தி விலக்குமோ—iv—2—23

வெங்கனற பொறி உணபரோ பசிப் பிணி மிக்னும்—iv—8—227

முற்றிற்று

---

உ

செந்திலாண்டவன் துணை

திருச்சிற்றம்பலம்

# செய்யுள் முதற் குறிப்பகராதி

# பிழை திருத்தம்

| பக்கம் | செய்யுள் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 2 | துன்னொள | துன்னொளா |
| 4 | 33 | மற்றோர் | மற்றொர் |
| 6 | 10 | அடலுன்னி | அடலுன்னிக் |
| 19 | 106 | எதிர்த்திடும் | எதிர்ந்திடும் |
| 31 | 223 | தெறித்து | தெறிந்து |
| 44 | 342 | கொர்மோ | கொர்அமோ |
| 46 | 360 | என்றிடல் | நின்றிடல் |
| 102 | 77 | சேண் நறி | சேண்நெறி |
| 108 | 130 | விரற் | வீரற் |
| 117 | 214 | கைம்மாறு | கைம்மா |
| ,, | 216 | துணையபி | துணையபி |
| 128 | 27 | அடைநதிட | அறைநதிட |
| 129 | 33 | உலைவறப் | உலைவுறப் |
| 132 | 62 | திசைதோறும | திசைதொறும் |
| 143 | 30 | மைநதற்கு | மைநதர்க்கு |
| 164 | 226 | ருநதுயிர் | ருநதுயர் |
| 170 | 41 | மறமைந்தாதன | மறமைநதர்கள் |
| 186 | 18 | ஒன்றை | தொன்றை |
| ,, | 24 | எனையர் | ஏனையர் |
| 196 | 120 | வீரர்தனில் | வீரநதனில் |
| 210 | 39 | நாஞுதில் | நாஞ்சில் |
| 211 | 50 | புயல்தந் | புயல்வந் |
| 219 | 126 | நிரைத்தனு | நிரத்தனு |
| 220 | 132 | விட்டவர் | விற்றவர் |
| 221 | 141 | காலெரி | காலெறி |
| 224 | 169 | நெஞ்சினம் | நெடுஞ்சினம |
| ,, | 172 | ஆடியா | ஆடியல் |
| 228 | 207 | இரக்க | இலக்க |
| 77 | 214 | ஈண்டுதம | மீண்டுதம் |
| 230 | 230 | இருந்ததனைச் | இருந்ததனைச் |
| 234 | 265 | மார்பைத | மார்பைப் |
| 242 | 345 | மன்னர் | மன்ளர் |
| 244 | 364 | சோர்த்தன | சோர்ந்தன |
| 245 | 368 | உறுதி | உததி |
| ,, | 373 | கனை | கனை |
| 248 | 400 | தெரிதான்ந | தெரிந்தான் |
| 260 | 34 | கன்னினும் | மன்னினும் |
| 262 | 55 | சொறியுங் | சொரியுங் |
| 263 | 60 | சுழல் | சூழல் |
| 264 | 71 | புனங்கள் | புலனங்கள் |

| | | | |
|---|---|---|---|
| 266 | 90 | செங்கைகள் உந | செங்கைகளுந |
| 270 | 137 | ளாகிய | ளாகி |
| 283 | 261 | உருத்திகொள் | அருத்திகொள் |
| 287 | 305 | கோதண்டமமு | கோதண்டமு |
| 288 | 312 | நின்றி | தின்றி |
| 302 | 444 | தாளும் | தாளு |
| 307 | 490 | நிருகூம் | திருகூ |
| 311 | 10 | வந்துநிநதேனை | வநதுதிநதோன் |
| ,, | 12 | மிக்க | மிகக் |
| 317 | 2 | சிர்தங்கிய | சிர்தயங்கிய |
| 324 | 35 | ஒருங்கு | வொருங்கு |
| 332 | 105 | ளென்னை | லென்னை |
| 334 | 125 | சேர்ந்த | சேர்த |
| 353 | 38 | அலரிப | அலரிற |
| 359 | 38 | ஆகிய | ஆதிய |
| 360 | 42 | லங்கும | லெங்குா |

அ

# Panniruthirumurai Publication Endowment in Memory of Sri-la-Sri Adi Kumaragurupara Swamigal Immovable property worth Rs. 50,000

This endowment is made by Sri-la-Sri Kasivasi Arulnandi Tambiran Swamigal Avergal, Sri Kasi Mutt, Tirupanandal, in memory of the great Scholar Sri ADI KUMARAGURUPARA SWAMIGAL who spread Tamil culture from Cape Comorin to the Himalayas in the 17th century, for propagating the twelve Thirumurais, 1 to 3 : sung by Tirugnanasambandamurthy Nayanar; 4 to 6: by Tirunavukkarasu Nayanar; 7: by Sundaramurthy Nayanar; 8: by Saint Manikkavachakar; 9: by Thirumaligai Thevar and Senthanar etc. 10: Thirumula Nayanar; 11: Seraman Perumal Nayanar and others; and 12: by Sekkilar. The object is to inculcate devotion for the Thirumurais in the student population and train them into good citizenship of the Bharat.

2. The property so endowed is detailed in the schedule hereto attached and consists of Acres 43, Cents 98, wet and dry lands etc. in Marathurai village, No 3 Marathurai vattam and a house and 15 cents dry in Tirupanandal village in Kumbakonam Taluk, Tanjore District and belonging to the Donar with patta and miras in his name. The value of the property is Rs 50,000 and the estimated annual income is about Rs. 2,500.

3. The said property is to be vested in Kumaragurupara Swamigal Mutt at Srivaikuntam, Tirunelveli District and it shall be administered by the Managing Trustee of the said Mutt as provided hereunder. The annual net income from the property i. e. excluding Government dues, establishment charges, maramat expenses etc. shall be utilised for the purpose mentioned in para 4 *infra*. The managing trustee of the said Kumaragurupara Swamigal Mutt shall be responsible for the safe and proper investment of the said funds and for making the same available for the regular and efficient conduct of the endowment.

4. The Managing Trustee of the said mutt at Srivaikuntam should arrange to have the twelve Thirumurais printed and published in their serial order or according to necessity arising at any time for a particular Thirumurai. When publishing each Thirumurai, the title sheet should contain a note that

the publication is made out of the endowment founded on 8—4—1950 by Sri-la-Sri Kasivasi Arulnandi Tambiran Swamigal Avl, Sri Kasi Mutt, Tirupanandal, in grateful memory of SRI ADI KUMARAGURUPARA SWAMIGAL. 25 (twenty five) copies of each publication should be sent free to the Donor and his Successors-in-interest. The other copies should be arranged to be widely distributed in sale at not more than the actual cost The sale proceeds of the books shall be added to the corpus of the fund with the Managing Trustee. It will be within the discretion of the Managing Trustee to supply copies free of cost to selected well known Libraries, (one copy to each library) serving the needs of lovers of Tamil literature and culture.

5. A regular account of receipt and expenditure shall be maintained by the said Managing Trustee, which shall be audited by a certified auditor every year. The managing trustee shall send to the Donar and his Successors-in-interest annually a copy of the audit report along with an account showing under different heads, the Thirumurais published, number of copies printed, freely distributed, sold and remaining on hand, the income received therefrom, the amount spent in publishing Thirumurais and the amount of sale proceeds added to the corpus of the fund with the managing trustee

6. The income from the property and the sale proceeds of the publication as shown above shall be utilised for the printing and publishing the above mentioned twelve Thirumurais only.

7. This endowment shall not be used or diverted for any purpose other than that for which it is provided as above, and shall be managed as above provided, by the present managing trustee of Sri Kumaragurupara Swamigal Mutt, and his successors (Managing trustee) being in perpetuty.

*Dated 8-4-1950.* *Sd. Kasivasi Arulnandi Tambiran.*

---

Registered at Tiruvidamarudur Sub Registrar's Office on General Stamp of Rs. 375 on 12—4—1950 as No. 794, Book No. 1, Volume No. 1002, pages 181—186.

உ

செந்திலாண்டவன் துணை

# காஞ்சிபுரத்தில்

# ஸ்ரீ கச்சியப்ப சிவாசாரியார் நினைவு

## அன்னம்பாலிப்பு - சேமவைப்பு ரூ. 7000/-

1. காஞ்சிபுரத்துச் சிவவேதியரும், குமரகோட்டத்து அருச்சகராயிருந்த காளத்தியப்ப சிவாசாரியரது தவப் புதல்வரும், தென்மொழி, வடமொழிக் கடல்களைக் கரைகண்டுணர்ந்தவரும், நவின்றோர்க் கினிமையும் நன்மொழிபுணர்த்தலும் நவையின்மையும் அமையக் கவி பாடலில் வல்ல அருட்புலமையாளரும், 10346 பாடல்களையுடைய அறுமுக முடையவோர் அமலன் மாக்கதை யாகிய கந்தபுராணம் பாடுவதற்குத் 'திகடசக்கர' என்று முருகப்பெருமானால் அடியெடுத்துக் கொடுக்கப்பெற்றவரும், புராண நன்னூலாகிய இந்நூலைக் குமரகோட்டத்தில் அரங்கேற்றுவதற்குத் தொண்டைமண்டலத்து இருபத்துநான்கு கோட்டகத்தாராலும் தந்தப் பல்லக்குச் சிவிகையும் தாங்கி வரப்பெற்ற பெருமையாளரும், புலவர் குழாம் மகிழ்ந்து போற்றச் 'சகாத்தம் எழுநூற்றின்மேலாய் இலகு கந்தபுராணம்' அரங்கேற்றிய வித்தாரகவியும், மாசித் திங்களில் மிருகசீரிட நாளில் சிவப்பேறு பெற்றவருமாகிய கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகளை நினைவுகூர்ந்து, அவர்கள் குலத்தில் உதித்த சிவவேதியர்களுக்கும், மற்றுமுள்ள சிவனடியார்களுக்கும் ஆண்டுதோறும் மாசி மிருகசீரிட நாளில் அன்னம்பாலித்தற் பொருட்டுத திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித்தம்பிரான் சுவாமிகள் அவர்களால் இந்நிதி நிறுவப்பெற்றது. இது காஞ்சிபுரத்தில் கச்சியப்ப சிவாசாரியார் நினைவு அன்னம் பாலிப்பு என்று பெயர்பெறும்.

2. இதற்குரிய மூலதனம் ரூ. 7000/- (ரூபாய் ஏழாயிரம்). இது ஆண்டொன்றுக்கு ரூ. 100க்கு ரூ. 3/- வீதம் வட்டிதரக்கூடிய சர்க்கார் கடன் பத்திரங்களாக உள்ளது. 3% கன்வர்ஷன் லோன்ஆப் 1946; சி ஏ. 131519 - ரூ. 5000; சி ஏ. 129808 ரூ. 1000; சி ஏ. 129809 - ரூ. 1000; ஆக ரூ. 7000. இந்நிதி நம்பேரிலும் நமக்குப் பின்வரும் உரிமையுள்ளவர் பேரிலும் இருந்துவரும்.

3. இம் மூலதனத்தினின்று கிடைக்கும் வட்டித் தொகையைக் கொண்டு காஞ்சிபுரத்தில் 'கருங்கடல் முருக்கி முத்திக் கரைதருகாந்த நூல்' அரங்கேற்றப்பெற்ற குமரகோட்டத்தில் ஆண்டுதோறும் மாசித் திங்கள் மிருகசீரிட நட்சத்திரம் கூடிய நாளில் சிவவேதியர்களுக்கும், சிவனடியார்களுக்கும் அன்னம் பாலிக்கப் பயன்படுத்தப் பெறும்.

4. ஆண்டுதோறும் கிடைக்கும் வட்டி வருமானத்திற்கு ஏற்பவும், கால விலைக்கு ஏற்பவும், தயாரிக்கப்பெறும் திட்ட ஜாப்தாவின் படி இவ்வன்னம் பாலிப்பு நடைபெறும்.

5. இத் தருமம் வேறு எம்முறையிலேயும் பயன்படுத்தப்பெற மாட்டாது. நம்மாலும் நமக்குப் பின்வரும் உரிமையுள்ளவர்களாலும் இத் தருமம் பரிபாலனஞ் செய்யப்பெற்றுவரும்.

Tirupanandal, 27—2—53. (Sd.) KASIVASI ARULNANDI TAMBIRAN

---

Registered at Tiruvadamarudhur Sub Registrar's office on 2—3—'53 as No. 21 Book No. 4 volume No. 44 pages 262-264.

செந்திலாண்டவன் துணை

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்துத் தலைவராக எழுந்தருளியிருக்கும்

## ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

*தமிழ்க்கல்வி, சைவசித்தாந்தம், தேவாரத் திருமுறைகள், இசைத் தமிழ், அன்னதானம், வைத்தியம் இவற்றின் அபிவிருத்திக்காகவும் பொது மக்களின் அனுகூலத்துக்காகவும் மனமுவந்து அமைத்திருக்கும் பேராறக் கட்டளைகள்.*

| தொடர் எண் | தரும விவரம் | மூலதனம் ரூபாய் |
|---|---|---|
| 1. | சிவஞானசித்தியார் உபந்நியாசக் கட்டளை அண்ணாமலைப் பல்கலைக் கழகம் | ... 15,000 |
| 2. | கொட்டையூரில் நடுத்தரக் கல்விச்சாலை ஏற்படுத்த | ... 11,500 |
| 3. | திருவாங்கூர் மகாராஜா தேவாரப்பரிசு | ... 5,000 |
| 4. | சேரமான் பெருமாள் தேவாரப் பரிசு, கொச்சி | ... 5,000 |
| 5. | மூவர் தேவாரப் பரிசு, சீகாழி, திருவாரூர், திருவையாறு, திருப்பனந்தாள், ஆடுதுறை | ... 10,000 |
| 6. | ஸ்ரீ காசிப் பல்கலைக் கழகத்தில் சைவசித்தாந்தப் போதகாசிரியர் நியமிக்க | ... 60,000 |
| 7. | அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் சைவசித்தாந்த உபகாரச் சம்பளம் அளிக்க | ... 30,000 |
| 8. | திருப்பனந்தாளில் தமிழ்க் கல்லூரி நிறுவ | ... 1,50,000 |
| 9. | இசைத் தமிழ்க் கல்விக்கு | .. 1,00,000 |
| 10. | திருப்பனந்தாளில் கால்நடை வைத்தியசாலை ஏற்படுத்தவும், குடந்தைக் கல்லூரியில் உபகாரச் சம்பளமளிக்கவும் | ... 20,000 |
| 11. | ஸ்ரீ காசியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு நாள் அன்னதானம் | ... 10,000 |
| 12. | இராமேசுவரத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாள் அன்னதானம் | ... 10,000 |
| 13. | திருநள்ளாற்றில் ஆவணி மூல அன்னதானம் | ... 3,000 |
| 14. | ஸ்ரீ காசியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு மார்கழி மாத அன்னதானம் | ... 17,000 |
| 15. | திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி மாணவர்கள் உணவு நிதி | ... 1,00,000 |
| 16. | திருப்பனந்தாளில் ஜன வைத்தியசாலை நிறுவ நிலப் பெறுமானம் | ... 66,000 |

| | | |
|---|---|---|
| 17. | திருப்பனந்தாள் மண்ணியாற்றங்கரையில் கேதார கட்டம் ... | 2,900 |
| 18. | திருப்பனந்தாள் மண்ணியாற்றங்கரையில் அரிச்சந்திரக் கட்டம் ... | 3,300 |
| 19. | கும்பகோணத்தில் மணிக்கூண்டு ... | 25,000 |
| 20. | தஞ்சையில் காச நோய் வைத்தியசாலை ... | 23,500 |
| 21. | ஸ்ரீ வைகுண்டம் ஸ்ரீ குமரகுருபரர் நினைவுநாள் அன்னதானம் ... | 9,000 |
| 22. | மைசூர் மகாராஜா தேவாரப் பரிசு ... | 5,000 |
| 23. | தருமை ஸ்ரீகுருஞானசம்பந்த சுவாமிகள் நினைவுத் தேவாரப் பரிசு, மாயூரம் .. | 5,000 |
| 24. | சென்னை விவேகாநந்தா கல்லூரியில் ராஜாஜி சைவ சித்தாந்தக் கட்டளை | 10,000 |
| 25. | ஸ்ரீ காசிப் பல்கலைக் கழகத்தில் சர். என். ராதாகிருஷ்ணை சைவ சித்தாந்தக் கட்டளை | 20,000 |
| 26 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுத் தேவாரப் பரிசு, ஸ்ரீவைகுண்டம் ... | 5,000 |
| 27. | மதுரைத் திருமலை நாயக்கர் தேவாரப் பரிசு . . | 10,000 |
| 28. | ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீவைகுண்டம், திருச்செந்தூர், திருநெல்வேலி மாணவிகட்கு .. | 1,00,000 |
| 29. | ஸ்ரீகாசியில் மகாத்மா காந்தியடிகள் நினைவு அன்ன தானம் . | 5,000 |
| 30. | ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீ காசி, மதுரை, குடந்தை மாணவிகட்கு . | 1,50,000 |
| 31. | டாக்டர் சாமிநாத ஐயர் நினைவுத் திருக்குறட் பரிசு, சென்னை . . | 3,500 |
| 32. | குடந்தையில் காந்தியடிகள் பசுப்பரிசு ... | 1,000 |
| 33. | காந்தியடிகள் நினைவு அரியநாயகிபுரத்தில் ஹரிஜன மாணவ உபகாரநிதி .. | 3,000 |
| 34. | ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நித்திய மகேசுவர பூசை ... | 10,000 |
| 35. | திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவர சுவாமிக்கு வெள்ளிக் கவசம் ... | 4,000 |
| 36. | விஷ்ணுபுரத்தில் ஹைஸ்கூல் படிப்பக நிதி ... | 1,000 |
| 37. | குடந்தையில் ராஜாஜி அபிராமி அந்தாதிப் பரிசு ... | 3,500 |
| 38. | திருநெல்வேலியில் ஸ்ரீ அரியநாயக முதலியார் நினைவு அபிராமி அந்தாதிப் பரிசு ... | 3,500 |
| 39. | திருப்பனந்தாளில் அப்பூதி அடிகள் நினைவு தண்ணீர்ப்பந்தல் தர்மம் ... | 3,500 |
| 40. | ஸ்ரீவைகுண்டத்தில் படிப்பக நிதி ... | 3,500 |

| | | | |
|---|---|---|---|
| 41. | சிதம்பரம் உயர்தரப் பாடசாலை மாணவர்களுக்கு உணவுநிதி | ... | 35,000 |
| 42. | சிதம்பரத்தில் மார்கழித் திருவாதிரை, ஆனி உத்தர நாட்களில் அன்னதானம் | ... | 12,000 |
| 43. | இராமேசுவரத்தில் ஆடி, தை அமாவாசைகளில் அன்னதானம் | ... | 3,500 |
| 44 | ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் நூல் நிலையக் கட்டிடம் | ... | 17,825 |
| 45. | பஞ்சாப் அகதிகளுக்கு நன்கொடை | ... | 5,000 |
| 46. | அரியநாயகிபுரத்தில் நூல் நிலைய நிதி | ... | 3,500 |
| 47. | ஸ்ரீகாசி கேதாரீசுவரர் கோயிலில் ஸ்ரீகுமாரசாமி அன்னதானம் | ... | 5,000 |
| 48. | ஸ்ரீவில்லிப்புத்தூரில் தேவாரப் பரிசு | ... | 8,500 |
| 49. | திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவர சுவாமி கோயிலில் மின்சார தீபம் போட | .. | 7,500 |
| 50. | காஞ்சியில் மூவர் தேவாரப் பரிசு | ... | 5,000 |
| 51. | திருவஞ்சைக்களத்தில் சேரமான் பெருமாள் நினைவு அன்னதானம் | .. | 7,000 |
| 52. | 28 வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீவைகுண்டம் உதவி நிதி | .. | 18,500 |
| 53. | 30 வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீகாசிப் பல்கலைக் கழகத்திற்கு நான்கு ஆண்டு மூலதனம் | .. | 28,000 |
| 54. | 28-வது ஸ்ரீசெந்திலாண்டவன் அன்னதானம் திருச்செந்தூர் உதவி மூலதனம் | | 15,500 |
| 55. | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் படிப்பகப் பராமரிப்புக்காகக் கட்டிடாரம் நிலமும் | | 15,000 |
| 56. | மாளவியாஜி பெயரால் கல்கத்தா, டெல்லி, அலகாபாத், லக்னோ, ஆக்ரா, அலிகார் முதலிய பல்கலைக் கழகங்களில் சைவ சித்தாந்த உபந்நியாசக் கட்டளை | ... | 5,000 |
| 57. | ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம்—சிதம்பரம், மதுரை, திருச்செந்தூர் | ... | 60,000 |
| 58. | திருப்பனந்தாள் மண்ணியாற்றங்கரையில் சோமேசர் ஸ்நான கட்டம் நிறுவ | ... | 2,275 |
| 59. | ஸ்ரீவைகுண்டத்தில் பெண்கள் உயர்நிலைப்பள்ளி நிறுவ | .. | 45,000 |
| 60. | ஸ்ரீவைகுண்டம் தேவார மாணவர்கள் காசியாத்திரை நிதி | ... | 5,000 |
| 61 | பனசைக் கல்லூரியில் ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் நினைவுப் பரிசு | .. | 5,000 |
| 62. | (6) ஸ்ரீகாசிப் பல்கலைக்கழகத்தில் சைவ சித்தாந்த நிதிக்கு அதிகப்படியாக அளித்தது | ... | 16,000 |
| 63. | 30-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் - மதுரை முதலாண்டு உதவி மூலதனம் | ... | 7,000 |

| | | |
|---|---|---|
| 64 | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர்நிலைப் பள்ளி மாணவிகள் ஹாஸ்டல் ஏற்படுத்த நன்செய் நிலக் கிரயம் . | 14,000 |
| 65. | 28-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீவைகுண்டம் வகையரு - திருநெல்வேலி இரண்டாண்டு உதவி மூலதனம் .. | 10,000 |
| 66. | 30-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீ காசி வகையரு - கும்பகோணம் முதலாண்டு உதவி மூலதனம்.. | 7,000 |
| 67. | ஸ்ரீ வைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப் பள்ளிக்கு நன்கொடை | 10,000 |
| 68. | ஸ்ரீ வைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடத்திற்கு அச்சகம் வாங்க நன்கொடை கட்டிடம் உள்பட ... | 27,975 |
| 69. | ஸ்ரீ வைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பெண்கள் உயர்நிலைப்பள்ளி மாணவிகளுக்கு உபகாரச் சம்பளம் அளிக்க நெல்லை ஜில்லா போர்டாரிடம் | 10,000 |
| 70. | ஸ்ரீ வைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப் பள்ளிக்கு விளையாட்டு இடம் வாங்க நன்கொடை | 8,000 |
| 71. | ஸ்ரீ காசியில் இந்தியக் குடியரசு தின அன்ன தானம் . | 10,000 |
| 72. | ஸ்ரீ வைகுண்டத்தில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு மாணவர்கள் உணவு நிதி .. | 1,50,000 |
| 73. | ஸ்ரீ வைகுண்டம் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் மடத்திற்குப் பன்னிரு திருமுறைகள் அச்சிட நிலைப் பெறுமானம் ... | 50,000 |
| 74 | சண்டேசுவர நாயனார் நினைவு தண்ணீர்ப்பந்தல் தருமம் திருவாப்பாடி . | 3,500 |
| 75. | காஞ்சிபுரத்தில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவு உபகாரச் சம்பள நிதி . | 7,000 |
| 76 | திருச்செந்தூரில் ஸ்ரீசெந்திலாண்டவன் தேவாரப்பரிசு நிதி.. | 5,000 |
| 77 | சென்னையில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு திருக்குறள் பதிப்பு நிதி .. | 35,000 |
| 78. | ஸ்ரீ வைகுண்டத்தில் மங்கையர்க்கரசியார் நினைவுப் பரிசு நிதி ... | 3,500 |
| 79 | கும்பகோணம் தாலூகா மேலச் சூரியமூலை கண்டியன் பழவாற்றின் மீது பாலம் கட்ட ... | 7,470 |
| 80. | ஸ்ரீ வைகுண்டத்தில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவுத் தண்ணீர்ப்பந்தல் தரும நிதி ... | 3,500 |
| 81. | பழுத்த தமிழ்ப் புலவர் காசியாத்திரை நிதி செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள் ... | 5,000 |
| 82. | திருச்செங்காட்டங்குடியில் சிறுத்தொண்டர் நினைவு அன்னதானம் ... | 7,000 |
| 83. | திருவஞ்சைக்களத்தில் ஸ்ரீ சேரமான் ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார் நினைவு வாசகசாலை நிறுவ ... | 5,000 |

| | | | |
|---|---|---|---|
| 84. | திருநாரையூரில் ஸ்ரீ நம்பியாண்டார் நம்பிகள் நினைவுத் திருமுறை நிதி | ... | 35,000 |
| 85. | இராமநாதபுரத்தில் ஸ்ரீ தாயுமானவர் சன்மார்க்க சங்க நூல் நிலைய நிதி | .. | 5,000 |
| 86. | லால்குடி ஸ்ரீ காரைக்கால் அம்மையார் நினைவு மாணவிகள் உபகாரச் சம்பள நிதி | | 15,000 |
| 87. | அவிநாசியில் முந்நூல் அணியும் கலியாண நிதி | ... | 5,000 |
| 88 | குடந்தையில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள நினைவு நீதிநெறி விளக்கப் பரிசு | ... | 5,000 |
| 89 | திருப்பூந்துருத்தியில் அப்பர் நினைவு அன்னம் பாலிப்பு | .. | 15,000 |
| 90 | திருநெல்வேலி ஜில்லாவில் ஸ்ரீ ஆதி குமரகுருபரசுவாமிகள் நினைவுத் தமிழ்ப் பரிசு | .. | 5,000 |
| 91 | ஸ்ரீ மாசிலாமணி தேசிக ஞான சம்பந்தர் நினைவுப் பரிசு ஸ்ரீவைகுண்டம் | ... | 8,500 |
| 92 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள நினைவு மார்கழி மாத அன்ன தானம் இராமேசுவரம் | ... | 8,500 |
| 93 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள நினைவு அன்னதானம்,சென்ன புரி அன்னதான சமாஜம், சென்னை | ... | 5,000 |
| 94. | காசியில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவு அன்ன தானம் | .. | 5,000 |
| 95. | திருச்செந்தூரில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னதானம் | .. | 5,000 |
| 96. | திருச்சிராப்பள்ளியில் ஸ்ரீ தாயுமான சுவாமிகள் நினைவுப் பரிசு நிதி | ... | 5,000 |
| 97. | திருநாரையூரில் ஸ்ரீ குருஞானசம்பந்தசுவாமிகள் நினைவுக் கட்டிடம் நிறுவ | ... | 5,600 |
| 98. | திருச்சிராப்பள்ளியில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நீதிநெறி விளக்கப் பரிசு | ... | 5,000 |
| 99 | தஞ்சை, கலைக்கூடத்திற்கு நன்கொடை | ... | 5,000 |
| 100. | மணிக்குடியில் கடலூர்க்கலயர் புனற்பந்தர் நிதி | .. | 8,500 |
| 101. | காசியில் ஸ்ரீ மாசிலாமணித் தேசிக ஞானசம்பந்த சுவாமிகள் நினைவு அன்னதானம் | ... | 5,000 |
| 102. | திருவாங்கூர்ப் பல்கலைக்கழகத்தில் திருவள்ளுவர் நினைவுப் பரிசு | ... | 5,000 |
| 103. | ஸ்ரீ காசியில் கமலை ஞானப்பிரகாசர் நினைவு அன்னம் பாலிப்பு | ... | 5,000 |
| 104. | திருச்செந்தூரில் ஐக்கிய வேளாள சங்கப் படிப்பக நிதி | ... | 5,000 |

| | | |
|---|---|---|
| 105. | காசியில் அப்பர் நினைவு அன்னம் பாலிப்பு நிதி ... | 7,000 |
| 106 | ஆடுதுறையில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர்நிலைப் பள்ளி நிதி ... | 30,000 |
| 107. | செந்திலாண்டவன் திருவருள் பாலிப்பு நிதி ... | 50,000 |
| 108. | திருச்செந்தூரில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு நித்திய மகேசுவர பூஜை நிதி ... | 12,000 |
| 109 | ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நீதி நெறி விளக்கப் பரிசு - திருச்செந்தூர் - ஸ்ரீவைகுண்டம் உயர்நிலைப்பள்ளிகளில் ... | 7,000 |
| 110 | ஸ்ரீ காசியில் கச்சியப்ப சிவாசாரியர் நினைவு அன்னம் பாலிப்பு - கார்த்திகை ... | 7,000 |
| 111. | சென்னைக் கல்லூரிகளில் ஸ்ரீ குருஞான சம்பந்த சுவாமிகள் நினைவு சிவபோகசாரம் பரிசு நிதி . | 5,000 |
| 112 | தஞ்சையில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவுத் திருவாசகப் பரிசு—சேம வைப்பு ... | 5,000 |
| 113. | மதுரையில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவுத் திருவாசகப் பரிசு—சேம வைப்பு ... | 5,000 |
| 114 | திருநாவுக்கரசர் தண்ணீர்ப்பந்தல் தருமநிதி தத்துவாஞ்சேரி ... | 3,500 |
| 115 | காஞ்சிபுரத்தில் கச்சியப்ப சிவாசாரியர் நினைவு அன்னம் பாலிப்பு ... | 7,000 |
| 116. | திருக்காளத்தியில் கண்ணப்பர் நினைவு அன்னம் பாலிப்பு ... | 5,000 |
| 117. | ஸ்ரீ காசியில் சுந்தரர் நினைவு ஆடி மாத அன்னம் பாலிப்பு சேம வைப்பு ... | 7,000 |
| 118. | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் சகல கலா வல்லி மாலைப் பரிசு - அரசினர் பெண்கள் உயர்நிலைப்பள்ளி, மாயூரம் ... | 1,000 |
| 119. | சிதம்பரத்தில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவுத் திருவாசகப் பரிசு ... | 5,000 |

---

திருச்சிராப்பள்ளி யுனைடெட் பிரிண்டர்ஸ் லிமிடெட், திருச்சிராப்பள்ளி.